# மங்கையர் மலர்

ANGAYAR MALAR
்டோபர் '92 ரூ. 6.





# ராசி நல்ல ராசி

"அம்மா! என் நெற்றிக்குத் திலகம் எப்படி இருக்கு சொல்லு!" ஜெயந்தி தனது அழகிய கண்களை விரித்துத் தன் தாயைக் கேட்ட போது வியப்புடன் திரும்பினாள் அந்தத்தாய். லேசான பவுடர் பூச்சுடன் பளபளத்த அந்த முகத்தில் என்றைக்கும் இல்லாத புதுமை திலகம்...! வழக்கத்திற்கு மாறாக காதில் வேறு டிசைன் மாட்டல்... உதட்டோரத்தில் வெட்கம் செய்து இருந்த வண்ணமாயம்....!

"என்னடி இது? திடீர் மாத்தமா இருக்கு? திலகம் எடுப்பாதான் இருக்கு?"

"எடுப்பா இருக்கோ இல்லையோ....

ரமணி ரங்கநாதன்

நாளைக்கு எல்லாத்தையுமே மாத்திப் போட்டு தான் டிரஸ் செய்யப்போறேன்! வட்டப் பொட்டு, ஜிமிக்கி, நீலக்கலர் எதுவுமே எனக்கு ராசியாகல்லே...! மூணாவது தடவையாக நாளைக்கு பெண் பார்க்க வருகிறவங்களும்...."



"சீ... அசடு மாதிரி பேசாதே! இந்த வரன் நிச்சயம் குதிர்ந்து விடும் பாரு! ஒவ்வொரு வீட்டிலே இன்னும் எத்தனையோ நடக்கிறது.... இதுக்கே அலுத்துக் கிறேயே...! ஆமாம் போகிற போக்கைப் பார்த்தால்... நாளைக்கு சொஜ்ஜி பஜ்ஜி கூட ராசியில்லேன்னு வேறு ஏதாவது பண்ணுன்னு சொல்லுவே போலிருக்கே....?"

யின் குரல் சொல்லி வைத்தது போல் வந்தது. அப்பப்பா...! இந்தப் பாட்டிக்கு நூறு வயசு தான்...! நினைத்தாலே வந்துவிடுகிறாள்!

"அட மேஜை எல்லாம் இடம் மாறியிருக்கு! கதவிலே எல்லாம் துணிகட்டியிருக்கு! ஏது...? ஜெயந்தியைப் பெண் பார்க்க யாராவது வராங்களா என்ன?"

"அம்மா.... வா... வா...! இதுக்குதான் உன்னை வரச் சொன்னேன்...! நாளைக்கு இந்த நேரம் பெண் பார்த்து எல்லாம் முடிந்து முடியும் தெரிஞ்சுடும்...! அருமையான இடம்! ஒரே பிள்ளை! நல்ல



பலாப்பழம், வாழைப்பழம், மாம்பழம், கொய்யாப்பழம், பைனாப்பிள் போன்ற எந்தப் பழங்கள் இருக்கிறதோ, அவற்றை எல்லாம் ஒரே அளவில் சிறு சிறு துண்டங்களாக வெட்டி, சிறிது பால்விட்டு வேகவிடவும். நன்றாக வெந்ததும் மசித்து அத்துடன் தேவையான அளவு வெல்லப் பொடி, சிறிது பொட்டுக்கடலை மாவு, வறுத்த பயத்தம்பருப்பு மாவு சிறிதளவையும் சேர்த்துப் பழக்கலவையில் தூவி கெட்டியானதும் ஏலப்பொடி தூவிக் கிளறி இறக்கி, ஆறியதும் உருட்டி வைத்துக் கொள்ளவும்.

ஒரு கப் மைதா மாவில் உப்புத் தூள் சேர்த்துத் தண்ணீர் விட்டு, பூரிக்குப் பிசைவது போல் கெட்டியாகப் பிசைந்து உருட்டி, வட்டமான பூரிகளாக இடவும். பின் அதன் நடுவில் பழக் கலவை உருண்டையை வைத்து மூடி, ஓரத்தை (மைதா பசையால்) ஒட்டவும். பின் இந்த சோமாசை எண்ணெயில் பொரிக்கவும்.

இந்தப் பழ சோமாசு மிகவும் நன்றாகவும், மாறுதலான சுவையுடனும் இருக்கும்.

- ஆர். பாலா

"சொல்றது என்ன? கட்டாயம் வேறு ஸ்வீட் தான் பண்ணணும்! ஏன் முந்திரி கேக் பண்ணி விடேன்! பண்றதுக்கு வறக்காம வருகிற உன் அம்மா.... அதான் என் பாட்டி. அவங்களும் வரவேண்டாம்! நீயே பண்ணிவிடு....!"

"ஜெயந்தி... முட்டாள் மாதிரி பேசாதே!" ஆத்திரத்தில் குறுக்கிட்டாள் அம்மா.

"என் அம்மாவை விட்டா எனக்குக் கூட மாட ஒத்தாசை செய்ய யாரு வருவான்னு நினைச்சே? ராசி ராசின்னு எதையாவது பைத்தியமாட்டம் உளறிண்டு இருக்காதே!"

"அடியே கமலா? எதுக்குக் கூப்பிட்டு அனுப்பினாயாம்...?" வாசலில் பாட்டி

உத்யோகம்..."

"கமலா...." - எதையோ சொல்ல வந்த பாட்டி ஆயாசமிருந்தியால் சுவரில் சாய்ந்த படி உட்கார்ந்து கொண்டாள். கண்கள் மட்டும் மகளையும் பேத்தியையும் மாறி மாறிப் பார்த்தன!

ஜெயந்திக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது சே.. என்ன பாட்டி இவள். இரண்டு தடவையும் இவள் செய்த சொஜ்ஜி பஜ்ஜிக்குத்தான் ராசியில்லேயே? ஜெயந்திக்குதான் என்ன குறை? அழகு படிப்பு சிறப்பாக செய்து கொடுக்க இளவயது பெற்றோர்கள்.... அப்படியிருந்தும் பெண் பார்த்து விட்டுப் போகிறவர்கள் ஏன் நல்ல பதிலை எழுதுவது இல்லை? இதை ராசியில்லாமல் வேறு எப்படி குறை

சொல்ல முடியும்? அம்மாவே எதற்கெடுத்தாலும் ராசி ராசின்னு பார்க்கிறவளாச்சே? இதை மட்டும் ஏன் யோசிக்கவில்லை? தாய் பாசம் கண்ணை மறைக்கிறதோ? ஜெயந்திக்குத் தன் பாட்டியிடம் ஓடிச் சென்று 'தயை செய்து நாளை பெண் பார்க்கும் நிகழ்ச்சிக்கு வராமல் உங்க பிள்ளையிடமே இருங்க நாளைக்கு ஒரு நாள் மட்டும்.....!'' என்று கும்பிட்டுக் கேட்க வேணும் போல் இருந்தது.

''கமலா நானே சொல்லணும்னு இருந்தேன்! இந்தக் கல்யாணம் நிச்சயம் நடந்துடும் பாரேன்... நேத்து ஒரு அழகான கனவு கண்டேன்!''

''என்னம்மா அது கனவு?''

மாட்டேன். அவங்க இங்கே வர வும் கூடாது....!'' படபடத்தாள் அம்மா.

''கொஞ்சம் பொறுமையா கேளு கமலா! எனக்கு எத்தனையோ கனவுகள் அப்படியே பலிச்சிருக்கு! இதெல்லாம் உனக்குத் தெரிந்தது தானே? உன் பெண் கல்யாணம் நடக்கணும்னா நிச்சியம் உன் மாமியாரை நீ அழைச்சு வரத்தான் வேணும்! ஒரு நாள்... ஒரே ஒரு நாள் அவள் வரட்டும்! நீயும்... நன்றாக உபசாரம் பண்ணி அனுப்பிவிடு...! உன் வீட்டுக்காரர்தான் போய் போய் பார்த்துட்டு வாராரே! அவரிடம் சொல்லி எப்படியாவது நாளைக்கு இங்கே அவளை வர வழைக்கப் பாரு! நாளைக்கு உன் மாமி

அநேகமாக எல்லோருடைய வீடு களிலும் ஃப்ரிட்ஜ் இருக்கிறது. ஏலக் காயை பாட்டிலில் போட்டு அதில் வைத் தால் கலகலவென்றாகிவிடுகிறது. தோல் நீக்கிப் பொடி செய்தால் சீக்கிரம் மசிந்து விடுகிறது.

- பானுமதி





சிப்ஸ் செய்யும் கட்டரில் கோஸைச் சீவினால் பொரியல் பார்க்க அழகாக ஒரே சீராக இருப்பதுடன் சீக்கிரம் வதங்கி விடுவதால் கோஸ் செலவும் கொஞ்சம் குறையும்.

- பானுமதி

அம்மா ஆவலுடன் தன் அருமைத் தாயிடம் சென்று கேட்க அமர்ந்த போது தானும் அருகில் சென்று நின்று கொண் டாள் ஜெயந்தி.

''மிகவும் அழகான கனவு கமலா...! உன் பெண் ஜெயந்தி மாலையும் கழுத்து மாக பளபளன்னு கல்யாணப் பெண்ணாக உன் மாமியார் காலில் விழுந்து ஆசீர்வாதம் வாங்குகிறாப்போல....!''

''அம்மா....'' ஆத்திரத்துடன் குறுக்கிட் டாள் ஜெயந்தியின் தாய்.

''என் மாமியாரா....? இந்த நல்ல வேளையிலே.... அவங்களை ஏன் நினைவு படுத்தறேம்மா......? அவங்களைப் பார்த்தே எத்தனையோ வருஷமாகி விட்ட துன்னு தெரியுமில்லே? ஊரிலே இருக்கிற என் மாமியார்... மாமியாரா அவள்.... என்னைப் பொருத்தவரை ஜென்ம விரோதி தான்! என்னை என்ன பாடு படுத்திவிருக் கிறாள்? நீ மறந்துட்டியா? இந்த ஜென்மத் திலே இனிமே அவங்களை பார்க்கவே

யார்... இங்கே இருந்தால் நிச்சியம் என் கனவு பலிக்கத்தான் போகிறது பாரேன்....! நான் சொல்கிறதை சொல்லிட்டேன்.. அப்புறம் உன் இஷ்டம்! நாளைக்கு உன் மாமியாரும் இருந்தாதான் நானும் வரு வேன். இல்லேன்னா... நானும் வரல்லே... எப்படியோ போங்க!''

படபடவென்று வார்த்தைகளைப் பொரிந்து விட்டு ஆயாசத்துடன் நடந்தாள் பாட்டி. ஜெயந்திக்கு மிகவும் வருத்தமாகி விட்டது.

''உன் பேத்திக்கு அந்தப்பாட்டி வந்துதான் சொஜ்ஜி பஜ்ஜி பண்ணனும் அவ்வளவு தானே? சரி... சரி... செய்து டறேன். என்ன செய்யறது? அம்மா போட்ட கட்டளையாச்சே! அதுவுமில்லா மல் என் அம்மா ஒரு கனவு கண்டா அப்பப்பா! அப்படியே பலிச்சிடுமே?'' - ஜெயந்தியின் அம்மா பரபரத்தாள். நிம்மதி யான பெருமூச்சுடன் உள்ளே நடந்தாள் மகள்.

# மாயமா, மந்திரமா... அல்லது ஹோம்லி செய்த தந்திரமா ?





* வீட்டில் செய்த ருசி கொண்ட உயர்தர ஊறுகாய்
* அற்புதச் சாறுள்ள உலகத்தர ஊறுகாய்
* தனிப்பட்ட சுவை கொண்ட வகை வகையான ஊறுகாய்

ட்விஸ்ட்-காப் பாக்கிங்கிலே,
400 கிராம் ஹோம்லி ஊறுகாய்.
மற்றவைகளுடன் ஒப்பிடுவீர்.








**ஹோம்லி**

ஊறுகாய்கள்

*14 சுவையூட்டும் வகைகளிலே*

மேத்தா அஸோஸியேட் எண்டர்ப்ரைஸஸ்
20, மெக்னிக்கல்ஸ் சாலை, சேத்துப்பட்டு,
சென்னை-31.
864585, ஃபேக்ஸ் : 44-864016.

*Take home the homely taste.*

இலவசம் ரூ.2/-

இவ்விளம்பரப் பகுதியை அருகாமையிலுள்ள ஹோம்லி டீலரிடம் அளித்து, ஹோம்லி ஊறுகாயின் 14 வகைகளில் ஏதேனும் ஒரு வகைக்கு ரூ 2/- தள்ளுபடி பெறுவீர்.

இச்சலுகை 15.11.92 வரை — தமிழகத்தில் மட்டுமே.

Imageads 3213



மறுநாள் வியக்கத்தக்க விதத்தில் பெண் பார்க்கும் படலம் சிறப்பாக நடந்து முடிந்து விட்டது. இன்னும் ஒரே வாரத்தில் கல்யாணம் முடிந்து தன் மருமகளைக் கூட்டிப் போக வேண்டும் என்று மகிழ்ச்சியுடன் சொல்லி விட்டாள் பிள்ளையைப் பெற்றவள். தனது ஒரே மகனின் மகிழ்ச்சிதான் தனது குறிக்கோள் என்றும் சொன்னாள், அந்த வருங்கால சம்பந்தி! எல்லோரும் ஊருக்குத் திரும்பி விட்டனர், வீட்டில் இனிய அமைதி சூழ்ந்தது.

"ஜெயந்தி....!" தள்ளாடியபடியே தன்னைத் தேடிய தனது அப்பா வழிப் பாட்டியை உட்கார வைத்து அவளது காலில் விழுந்தாள் பேத்தி.

"என்னை ஆசிர்வதிங்க பாட்டி....!"

சொல்லி வைத்தது போல உள்ளூர் பாட்டி அங்கே வந்தாள். வாயெல்லாம் சிரிப்பு. எதிர் பார்த்த நிகழ்ச்சி அப்படியே நடந்து விட்டதே!

"அடேயப்பா.... எப்படியோ என் கனவு நல்லபடியா பலிச்சிடுத்தேடி யம்மா....!" நாணத்துடன் அந்தப்பாட்டி காலிலும் விழுந்து எழுந்த அந்தப் பேத்தி பாட்டியின் காதோரம் சென்று தனது வியப்பைக் கொட்டினாள்.

"எப்படி பாட்டி உங்க கனவு அப்படியே பலிச்சிருக்கு? அதிசயமா இருக்கு போங்க...!"

"அது ஒரு ரகசியம் உள்ளே வாயேன் சொல்றேன்...!"

அந்த வயதான கரத்தைப் பற்றி பின் தொடர்ந்து உள்ளே போனாள். கமலா வெளியே சென்று இருப்பதை தெரிந்த பின்பே உண்மையைப் போட்டு உடைத்தாள் பாட்டி.

"எனக்குக் கனவு வந்தா அப்படியே நடக்கும்தான்! ஆனால் நேத்து உன் அம்மா கிட்டே கனவு கண்டதா சொன்னது வெறும் பொய்தான். சும்மாதான் சொன்னேன்!"

"எதுக்கு?" - ஆச்சரியத்துடன் கேட்டாள் பேத்தி.

"ஒவ்வொரு தடவையும் பெண் பார்க்க வருகிறவங்க உன் அப்பாவின் பெற்ற அம்மா இங்கே வராமல் இருப்பதையும் நான் மட்டும் இங்கே வருவதையும் பார்க்கிறார்கள்! இதனால்தான் உன் கல்யாணம் தடைபட்டுக் கொண்டே இருந்ததை சிலர் சொல்லவும் சொன்னார்கள்..."

"இதிலே என்ன குறை கண்டாங்க அவங்க?"

"ஏன் இல்லாமல்? தாயைப் பார்த்து மகளைக் கொள் என்பார்களே? நாளைக்கு நீயும் உன் அம்மா போல தன்னை ஒதுக்கி வைத்துவிட்டால் என்ன செய்கிறதுன்னு ஒவ்வொரு பிள்ளையைப் பெத்த அம்மாவும் நினைப்பாளே? அதனாலேதான் இந்தத் தடவை எப்படியும் உன் அப்பா பெற்ற பாட்டி இருந்தாதான் இந்தக் கல்யாணம் நடக்கும்னு எனக்குத் தோணித்து! அதனால்தான் கனவு கண்டேன்னு ஒரு பொய்யைச் சொல்லி உன் அம்மாவை நம்ப வைத்தேன்! பிடிவாதக்கார உன் அம்மாவும் எப்படியோ உன் பாட்டியை வர வழைத்து விட்டாள்! கல்யாணமும் குதிர்ந்து விட்டது! எந்த ஒரு வீட்டிலே வயதான தாயை நன்றாக வைத்து சந்தோஷமாக நடத்தறாங்களோ அவங்க வீட்டிலேதான் சகலவிதமான நல்லகுணங்களும் ஒத்துப் போகிற மனப்பான்மையும் குடியிருக்கும்! இதை நல்லா மனசிலே வெச்சி எல்லோருக்கும் நல்லவளா நல்ல பெயர் எடுக்கணும் என்ன தெரிந்ததா?"

"பாட்டி....!"

ஏதோ புதிரின் விடையைத் தெள்ளென்று புரிந்த அதிசயத்துடன் பாச உணர்வுக்கு அடிமையாகி கண்ணீர் பனிக்க பாட்டியை அணைத்துக் கொண்டாள் அந்த பேத்தி.

---

தீபாவளி நேரத்தில் நிறைய சுட்ட எண்ணெய் கசடுடன் மீதமாகும். மூன்று, நான்கு உருளைக் கிழங்குத் துண்டங்களை அதில் பொரித்தெடுத்தால் எண்ணெய் சுத்தமாகிவிடும்.

- கி. மஞ்சுளா



**தீபாவளிக்காக எம்டிஆர் தரும் ஸ்பெஷல் பட்சண வகைகள்**

## ஹயக்ரீவா

தேவையான பொருட்கள் :

- கடலைப் பருப்பு - ½ கிலோ
- வெல்லம் (அ) சர்க்கரை - ½ கிலோ
- கொப்பரை (அ) தேங்காய் - 1
- திராட்சை - சிறிது
- முந்திரி - சிறிது
- நெய் - 100 கிராம்
- ஏலக்காய் - சுவைக்கு

செய்முறை :

கடலைப் பருப்பை வேக விடவும். பிறகு நீரை வடிகட்டி மற்ற பொருட்களுடன் கலந்து, மெல்லிய தீயில் நன்கு வதக்கவும். பொன்னிறமாகச் சுருள வரும் வரையில் கிளறி இறக்கவும்.

இது சுவாமி ஹயக்ரீவருக்கு மிகவும் பிடித்தமான பிரசாதம்.

# காப்பிக்காகக் காலையும் மாலையும்...

"**சா**ம்பாருக்கு 'அங்கே' போன் செய்து புக் பண்ணிக்கணும், தெரியுமா?"

"ஞாயிற்றுக்கிழமை காலையில மசால்தோசைக்கு க்யூ நிற்கும் பாருங்க, கல்யாணக் கூட்டம் தோத்துப் போயிடும்...."

இப்படிப் பலர் பலர் விதமாகப் பேசி காதால் கேட்டே பரிச்சயமான இடம் 'எம்டிஆர்'! பெங்களூரிலுள்ள 'மாவில்லா டிபன் ரூம்' தென்னிந்திய உணவுகளுக்குப் புகழ் பெற்றது. இதன் இட்லி, ரவா இட்லி, மசால் தோசை, சாம்பார்... யாரானாலும் ஜூஸ்ஸூ முத்திரைதான் குத்துவார்கள்.

அதை நேரடியாகச் சுவைக்கும் அனுபவம் சென்ற மாதம்தான் கிடைத்தது. இத்தனை சுவையின் இரகசியம் என்ன? இவர்களைப் பற்றி இந்தியா முழுக்க (மேலை நாடுகளில் இருந்து வழக்கமாக இந்தியாவுக்கு வருகின்ற பல வெளிநாட்டினர் கூட இங்கே வருவார்களாம்!) புகழ் பரவியிருந்தும், அன்றைக்கு இன்று மாறாமல், அதே இடத்தில், அதே சுவையில் எப்படி? ஒரு சின்ன ரோடோர இட்லிக் கடை ஃபைவ் ஸ்டார் ஓட்டலாக மாறிவிடுகிறது. இவர்கள் மாறாமல் எம்டிஆராகவே இருக்கிறார்கள். இதற்கெல்லாம் பதில் சொல்கிறார் சதானந்தமய்யா, இன்றைய ஹோட்டல் நிர்வாக இயக்குநர்.

"முதலில் பல ஆண்டுகளுக்கு முன்பு என்னுடைய உறவினர்கள்தான் இந்த ஹோட்டலை ஆரம்பித்தனர். உடுப்பியைச் சேர்ந்த என்னுடைய தந்தையார் இங்கு



## கோடுபளே



(கோடுவளை)

சேர்ந்தார். படிப்படியாக இந்தத் தொழிலைக் கற்றுக் கொண்ட அவர், டிபன் வகையறாக்கள் செய்வதில் தன்னிக ரற்று விளங்கினார். எம்டிஆரை ஆரம்பித்த பலரும் பல காரணங்களால் விலகிக் கொள்ள தந்தை முழுப் பொறுப்பேற்றுக் கொண்டார்.

எம்டிஆரின் டிபன் புகழ் பெற ஆரம்பித்தது. இட்லி, ரவா இட்லி, தோசை, சாம்பார் ஒவ்வொன்றும் தனிச்சிறப்புப் பெற்றது. அதே போலக் காப்பியும்தான். முப்பது, நாற்பது ஆண்டுகளாக காப்பி மட்டுமே காலையும், மாலையும் ரெகுல ராக வந்து குடித்துவிட்டுச் செல்பவர்கள் இருக்கிறார்கள்....''

''நீங்கள் மட்டும் இவ்வளவு சுவையாக எப்படிச் செய்கி றீர்கள்...'' என்று கேட்டதற்கு ஹோட்டல் சமையல் அறையி லிருந்து ஸ்டோர் ரூம் வரை அழைத்துச் சென்று காட்டி னார்.

ஜேஜே என்று வெளியே மொய்க்கும் கும்பலுக்குப் பொருந்தாத சிறிய சமையலறை... சுறுசுறுப்பாக ஒவ்வொரு பணியாளரும் இயங்கிக் கொண்டு இருக்கிறார். இருபத்து நாலு மணி நேரமும் இட்லிக்கு அரைத்துக் கொண்டு இருக் கும் கிரைண்டர்...

''தரம்... காம்ப்ரமைஸ் செய்து கொள்ளவே விரும்பாத தரம்தான் இத்தனைச் சுவைக்குக் காரணம்... அடுத்தது எங்க ளுடைய குடும்பம் என ஒவ்வொருவரையும் சொல்லிக் கொள்ளும் அளவுக்கு என்னோடு ஒத்துழைக்கும் எம்டிஆர் நிறுவனத்தைச் சேர்ந்தவர்கள்.

நான் என்ஜினியரிங் படித்தவன். என் தந்தை எனக்கு இத்துறையில் குரு. அவர் கண் மூடும்போது, 'இதே தரத் தோடு முடிந்தால் செய். இல்லையென்றால் உன் தொழிலைப் பார்க்கப்போ...' என்றார். என் சகோதரர்கள் அனைவரும் டாக்டர், இன்ஜினியர் என ஒவ்வொரு துறையிலும் புகழ் பெற்றவர்கள். எனவே இதிலிருந்து வரும் பணம் தேவையில்லாதவர்கள். எனவே எனக்குப் பெரிதாக சம்பாதிக்க வேண்டும் எனும் வியாபார நோக்கம் இல்லை. தரத்தை மட்டுமே கண்காணித்துக் கொள்கிறேன்...

மைதா மாவு
- ½ கிலோ
ரவை - 150 கிராம்
எண்ணை - 100 கிராம்
அரிசி மாவு - 75 கிராம்
பச்சை மிளகாய்,
இஞ்சி,
தேங்காய்த் துருவல்,
சீரகம்,
பெருங்காயம்,
கருவேப்பிலை,
உப்பு - அவரவர்
களுக்கு
தேவைக்கேற்ப
சோடா
- மிகச் சிறிய துளி

செய்முறை :

முதலில் பச்சை மிள காய், இஞ்சி, தேங்காய் இவற்றை அரைத்துக் கொள்ளவும். மற்ற சாமான்களுடன் இந்த விழுதைப் போட்டு தேவையான நீர் விட்டு முறுக்கு பதத்திற்குக் கலந்து கொள்ளவும் மாவை முறுக்கு போலச் சுற்றி வளைபோல வளைத்துப் போடலாம். முறுக்கு சுற்ற வரவில்லை யென்றால் நீளமாகத் திரித்து வளையமாக்கியும் எண்ணெயில் பொரித்தெ டுக்கலாம்.




**உங்களுக்குத் தேவை அதிக ஊட்டச்சத்துள்ள**

**புதிய காம்ப்ளான்® விட்டாமில்க்®**

குழந்தை தன் ஊட்டத்திற்கு உங்களையே நம்பியிருப்பதால்.
உங்களிடமிருந்து அதற்கு போதுமான அளவு
பால் கிடைக்க வேண்டும்.




காம்ப்ளான் விட்டாமில்க் குழந்தைக்குத் தாய்ப் பாலூட்டி வளர்க்கத் தேவையான ஊட்டச் சத்துக்களையும் மற்றும் காம்ப்ளானின் எல்லா நற்பயன்களையும் கொண்டது.

இதில் பால் புரதம் (22.2 கிராம்). ஃபாலிக் ஆஸிடு. வைட்டமின்கள் A, $B_6$ மற்றும் C, இரும்புச்சத்து. அயோடின். கால்ஷியம். ஸிங்க் மற்றும் மகனீஷியம் தேவையான அளவில் அடங்கியுள்ளது.

தினமும் 3 கப்புகள்

ரெகுலர் * சாக்லேட்

உடல் நலத்தின் உறைவிடம் க்ளாக்ஸோ



* சதானந்தராய்பை

இங்கே குண்டூரிலிருந்து மிளகாய், அரபியாவிலிருந்து பெருங்காயம் என அதனதன் ஒரிஜினல் இடத்தில் இருந்து சாமான்களைத் தருவிக்கிறோம். 'அம்டக் காய்' எனும் ஒருவிதக் காய் மைசூர்ப் பகுதிகளில் மட்டுமே விளைகிறது. இது மாவடு போல இருக்கும். மிகவும் ருசியான இந்தக் காயை கர்நாடக பெண்கள் ஊறுகாயாக போடுவது வழக்கம். ஆனால் நாங்கள் ஊறுகாயை வியாபார ரீதியாக போட ஆரம்பித்த போது 90% அம்டக்காய் எங்களுக்கு வர ஆரம்பித்து விட்டது. சுவை, தரம் காரணமாக பலரும் எங்களிடமே வாங்க ஆரம்பித்து விட்டார்கள்..."

"இந்தச் சின்ன இடத்திலேயே இயங்குகிறீர்களே... ஏன் உங்களுக்கு இருக்கும் டிமாண்டிற்கு வியாபாரத்தையும், இடத்தையும் விரிவுபடுத்தக் கூடாது....?"

"வியாபாரத்தை விரிவுபடுத்தினால் இந்த அளவிற்குக் கண்காணிப்பு இருக்காது. இப்பொழுதே காலையில் ஐந்தரை மணிக்கு வந்தால் இரவு பத்து மணி ஆகிவிடும் நான் போவதற்கு. பம்பாயில் கூட இடமெல் லாம் கொடுத்து ஆரம்பிக்கச் சொன்னார்கள். நான் மறுத்து விட்டேன்.

இப்பொழுது காலையில் குறிப்பிட்ட அளவு இட்லி, ரவா இட்லி, இத்தனை தோசை எனப் போடுகிறோம். அது தீர்ந்து போனவுடன் கடையை மூடிவிடுகிறோம். அதே போலத்தான் மாலையிலும். இந்தக் கணக்கும், கண்காணிப்பும் இருப்பதால்

* மிளகாய்ப் பொடி 'இடிக்க'ப்படுகிறது...



## கர்ஜூரதா

## அல்வா

தேவையான பொருட்கள் :

- கொட்டை நீக்கிய பேரீச்சம்பழம் - 100 கிராம்
- பால் - 1/2 கப்
- சர்க்கரை - 150 கிராம்
- முந்திரி - 50 கிராம்
- நெய் - 2 ஸ்பூன்
- ஏலக்காய் - சுவைக்கு

செய்முறை :

பேரீச்சம்பழங்களை பாலில் இட்டு குக்கரில் வைத்து வேகவிடவும். பிறகு சர்க்கரை, நெய் இவற்றுடன் நன்கு கலக்கவும். குக்கரில் அடியில் ஒட்டாதவாறு கருளக் கிளறவும். பிறகு மற்ற பொருட்களையும் கலந்து நல்ல பொன்னிறம் வரும் வரை கிளறவும். பிறகு ஒரு பரந்த ட்ரேயில் கலவையைப் போட்டுத் தட்டி சதுர சதுரமாகக் கீறி எடுக்கலாம்.

தான் சுவை குன்றாமல் பார்த்துக் கொள்ள முடிகிறது..." என்கிறார்.

முதல் நாள் அரைத்த இட்லிமாவு புளிக்காமல் மறுநாள் வேக வைக்கப்படு கிறது. தரமான காப்பிக்கொட்டை வறுத்து அரைத்து ஆறவைத்து மறுநாள் காப்பியா கிறது. ஒவ்வொன் றிற்கும் இத்தனை மணி நேரம் எனக் கணக்கு இருக்கிறது. அது தவறாமல் கடைபிடிக்கப்படுவதால் ருசி [illegible] சுவை குன்றாமல் இருக்கிறது என்கிறார் சாதவக்[illegible]

இவருடைய ஹோட்டல் மா[illegible] பார்த்துக் கொள்ளும் கிஷோர் ஷா, பல்லாயி[illegible] றுகாய்களுக் கான காய்களை சப்ளை செய்யும் [illegible]நான்கு களுக்கும் மேலாக பணிபுரியும் [illegible], [illegible]பரை யாக ஊறுகாய் போடும் சிவராம் [illegible]கிறது.

"அதற்குக் காரணம் இந்தக் [illegible] இங்கு பணிபுரியும் மனிதர்களுக்கு [illegible]லையே வேண்டாம். சாப்பாடு, தூங்கும் [illegible]மான வரான்னால் ஒரு மாதத்திற்குத் [illegible]ளைப் பொருட்களும் தருகிறார்கள். [illegible] வாழ என்ன குறை..." என்கிறார் கிஷோர்.

இவர்களை விளம்பரத்திற்கு அ[illegible] "எம்டி.ஆர் பாணியே விநோதம்" என்கி[illegible]. [illegible] ஒரு பொருளைத் தயாரித்தால் [illegible] போது பிரமாதமாக விளம்பரம் செய்வார்[illegible]. [illegible]பாரமும், விளம்பரமும் தொடரும். ஆ[illegible] இ[illegible] தயாரித்த பொருளை மார்க்கெட் செய்து [illegible] வர்த்த பிறகு, ஸ்டெடி ஆனபிறகு விளம்பரம் [illegible]. இவர்களின் ரெடிமிக்ஸ் பொடிகள் எல்லாம் அந்தவகை[illegible]ல் ஆரம்பித்த இந்த வியாபாரத்திற்கு இப்பொழு[illegible] விளம்பரம் செய்கிறார்கள் என்றால் பார்த்துக் [illegible]ளேன். அது மட்டுமல்ல. அவர்களுடைய [illegible] வைத்துப் பார்த்து விட்டுப் பிறகு விளம்பரம் [illegible]வார்கள்..."

டிபன் வகையறாக்களுக்குப் [illegible] ரெடிமிக்ஸ் பொடிகளை ஏன் தயாரிக்க ஆரம்[illegible]?

"அது ஒரு சுவாரஸ்யமான [illegible]" என்கிறார் ச[illegible] மய்யா.

"எமர்ஜென்சி நேரத்திலே குறி[illegible] விலைக்குத்தான் இட்லி, தோசைகளை விற்க வேண்டு[illegible] சொல்லி விட்





டார்கள். ஜனதா இட்லி, ஜனதா தோசை என்று அதற்குப் பெயர். எங்கள் டிபன்களில் நாங்கள் முழுக்க முழுக்க நெய்யைத்தான் பயன்படுத்துவோம். எங்களுக்கு அரசாங்கம் நிர்ணயித்த விலை கட்டுப்படியாகவில்லை. ஆறுமாதத்தில் பல லட்சக்கணக்கான ரூபாய் நஷ்டம். அதனால் ஹோட்டலை மூடிவிட்டோம். அதற்காக என்னைக் கைது செய்யக் கூட முயன்றார்கள். எம்.ஜி.ஆர் ரசிகர்கள் பலரின் உதவியுடன் நான் காப்பாற்றப்பட்டேன்.

எங்கள் குடும்பமாகவே இயங்கி வந்த பணியாளர்களின் கதி என்னாவது? மண்டையை உடைத்துக் கொண்டோம். நாங்கள் ரவா இட்லி செய்ய எல்லா சாமான்களையும் போட்டு ரெடி செய்து கொள்ளவும், தேவையான போது கலந்து தயாரிப்பது வழக்கம். இதையே ரெடி ரவா இட்லிப் பொடியாக விற்றால் என்ன? ஒரு சிறிய கௌண்டரில் ஆரம்பித்தோம். எம்.டி.ஆர்.தான் இல்லை, எம்.டி.ஆர் ரவா பொடியாவது கிடைக்கிறதே என அனைவரும் வாங்க ஆரம்பித்தார்கள். அதுவே ஒவ்வொன்றாக சேர்ந்து கொண்டது. இன்றைக்குப் பத்துக்கும் மேற்பட்ட பொடிகள் தயாராகின்றன. சாம்பார்ப் பொடி, ரசப்பொடி, குலாப்ஜாமூன் இப்படி நிறைய....''

பொம்ம சந்திரா தொழிற்சாலைப் பகுதியில் பெரிய தொழிற்சாலையையே நிறுவும் அளவுக்கு இன்று வளர்ந்து விட்டார்கள். அங்கேயும் அழைத்துக் கொண்டு போய் காண்பித்தார். காது உடைந்துவிடும் அளவுக்கு இரும்பு உலக்கைகளின் சப்தம்.... சாம்பார், ரசப்பொடியெல்லாம் இயந்திர இரும்புலக்கையின் உதவியால் பொடியாக இடிக்கப்படுகிறது. நாங்கள் சாம்பார், ரசப்பொடிகளை மிஷினில் அரைப்பதில்லை. ஏனெனில் மிஷின் சூட்டில் பொடி கரிந்து விடும். இப்படி இடித்துத் தயாரிக்கப்படும் பொடி, சாம்பாருக்கு 'அரைத்துவிட்ட' டேஸ்டைக் கொடுக்கும்'' என்கிறார்கள். கைப்படாமல் தயாரிக்கப்படுகிறது. ரவா இட்லிப் பொடி பெரிய பெரிய ரோலர்களில் வறுக்கப்படுகிறது. ரவா வறுபடும் வாசனை மூக்கைத் துளைக்கிறது.

## அம்போடே

தேவையான பொருட்கள் :

கடலைப் பருப்பு - 1/2 கிலோ
தேங்காய் - சிறியது ஒன்று
சீரகம் - 25 கிராம்
பச்சைமிளகாய் - .100 கிராம்
இஞ்சி - ஒரு சிறிய துண்டு
கருவேப்பிலை, கொத்துமல்லி, பெருங்காயம், உப்பு - ருசிக்கேற்றபடி.

செய்முறை :

கடலைப் பருப்பை 1½ மணிநேரம் ஊறவிடவும். பிறகு தேங்காய், மற்ற பொருட்களுடன் நன்றாக அரைத்துக் கெட்டியாக எடுக்கவும். வடை போலத் தட்டி எண்ணெயில் பொரித்தெடுக்கவும்.



"இந்த ரவை சமாச்சாரம் கொஞ்சம் கஷ்டம். வறுக்கும் போது கொஞ்சம் முன்னால் எடுத்துவிட்டால் பச்சை வாசனை போகாது. கொஞ்சம் கூட வறுத்து விட்டாலோ கருகிவிடும். அதே போலத்தான் குலாப்ஜாமூனுக்கு மைதா வறுக்கும் சமாசாரமும்...."

"இவற்றில் எல்லாம் சோடாமாவு போடுகிறீர்கள் அல்லவா? இது உடம்புக்குக் கெடுதல்தானே...?"

"ம்.... இங்கே ஒரு விஷயம் சொல்லியாக வேண்டும். வீட்டில் தயாரிக்கும் ரவா இட்லி, குலாப்ஜாமூன்களில் கூட சோடா மாவு சேர்க்கிறார்கள். நாங்கள் இங்கே டன் டன்களாகத் தயாரிக்கும் பொடிகளில் மிகக் குறைந்த கிராம் சேர்க்கிறோம். ஏன் அதை எங்கள் தொழில் ரகசியமாகக் கூட வைத்திருக்கிறோம் என்று சொல்லலாம். ஆனால் வீட்டில் அரைக் கிலோ, கால்கிலோவிற்குத் தயாரிக்கும் போது .000 என்று போக வேண்டும். இந்த அளவு குறைந்து எடை போட்டுப் போடுவது என்பது இல்லத்தரசிகளால் முடியாத விஷயம்...."

இந்த ரவா இட்லிப் பொடியில் எல்லாம் போட்டுவிடுகிறார்கள், உப்பில் இருந்து சகலமும். அவர்கள் சொல்லும் அளவுப்படி நீரைக் கலந்து செய்ய வேண்டும். அதுதான் முக்கியம்.

"இந்த இடத்தில் ஒரு முக்கியமான விஷயம். நாங்கள் சொல்லியுள்ள நேரம், அளவு இவற்றை ஸ்டிரிக்டாக ஃபாலோ செய்ய வேண்டும் என்பது ரொம்ப முக்கியம். வடைக்கு இவ்வளவு தண்ணியா, தோசை மாவு மாதிரி இருக்கிறதே என இன்னும் கொஞ்சம் தண்ணீரைச் சேர்ப்பார்கள். போச்சு, கல்லு மாதிரி ஆகிவிடும் மாவு.



பொதுவாகவே நாங்கள் சாமான்களைத் தயாரித்து அதிலுள்ள ஈரப்பசையை முழுமையாக எடுத்துவிட்டே 'பேக்' செய்கிறோம். அப்போதுதான் அதற்கு நீண்டநாள் ஷெல்ஃப் லைஃப் இருக்கும். அதனால் சாதாரணமாக வடைக்கு ஊறப்போட்டு அரைத்து எடுக்கும் போது இருக்கின்ற ஈரப்பசைக்கும், அப்போதே கலந்த ரெடிமேட் மாவுக்கும் நிறைய வித்தியாசம் உண்டு. பத்து நிமிஷம் ஊற வைக்க வேண்டும் என்று போட்டிருந்தால் பத்து நிமிஷம் தோசைமாவு மாதிரி உள்ள வடைமாவை பயப்படாமல் வையுங்கள். மடமடவென்று ஈரம் உறிஞ்சப்பட்டு பதமாகிவிடும்.

அதே போல ரவா இட்லி மிக்ஸிலும் ஒரு நிமிடம் கழித்து இவ்வளவு தயிர், இரண்டு நிமிடம் கழித்து இவ்வளவு தயிர், கலந்து உடனே குக்கரில் ஊற்றவும் என இருக்கும். புளித்த தயிரும் சோடாபைகார்பனேட்டும் சேர்ந்து வினை புரிவது ஒருசில நிமிடங்களுக்குத்தான். அந்தச் சமயம் வேகவைக்கும் போது உள்ளே காற்று புகுந்து இட்லி பூமாதிரி இருக்கும். நேரம் கடந்து விட்டால் இட்லி ஒரிஜினல் டேஸ்டில் இருக்காது. நாங்கள் காரணத்தோடுதான் நேரம், அளவு குறிப்பிடுகிறோம். ஆனாலும் பலரும் சொல்லியிருக்கிறார்கள் ரெடிமேடாகச் செய்யப்படும் பொருட்கள், எம்டிஆரில் சாப்பிடுவதைவிடச் சுவையாக இருக்கிறது என்று....''

ஊறுகாய் பேக்டரி, மிக்ஸ் பொடி பேக்டரி எல்லாவற்றையும் சுற்றிப் பார்த்தாகி விட்டது. சதானந்தமய்யாவை வம்புக்கு இழுக்க வேண்டுமே... அதனால் இந்தக் கேள்வியைப் போட்டேன்...

''ஏற்கெனவே பெண்களுக்கு வீட்டு வேலை இடிப்பது, கரைப்பது குறைந்துவிட்டது. மிக்ஸி, கிரைண்டர், கேஸ், குக்கர் எல்லாம் வந்தாகி விட்டது. இன்னும் நீங்கள் இப்படி எல்லாவற்றையும் ரெடிமேடாகக் கொடுத்துவிட்டால் இன்னும் வேலை குறைந்துவிடுமே. அது தவிரவே இப்படி 'என் வீட்டுச் சமையல்' எனச் சொல்லிக் கொள்ளும் கலாசாரமே போயிடுமே... பெண்களுக்கான சொத்து எனப்படும் சுவையான உணவு என்பது மாறிப் போய் 'கலாசாரப் பின்னடைவு' ஏற்படுமே?''

''இந்தக் கேள்விக்குப் பதில் சொல்வதற்கு முன் இன்னும்கூட ரெடிமேடான விஷயத்தைக் காண்பிக்கிறேன்'' என மர்மமாகச் சிரித்து ஒரு பாக்கெட்டைக் காண்பித்தார். 'ரெடி டு ஈட்' எனச் சொன்னது அந்தப் பொட்டலம்.

''இது உப்புமா பாக்கெட். ஒரு அகலமான பாத்திரத்தில் கொதிக்கும் நீரில் பத்து நிமிடம் இந்தப் பாக்கெட்டை அப்படியே (உறை பிரிக்காமல்) போட்டுக் கொதிக்க வைக்க வேண்டும். பிறகு கட் செய்து தட்டில் போட்டால் உப்புமா....''

போட்டோம். முந்திரியும், எலுமிச்சம் பழம் பிழிந்த புளிப்பும் சேர்ந்த உப்புமா வந்து விழுந்தது ஜோராக.

''என்ன சார் இது....?''

''என்ன செய்வது? இது வேகமான யுகம். இந்த நாளில் இது அவசியம் கூட. தூர தேசம் போகும் யாத்ரீகர்கள், மலையேறுபவர்கள் இவர்களுக்கெல்லாம் இது ரொம்ப உபயோகமானதாக இருக்கும். தேவையானது கொதிக்கும் தண்ணீர் மட்டும்தான்.

சரி, உங்கள் கேள்விக்கு வருகிறேன். இந்த ரெடிமேட் சமாசாரங்கள் பெண்களை மேலும் முடக்காதா என்று கேட்டீர்கள். நிச்சயமாக இல்லை. வேலைக்குப் போகும் பெண்களுக்கு உதவிக்கரம் நீட்டும் இந்தத் டிபன் மிக்ஸ்கள். அதே போல இன்று கூட்டுக் குடும்பம் என்பது இல்லை. மூன்று, நான்கு பேர் இருக்கும் குடும்பத்திற்கு என்னதான் குறைவாக வடைசெய்தாலும் மீந்து போகும். மறுநாள் யார் சாப்பிடுகிறார்கள். ஆனால் இட்லியோ, தோசையோ, வடையோ நமக்கு எவ்வளவு தேவையோ அவ்வளவு மட்டும் இந்தப் பொடிகளைக் கலந்து கொண்டால் போதுமே. எனவே சிக்கனமானதும் கூட. வேஸ்டாவது இல்லை.

இன்னொன்று தரம். இந்தப் பொடிகளுக்காக வாங்கப்படும் மிளகாயிலிருந்து, மைதா வரை அனைத்துமே மிகச் சிறந்த தயாரிப்புக்கள். மொத்த விலையில் வாங்குவதால் எங்களுக்குக் கிடைக்கிறது. விலையும் குறையும் ஆனால் ஒரு பாட்டில் சாம்பார்ப் பொடி தயாரிக்க அரைக்கிலோ மிளகாய் தேவையென்றால் நீங்கள் கிடைப்பதைத்தான் வாங்க முடியும். குண்டூர் மிளகாய்தான் வேண்டும் எனக் கேட்க முடியாது.

எனவே இதில் 'கலாசாரக் குறைவு' என்பதே கிடையாது. இன்றைய இல்லத்தரசிகளின் வேலைப்பளு, குடும்ப சிரமம், பொருளாதார நிலை இவையனைத்திற்கும் உதவி செய்வதாகத்தான் இந்தப் பொடிகள் நிச்சயமாக அமையும்...'' என்று ஒரே போடாக போட்டார் சதானந்தமய்யா.

சனிக்கிழமையான அன்று இரவு கடை மூடிய பிறகு வாசலில் கூட்டம் கூட்டமாக உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். என்ன விசேஷம்... டிபன் ரூம் திறந்திருக்கும் போது உள்ளே உட்கார்ந்து வியாபாரப் பேச்சுக்கள் நடக்குமாம், மூடிய பிறகு வெளியே உட்கார்ந்து விடுவார்கள். சனிக்கிழமை இரவு இப்படி லட்சக்கணக்கான வியாபார டீலிங்குகள் இங்கே நடக்குமாம்....!

அட்டைப்படம், புகைப்படங்கள் :

**ஓம். சுப்ரமணியன்**

அட்டையில் :

**திருமதிகள் விஜயா, வித்யா.**



சிரிப்பது ஒரு கலை. ஆனால் மற்றவரைச் சிரிக்க வைப்பது ஒரு கை தேர்ந்த கலை. என் சித்தப்பா அதில் ஒரு நிபுணர். அவரோடு செல்லும் போது பல சமயங்களில் விழுந்து விழுந்து சிரித்திருக்கிறோம்....

ஒரு சமயம் என் சித்தப்பாவும், சித்தியும் என் வீட்டிற்கு வரும் பொழுது வழியில் போஸ்ட்-மேனைப் பார்த்து "எனக்கு ஏதாவது இருக்கா" என்று சித்தி கேட்டிருக்கிறார். சித்தப்பா எங்களிடம் "பாரும்மா உன் சித்தியை, போஸ்ட் மேனைப் பார்த்து எனக்கு ஏதாவது இருக்கிறதா என்று கேட்கிறாள். அவரைப் போய்க் கேட்டால், பாவம் அவருக்கு என்ன தெரியும்? என்னிடம் கேட்கட்டும் சொல்கிறேன்" என்றவுடன், எங்கள் எல்லோருக்கும் சிரிப்பு வந்து விட்டது.

அதே போல் சித்தப்பாவின் மாமா ஒருவர் கொஞ்சம் அசடு. அவர் ஒரு முறை பெங்களூர் சித்தப்பா வீட்டிற்கு வந்திருக்கிறார். அவரைப் பெங்களூர் சுற்றிப் பார்க்க அழைத்துப் போயிருக்கிறார். 'விதான் சௌதா' வந்தவுடன் அதைப் பார்த்து மாமா அடட, அடட என்று கூறி கன்னத்தில் போட்டுக் கொண்டு ரோடிலேயே நமஸ்காரம் பண்ணியிருக்கிறார். சித்தப்பாவிற்கு சங்கடமாய்ப் போய் அவரைத் தரதரவென்று அழைத்துக் கொண்டு வந்து விட்டாராம். வீட்டிற்கு வந்து அது கோவில் இல்லை கட்டடம் என்று விவரிப்பதைக் கேட்டு நாங்கள் சிரித்த சிரிப்பு இருக்கிறதே....

மற்றொரு என் நாத்தனார் கல்யாணத்தில் சத்திரத்தின் பாத்ரூம் கதவு சரியில்லை என்று சொல்லியும் ஏதோ ஞாபகத்தில் சித்தப்பா போய் தாழ் போட்டுக் கொண்டு, குளித்திருக்கிறார். பிறகு கதவைத் திறந்து வெளியில் வர எவ்வளவு முயன்றும் முடியவில்லை, கொட்டு மேள சத்தத்தில் கல்யாண சத்திரத்தில் அவர் கூப்பிட்டது எங்கள் யாருக்கும் கேட்கவில்லை, கதவிற்கு மேல் இருக்கும் இடைவெளியில் கைகளை வைத்துக் கொண்டு ஆட்டிப்







கொண்டிருக்கிறார் சித்தப்பா நல்ல கருப்பு நிறம். கருப்பான கைகள் அடிக்கடி இங்கும் அங்கும் ஆட்டியதில் அங்குள்ள சில குறும்புப் பையன்கள் கவனித்து விட்டு உள்ளே ஏதோ பேய் இருக்கிறது என்று கூறி ஒரே கலாட்டா. எல்லோரும், கதவின் மேல் பாகத்தையே பார்க்கிறார்கள். சித்தப்பாவிற்குக் கூப் பிட்டுத் தொண்டை வரண்டு போய் மேல் கதவு வழியே எட்டிப் பார்க்க முயற்சி பண்ணியிருக்கிறார் பாவம். ஒரு வழியாக சித்தி வந்து பார்த்துக் கதவைத் திறந்தாளாம். பிறகு சித்தி சித்தப்பாவைப் பார்த்து, ''என்னங்க இவ்வளவு நேரம் என்ன பண்ணிண்டிருந்தீங்க உள்ளே,'' என்றவுடன் சித்தப்பா மிகவும் கடுப்பாகி ''ஆமாம் நீ பட்டுப் புடவை, கையில் பாலோடு உள்ளே வருவாய் என்று இங்கு காத்துக் கொண்டிருந்தேன்'' என்றவுடன், அப்பப்பா சிரிப்பலையில் சத்திரமே நடுங்கியது.

ஒரு சமயம் நண்பர் ஒருவர் சித்தப்பாவைப் பாடச் சொல்லி கட்டாயப்படுத்தி வாராம். அதற்கு சித்தப்பா ''நீ முதலில் பாடு பிறகு நான் பாடுகிறேன் என்றவுடன் அவரும் ''அலை பாயுதே கண்ணா''... என்று உச்ச ஸ்ருதியில் கைகளை மேலே கொண்டு போய் நிறுத்தி விட்டார். சித்தப்பா அவர் கையையே பார்த்துக் கொண்டு பிறகு ''போதுமா, போதுமா, இப்போ வாட்டும் கண்ணன் விழுந்து விடப் போகிறான்'' என்று படுசீரியஸாக சொல்ல வந்த பாட்டு எங்கே... ஒரே சிரிப்புதான்!

சித்தப்பா வீட்டு எதிர் போர்ஷனில் ஒரு குடும்பம் இருந்தது. ஆபீஸ் விட்டு வீடு வந்த சித்தப்பாவிற்குப் பொழுது போகவில்லை போல் இருக்கிறது. எதிர் வீட்டு எட்டு வயது வாண்டிடம் ''என்டா உங்க வீட்டில் இன்று என்ன டிபன்'' என்று கேட்டாராம். அவன் ''வந்து அங்கிள் எங்க அக்கா வயசுக்கு வந்து விட்டது அது தொட்டு இன்று புட்டு'' என்றானாம். இவர் படுசீரியஸாக ''ஏன்டா அதைத் தொட்டா புட்டு பண்ணுவார்கள் எனக்கு வேண்டாம்பா'' என்றாராம். கேட்டுக் கொண்டிருந்தவர்களுக்குச் சிரிப்பு!

ஆபீஸுக்குப் புறப்படும் அவசரத்தில் சித்தப்பா சித்தியிடம் ''ஆச்சா டிபன்'' என்றாராம். சித்திக்கோ தோசைக் கல்லில் மாவு கிண்டி கிண்டி வந்து கொண்டிருந்ததாம். அதைப் பார்த்த சித்தப்பா ''ஏன் கஷ்டப்படுகிறாய், இரண்டு ஸ்பூன் தோசை மாவு கொடு குடித்து விடுகிறேன்'' என்றாராம். சித்திக்கு ஒரே சிரிப்பு. சாப்பிட உட்கார்ந்தாலும் சிரிப்பலை தொடரும். சித்தி சாதம் சாம்பார், கறி பரிமாறுவார். சித்தப்பா திடீரென்று, ''கதவைச் சாத்து, கதவைச் சாத்து'' என்று பதறுவார், சித்தி ''ஐயையோ, எதுக்கு இந்தக் கத்தல்'' என்றவுடன் ''இல்லை கதவு திறந்திருந்தால் கதவு வழியாக சாம்பார் ஓடி விடப் போகிறது'' என்பார் நிதானமாக. சித்தியின் சாம்பார் நீர்க்க இருக்கிறதாம் அதற்குதான் இத்தனைக் கூத்து. கணவன் மனைவிக்குள் சண்டையானது, ஒன்றானது. இப்படி ஒரு நகைச்சுவையாகப் பேசும் கணவன் கிடைத்துவிட்டால்....

– ராதா நரசிம்மன்

---

## நலிந்தோருக்கு நல்வழி



'நாம்ராஸ்' வேளச்சேரி கிளை தன் எட்டாவது ஆண்டு விழாவைச் சிறப்பாகக் கொண்டாடியது. இந்த விழாவிற்கு கைங் கர்ய சிரோன்மணி எஸ். வி. நரசிம்மன், சமூக சேவகி திருமதி காமா பரசுராமன், அ.தி.மு.க. மகளிர் அணி துணைச் செயலாளர் மாடி லக்ஷ்மி முதலியோர் வந்திருந்தனர்.

திருமதி காமா பேசுகையில், 'நாம்ராஸ்' நல்ல பல சமூகப் பணிகளை நலிந்தவர்களுக்குச் செய்கின்றது. அதனால்தான் நானும் அதில் சந்தோஷமாகப் பங்குபெறுகின்றேன். இன்னும் என்னால் முடிந்த உதவிகளைச் செய்யச் சந்தர்ப்பம் கிடைத்துள்ளது'' என்று கூறியதோடு வழக்கம் போல நன்கொடைகளை மகிழ்ச்சியுடன் அளித்தார். ''மகான் அரவிந்தருடைய பிறந்த நாளான இன்று பிறருக்கு உதவச் சந்தர்ப்பம் கிடைத்தது மகிழ்ச்சியாக இருக்கிறது'' என்றார் திருமதி காமா.

- பானுமதி இராமசந்திரன்

பணமா? கலைப்பொருளா? ; படமா? பாத்திரங்களா? ; இவைதான் பரிசளிக்க விரும்புகின்றவரின் மனதிலுள்ள பட்டிமன்ற வினாக்கள்.

ஆனால் அழகையும், பயனையும் சீர்தூக்கிப் பார்த்தால் நம்பகமான நடுவர் தீர்ப்பு 'ஸ்ரீபெட்' பக்கம்தான்.

# மணமக்களுக்குப் பரிசளிக்க மனசுக்குள் பட்டிமன்றம் !

திருமணம், புதுமனை புகுவிழா, பிறந்தநாள், பிரிவு உபசார விழா போன்ற எதற்கும் 'ஸ்ரீபெட்' அன்பளிப்புகள் மிகப் பொருத்தமானவை.

## ஸ்ரீபெட்

பாட்டில்கள் ● ஜாருகள்

சுகாதாரமானது. உடையாதது. உணவுத்தரம் கொண்டது.

**விலையும் மலிவு.**

4 ஜாருகள்
ரூ 105/-

3 ஜாருகள்
ரூ 55/-

## ஸ்ரீபெட் அன்பளிப்புகள்

கொடுத்தாலும் பெற்றாலும் குறையாத மனநிறைவு !




ஸ்ரீபெட்

ஸ்ரீராம் நிறுவனத்தின் தரமான தயாரிப்பு

விநியோகஸ்தர்கள்:
ஸ்ரீராம் சேல்ஸ் இண்டர்நேஷனல்

# நிறை குடம்

தீபாவளியை ஒவ்வொருவர் ஒவ்வொரு 'குடும்ப வழக்கத்'துடன் கொண்டாடுவார்கள். இவர்கள் எப்படிக் கொண்டாடுகிறார்கள் என நாலு பேரைக் கேட்ட போது -

### திருமதி வசந்தி சிவராமன் :

''நான் கிட்டத்தட்ட பதினாலு வருஷம் துபாய்ல இருந்தேன். இந்த வருஷம்தான் மெட்ராஸ் வந்திருக்கேன். தீபாவளி, வரலக்ஷ்மி விரதம், நவராத்திரி என்று எந்தப் பண்டிகையானாலும் தவறாமல் கொண்டாடி விடுவோம். எனக்கு மூன்று பெண்கள். நம் கலாசாரம் அவர்களுக்குத் தெரிஞ்சாகணும்னா எங்கே இருந்தாலும் நம் பண்டிகைகளைக் கொண்டாடியாகணும். விடிகாலையில எழுந்து எண்ணெய் ஸ்நானம் செய்து, புதுசு உடுத்திக் கொண்டு ஸ்வீட் சாப்பிடுவோம். மினி பாம்பே மாதிரி இருக்கும் நாங்க இருந்த இடம். துபாயில் தீபாவளி விடுமுறை கிடையாது. ஆனால் மறுநாள் லக்ஷ்மி குபேர பூஜைக்காக லீவு உண்டு. என் கணவர் அங்கே கடை வைத்திருந்தார். தீபாவளிக்கு மறுநாள் நண்பர்களையெல்லாம் பூஜைக்கு அழைத்து ஸ்வீட் கொடுப்போம். தீபாவளியன்று வீட்டுப் பெரியவர்களிடம் ஆசி வாங்கிக் கொண்டால் ஏற்படும் மனநிறைவே தனிதான். என்னுடைய அதிர்ஷ்டம் என்று தான் சொல்ல வேண்டும். என்னுடைய அண்ணாவின் குடும்பமும் துபாயில் இருந்தது. 200 கிலோ மீட்டர் தூரத்தில் இருந்தாலும் காரில் போய் நாங்கள் நமஸ்காரம் செய்து விட்டு வருவோம். வீட்டில் செய்த பட்சணங்களைக் கொடுப்போம். அண்ணா எங்கள் எல்லோருக்கும் துணிமணிகள் எடுத்துத் தருவார்! இந்த வருஷம் இரட்டிப்புச் சந்தோஷம்தான். பக்கத்துப் பெரியவர்களை இந்தத் தீபாவளியில் நமஸ்காரம் செய்ய முடியுமல்லவா? மாலையில் நண்பர் வீடுகளுக்குப் போவதும் தவறாது! முக்கியமாக தீபாவளிக்கே உரித்தான பட்டாசுகளை இந்த வருஷம் ஆசைதீர வெடிக்கப் போகிறோம். துபாயில் பட்டாசே வெடிக்கக் கூடாது.''

* திருமதி வசந்தி

### திருமதி பிரமீளா அனந்த சாமிராவ் :

''எங்களுக்குத் தீபாவளியைப் போலவே அதற்கு முன் தினம் இரவும் விசேஷமானதாகும். இதைத் ''தண்ணீர் நிரப்பும் பண்டிகை'ன்னு சொல்வோம். இப்பல்லாம் தண்ணீர் நிரப்பா விட்டாலும், இந்தப் பண்டிகையைக் கொண்டாடத்தான் செய்கிறோம். மறு நாள் வெந்நீர் போடும் தவலைக்கு கண்ணாம்பு பூசி மஞ்சள் குங்குமமிட்டு கழுத்தில் மஞ்சள் கயிறு கட்டுவோம். இப்போது கீசரில்தான் வெந்நீர் போடுகிறோம் என்றாலும், அதற்கும் மஞ்சள் கயிறு கட்டி, குங்குமம் வைத்தால்தான் திருப்தியாக இருக்கிறது. தண்ணீர் நிரப்பும் பண்டிகையன்று விருந்தில் கண்டிப்பாக சோமாசியும் மறுநாள் போளியும் இருக்கும். தீபாவளிக்குப் பிறகு மூன்றாம் நாள் பாவ்-பீஜ் என்போம். இந்த நாளில் சகோதரர் களுக்குச் சகோதரிகள் ஆரத்தி எடுத்து மரியாதை செய்ய, உடன்பிறந்தவர்கள் பணம் கொடுப்பார்கள். வெளியூரிலிருந்தாலும் சகோதரன் அனுப்புவது ஐந்து ரூபாயாக இருந்தாலும் அதைச் சந்தோஷமாக ஏற்போம். பாசத்தை வெளிக்காட்டக்கூடிய

* திருமதி பிரமீளா

பண்டிகையாக இருக்கின்றது.''



**திருமதி ஜெயலக்ஷ்மி பாலசந்தர் :**

''எனக்கு மூணு பிள்ளைகள். மூன்று பேருக்கும் கல்யாணமாகி விட்டது. மூன்று மருமகள்களும் மூன்று பெண்கள் எனக்கு. தீபாவளியாகட்டும் வேறு எந்தப் பண்டிகையாகட்டும் என் மாமியார் என்ன வழக்கம் சொல்லித் தந்திருக்கிறார்களோ அதில் ஒன்றைக் கூட விட மாட்டேன். முதல் நாள் இரவு எல்லா மருமகள் வீட்டிற்கும் போய், ஸ்வாமி முன் கோலம் போட்டு, பட்டாசு, லேகியம், எண்ணெய், சீயக்காய்ப் பொடி, புதுத்துணி எல்லாம் வைத்திருக்கிறார்களா என்று பார்ப்பேன். மறுநாள் விடிகாலை இரண்டு மணிக்கு எழுந்து முதலில் நான் ஸ்நானம் செய்வேன். பிறகு பிள்ளை நாட்டுப் பெண், பேரன் என்று எழுப்பி, மணையில் உட்கார வைப்பேன். எண்ணெய் வைத்துக் கொள்ளும் முன் ஒரு பட்டாசாவது வெடிக்க வேண்டும். பிறகு எல்லோருக்கும் எண்ணெய் வைத்து ஆரத்தி எடுப்பேன். அவர்கள் குளித்து விட்டு வரும் முன் இட்லி சட்னி தயா ராகி விடும். எந்த ஸ்வீட் ஆனாலும் பண்ணி விடுவேன். பிள்ளைகள் எனக்குப் புடவை வாங்கித் தருவார்கள். அது எவ்வளவுதான் விலையுயர்ந்த புடவையானாலும் என் கணவர் வாங்கிக் கொடுக்கும் புடவையைத்தான் தீபாவளி யன்று காலை உடுத்திக் கொள்வேன். எந்த விசேஷமா னாலும் என் குழந்தைகள் எல்லோரும் சேர்ந்து சாப்பிட நான் பரிமாறுவது மிகவும் பிடித்தமானதாகும்! பண்டிகை கள் குடும்பத்தில் சந்தோஷம், ஒற்றுமை, ஒருவருக் கொருவர் மதிப்பளித்தல் என்று எவ்வளவோ விஷயங்களுக்கு வழிகோலு கிறது.''

**திருமதி லதா :**

''தீபாவளியன்று நாம் புதுத்துணி உடுத்திக் கொண்டால் கொஞ்ச நேரம் சந்தோஷமாக இருக்கிறோம். புதுத் துணி வாங்க முடியாதவர்களுக்குக் கொடுத்தால் அவர்களுடைய சந்தோஷம் எப்படி இருக்கும் என்று நினைத்துப் பார்த்தேன். அதுவும் குழந்தைகள் என்றால்...! நான் யுனிக் எக்ஸ்போர்ட் என்ற நிறுவனத்தை வைத்துள்ளேன். ஆர்டர்களுக்காக வாங்கிய துணியில் எஞ்சியவற்றைத் தைத்து அனாதை ஆசிரமத்திலுள்ள சுமார் 200 குழந்தைகளுக்குக் கொடுக்க நினைத்திருக்கிறேன். பல வருஷங்களாகவே நான் தீபாவளிக்கென்று புதுசு வாங்குவதோ உடுத்துவதோ கிடையாது. பிறந்தகத்திலிருந்து புடைவை வரும். அதைக் கூட பிறகுதான் உடுத்துவேன். நினைத்தால் புதுப் புடவை கட்டிக் கொள்கிறோம். எப்போதும் பழைய துணிகளையே உடுத்தும் அனாதைக் குழந்தைகளுக்குத் தீபாவளியன்று இனிப்பும் புதுத் துணிகளும் தருவதில் நான் பல ஆயிரம் ரூபாய்களை இழந்தாலும் பெறுவது என்பது பல மடங்கு மனநிறைவை அல்லவா? தீபாவளி யன்று குறைந்தபட்சம் நானும் என் பெண்களுமாக 500 ரூபாய்க்காவது வெடி வெடிப்போம்! அதுதான் என் தீபாவளி வழக்கம்! இதில் குழந்தையோடு குழந்தையாகக் குதூகலிக்க முடிகிறதே!''

– கங்கா ராமமூர்த்தி



* திருமதி லதா

* திருமதி ஜெயலக்ஷ்மி





## மேஷ ராசி :

அசுவினி, பரணி, கிருத்திகை 1 - ஆம் பாதம்.

இடமாற்றம் ஏற்படலாம். அதனால் ஆதாயம் உண்டு. இதுவரை தொல்லை கொடுத்து வந்தவர்கள் இனி உங்கள் பக்கமே வர மாட்டார்கள். ஆனால் ஒரு பெண்ணால் கண்டிப்பாக மனக் கஷ்டம் ஏற்படும். அது வீட்டில் உள்ள பெண்ணாகவும் இருக்கலாம். அல்லது வெளியிடத்தைச் சேர்ந்தவராகவும் அமையலாம். எதிர்பார்த்த வெளிநாட்டுப் பயணம் தடைபடும். அரசியலில் ஈடுபட்டிருப்பவர்கள் கவனமுடன் செயல்பட வேண்டிய காலம். சிலருக்குத் தாய்மாமன் உதவியால் பதவியோ, பணமோ கிடைக்கும். ஆனியும் மாதம் முழுவதுமே குறிப்பாக மார்வலியாலோ, அல்லது மனத்தளர்ச்சியாலோ உடல்நலம் குன்றலாம். விருந்துண்ண சென்ற இடத்தில் மருந்துண்ணும் நிலைக்கு ஆளாகும் வாய்ப்பு ஒருசிலருக்கு ஏற்படும். ஆகாத நாட்கள் 1, 2, 27, 28, 29 தேதிகள். 7, 8, 9, 10 தேதிகளில் மகிழ்ச்சி நிலவும்.

## ரிஷப ராசி :

கிருத்திகை 2, 3, 4 - ஆம் பாதங்கள், ரோகிணி, மிருகசீரிஷம் 1, 2 - ஆம் பாதங்கள்.

திருமணத்திற்குக் காத்து நிற்கும் கன்னிப் பெண்களுக்கும் சரி, காளைகளுக்கும் சரி குரு பலம் நன்கு அமைந்துள்ளது. ஆனாலும் நிச்சயம் செய்யப்பட்ட திருமணத்திற்குக் கூட ஒரு பெண்ணால் சங்கடம் ஏற்படலாம். கிருத்திகை நட்சத்திரக் காரர்கள் கவனமுடன் இது விஷயத்தில் செயல்படுவது நல்லது. மாதத்தின் ஆரம்பத்தில் புதன் பதவி உயர்வைத் தருவார். ஆனால் பிற்பகுதியிலோ குடும்பத்தில் பிரிவினையை உண்டாக்குவார். இது அரசியலில் ஈடுபட்டிருப்பவர்களுக்கும் பொருந்தும். ஆட்சியில் உள்ள செவ்வாய் தசை நடப்பவர்களுக்குச் செவ்வாய் நன்மை செய்யலாம். ஆனால் மற்றவர்களுக்கு நெருப்பினால் கண்டம் உண்டு. கேதுவும் கூட இருந்தே கெடுப்பார். எனவே ஆறுதலையும், மாறுதலையும் பெற யானை முகத்தோனையும், ஆறுமுகத் தோனையும் சேர்ந்தே வணங்குங்கள். ஆகாத நாட்கள் 3, 4, 5 தேதிகள். 10, 11, 12 தேதிகளில் இலாபம் ஏற்படலாம்.

## மிதுன ராசி :

மிருகசீரிஷம் 3, 4 - ஆம் பாதங்கள், திருவாதிரை, புனர்பூசம் 1, 2, 3 - ஆம் பாதங்கள்.

மாதத்தின் பிற்பகுதியில் மகிழ்ச்சி நிலவும். பொன்னகைகள், புத்தாடை என புதிது புதிதாக உங்களை வந்தடையும். ஆனால் மாதத்தின் முற்பகுதியில் மனதில் குழப்பமே நிலவும். படத்துறையில் ஈடுபட்டுள்ள இந்த இராசிக்காரர்கள் பிற்பகுதியில் வெற்றிக்கொடி நாட்டும் நிலையைப் பெற்றிருந்தாலும், முற்பகுதியில் மனப் பதற்றத்துடன் காணப்படுவார்கள். நடிகைகள் புகழைத் தட்டிச் செல்வார்கள். செலவு மிக்க மாதமானாலும் சரிகட்டுவதற்குரிய உபரி வருமானம் கிடைக்கும். அஷ்டமத்துச் சனியை குரு பார்த்தாலும் நீச்ச சூரியனால் சற்று மனக்கவலை இருக்கத் தான் செய்யும். கவனமுடன் செயல்பட வேண்டிய நாட்கள் 5, 6, 7 தேதிகள். 13, 14, 15 தேதிகளில் நல்ல செய்திகள் எதிர் பார்த்தபடி கிடைக்கும். அது பெண்ணின் வேலை விஷயமாகவும் இருக்கலாம் அல்லது திருமணச் செய்தியாகவும் அமையலாம்.

## கடக ராசி :

புனர்பூசம் 4 - ஆம் பாதம், பூசம், ஆயில்யம்.

முதல் பதினைந்து நாட்கள் மகிழ்ச்சியுடன் சூரியக் கதிரவனும், புதனும் , ராகுவும் உதவுவார்கள். இதனால் படத்துறையினர்க்குப் பணலாபமும், பாராட்டும்

# இந்த மாதம்

கிடைக்கும். அரசு ஊழியருக்குப் பதவி உயர்வும், விரும்பிய இடத்திற்கு மாற்றமும் கிடைக்கலாம். ஆனால் மாதத்தின் பிற்பகுதி எல்லா வகையிலும் டென்ஷன் தான். ராகுவும் சுக்கிரனும் சுகத்திற்கும் சுப காரியத்திற்கும் அடிகோலுகிறார்கள். கடக ராசிக்காரர்களுக்குச் சுப யோக மாதம். ஏற்றமும் இறக்கமும் இருக்கத்தான் செய்யும். திருமணம், கட்டிடம் இவை சம்பந்தமான முயற்சிகளில் வெற்றி உண்டு. மற்றபடி ஷேர் மார்க்கெட், குதிரைப் பந்தயம் என எதிலும் ஈடுபட்டு விடாதீர்கள். கண்ணும் பாதிக்கப்படலாம். எண்ணும் எண்ணங்கள் நிறைவேறாமலும் போகலாம். எனவே எதற்கும் மாதத்தின் முற்பகுதியே ஏற்றது. எச்சரிக்கையுடன் செயல்பட வேண்டிய நாட்கள் 7, 8, 9, 10. எதற்கும் ஏற்ற தினங்கள் 15, 16, 17, 19, 20, 21. இந் நாட்களில் தனலாபம் உண்டு.



## சிம்ம ராசி :

மகம், பூரம், உத்திரம் 1- ஆம் பாதம்.

நல்லதொரு மாதம். புதிய ஜீவன் ஒன்று வர இருக்கிறது. வாகன யோகம் உண்டு. மாதத்தின் முற்பகுதியில் கண் பாதிக்கப்படும். பண விஷயத்தில் ஏமாற்றம், நஷ்டம் ஏற்படும். மற்றபடி மாதத்தின் பிற்பகுதியில் மகிழ்ச்சிகரமான சூழ்நிலை தான். எதிலும் வெற்றி. எதிர்நீச்சல் இருக்காது. நடிகர்களுக்கும், அவர்கள் நடித்த படங்களுக்கும் ஏகமவுசு ஏற்படும். அரசுத் துறையினர் தனலாபத்தையும், பதவி உயர்வையும் எதிர்பார்க்கலாம். சுப நிகழ்ச்சி ஒன்று நடக்கும். அது திருமண நிச்சய தார்த்தமாகக் கூட அமையலாம்; கணவன், மனைவியிடையே இருந்த ஊடல் நீங்கி வீட்டில் ஆடலும், பாடலும் அமர்க்களப் படும். சுப செலவுகள், ஆடை ஆபரண லாபம் என நல்ல நிலையிலேயே கழியும். இனி இந்த இராசிக்காரர்களுக்கு எதிர் நீச்சல் போட வேண்டியிருக்காது. ஏற்ற நாட்கள் 15 முதல் 25 வரை. ஆகாத நாட்கள் 10, 11, 12 தேதிகள்.

## கன்னி ராசி :

உத்திரம் 2, 3, 4 - ஆம் பாதங்கள், ஹஸ்தம், சித்திரை 1, 2 - ஆம் பாதங்கள்.

இராசிநாதனே கூட இரக்கம் காட்ட மாட்டார். சுக்கிரனைத் தவிர மற்ற அஷ்டக்கிரகங்களும் கஷ்டத்தையும், நஷ்டத்தையும், அவமானத்தையும், அபவாதத்தையும், கோபத்தையும் தந்து அமைதியையே கெடுக்கும் சூழ்நிலை. சுக்கிரன் ஒருவனே சுபச் சூழ்நிலையை உருவாக்குவார். நாம் நடந்து கொள்ளும் விதம் சரியானதா என மனசாட்சிக்கு ஏற்ப சிந்தித்து செயல்பட்டாலேயொழிய, சி ர ம த் தி லி ரு ந் து விடுபடுவது கடினமே. ஒரு கட்டத்தில் மனைவியின் பொறுமை, தாயின் சகிப்புத் தன்மை இவைகளுக்குக் கூட சோதனை ஏற்படுத்த வேண்டி இருக்கும். பதவி, இடமாற்றம் கூட எதிர்பார்க்கலாம். நட்பும் நயவஞ்சகம் செய்யும். நல்லதொரு தசாபுக்திகள் நடப்பவர்களுக்குக் கூடச் சஞ்சலம் தரும் மாதம். திருப்பதி வெங்கடேசனை நினையுங்கள். புதனுக்குரிய நவக்கிரக ஸ்தோத்திரத்தைப் பாராயணம் செய்து வாருங்கள். நல்ல நாட்கள் 15, 16, 17, 19, 20, 21 தேதிகள்.

## துலா ராசி :

சித்திரை 3, 4 - ஆம் பாதங்கள், சுவாதி, விசாகம் 1, 2, 3 - ஆம் பாதங்கள்.

சூரியனால் சுகமில்லை. எனவே அரசுப் பணியில் உள்ளவர்களும், தனியார்த் துறையில் உள்ளவர்களும் சோதனைக்கு ஆளாகலாம். ஆனால் தொழில் நுட்பக் கலைஞர்கள், நடிப்புத் துறையினர்

# எப்படி?



# வார்த்தைகள் வேண்டாம் வர்ணிக்க... கண்களே போதும்.

## ஐடெக்ஸ்
## காஜல் சுப்ரீம்

கவிதை பாடும் கருவிழிகள்......
மனதை கொள்ளை கொள்ளும்
கூர் விழிகள். அதன் ரகசியத்தை
உணருங்கள் இப்பொழுது.




அரவிந்த லாபரடரீஸ்,
சென்னை 600 033.

**ஐடெக்ஸ் -50 ஆண்டுகளுக்கு மேலாக உங்கள் நம்பிக்கையின் மகத்தான சின்னம்**



வெற்றி நடை போடுவார்கள். வியாபாரிகள் எதிர்வரும் தீபாவளித் திருநாளை யொட்டி அகலக் கால் வைத்து விடாதீர்கள். புதன் சாதகமான சூழ்நிலையில் இல்லை. வணிக வரி அலுவலகத்தாரால் ஒருசிலருக்கு நெருக்கடி ஏற்படலாம். பணியில் உள்ள பெண்கள் அவர்கள் எத்துறையில் இருந்தாலும் இலாபகரமான சூழ்நிலையில் இருப்பார்கள். பொன்னகைகள் வாங்குவது அடகு வைத்ததை மீட்பது போன்ற நிலை உருவாகும். தாயாரின் உடல்நிலை கவலை அளிக்கலாம். வெளிநாட்டுப் பிரயாணம் ஏற்படலாம். இந்த ராசிப் பெண்கள் வேலை வாய்ப்புப் போட்டிகளிலும், வெற்றிக்கனியைப் பறிப்பார்கள். இராகு இலாபத்தையும், கேது அதற்குரிய அளவிற்கு வீண் செலவினையும் ஏற்படுத்துவார். ஏற்றமிகு நாட்கள் 21, 22, 23. எச்சரிக்கையுடன் செயல்பட வேண்டிய நாட்கள் 23, 24, 16, 17 தேதிகள்.

## விருச்சிக ராசி :

விசாகம் 4 - ஆம் பாதம், அனுஷம், கேட்டை.

உடல்நிலை பாதிக்கப்படலாம். வியாபாரிகளும், அரசுப் பணியாளர்களும் சற்று எச்சரிக்கையுடன் செயல்பட வேண்டும். வீட்டிலும் பிரச்னைகள் தோன்றலாம். அது மகன் சம்பந்தமாகவும் இருக்கலாம். அல்லது மருமகள் காரணமாகவும் அமையலாம். சனி பகவான் கிருபையால் இரும்பு வியாபாரிகள், நல்லெண்ணெய் வியாபாரிகள், மற்றும் கருப்புக்கல் தொழிலில் ஈடுபட்டோர் கூடுதலான இலாபத்தை அடைவர். தனியார்த் துறையில் குறிப்பாக இரசாயன எரிபொருள் துறையினர் கணிசமான இலாபத்தை எதிர்பார்க்கலாம். வெளிநாட்டுப் பிரயாணமும் உண்டு. அது சம்பந்தமான ஆதாயமும் உண்டு. இரண்டில் உள்ள இராகு குடும்பத்தில் பிரிவினையை உண்டாக்கப் பார்க்கிறார். ஏற்றத் தாழ்வுமிக்க மாதம். சுக்கிரனால் சுபநிகழ்ச்சிக்கு ஏற்பாடாகும். அது வீடு வாங்கும் விஷயமாகவும் இருக்கலாம். திருமண ஏற்பாடாகவும் இருக்கலாம். மற்றபடி அஷ்டமத்தில் சந்திரன் அமையும் 17, 18, 19 தேதிகளை ஒதுக்குங்கள். 15, 16, 17 ஏற்றவை.

## தனுசு ராசி :

மூலம், பூராடம், உத்திராடம் 1 - ஆம் பாதம்.

சுக்கிரன் எதிர்பார்த்துக் காத்திருந்த திருமணத்தை நடத்தி வைப்பார். அது மகனுடைய திருமணமாகவும் இருக்கலாம். அல்லது திருமணத்திற்காகக் காத்திருக்கும் இந்த இராசிப் பெண்களின் திருமணமாகவும் அமையலாம். இன்னும் ஒரு வருடத்திற்கு கஜகேசரி யோக நிலை உண்டு. இதனால் கோடி தோஷங்கள் பரிகாரமடையும். பதவி உயர்வு உண்டு. அதனால் பயனும் உண்டு. மாதத்தின் முற்பகுதியில் எதிர்பாராத தனலாபம் ஏற்படும். நகைகள், வீட்டு மனை வாங்கும் யோகம் உண்டு. சுபக் கிரகங்களால் நன்மை ஏற்படும். அதே நேரத்தில் பாவக் கிரகங் களால் பாதகமும் ஏற்பட வாய்ப்பு உள்ளது. மாதத்தின் பிற்பகுதியில் கலைஞர்களுக்குப் பாராட்டும் பரிசும் கிடைக்கும். பிற்பகுதியில் அம்மான் வகை உறவில் பிரிவு ஏற்படும். வியாபாரிகளுக்கும், தொழிலாளர்களுக்கும் முதல் இரண்டு வாரங்களில் இலாபம் ஏற்படும். பிற்பகுதியில் வீண் செலவிற்கு வாய்ப்பு அதிகம். இலாபம் தரும் நாட்கள் 15, 16, 17, 25, 26, 28. ஆனால் எச்சரிக்கையுடன் இருக்க வேண்டிய நாட்கள் 19, 20, 21. ஆயினும் ஆட்சிச் சந்திரன் பாதிப்பு இருக்காது. தசா புக்திகள் சரியில்லாதவர்களுக்குச் சற்று சிரமம்தான்.

## மகர ராசி :

உத்திராடம் 2, 3, 4 - ஆம் பாதங்கள், திருவோணம், அவிட்டம் 1, 2 - ஆம் பாதங்கள்.

மாதத்தின் பிற்பகுதி சற்று கலகலப்பாக இருக்கும். மாதம் முழுவதும் நடிப்புத் துறையினர், அரசுப் பணியில் உள்ள பெண்கள், மற்ற கலைஞர்கள், அரசியல்வாதிகள் என அனைவருமே ஆதாயத்தைப் பெறக்கூடிய மாதம். இதுவரை இவர்களுக்கு இருந்த சிரமங்கள், மனவேதனை ஆகியவை குறையும். அரசியல்வாதிகளால் இதுவரைப் பழிவாங்கப்பட்டவர்கள் இனி நல்லதொரு நிலையை அடைவார்கள். குருவின் பார்வை பெறும் சனி, ஆட்சியில் உள்ளதால், கனரகத் தொழிற்துறையில் உள்ளவர்கள், கருப்புக் கல் வியாபாரிகள், பங்கு மார்க்கெட் துறையினர் மற்றும் கட்டிடக் கலைஞர்கள் ஆகியவர்கள் தங்கள் தொழிலை விரிவுபடுத்தத் தகுந்த நேரம் கனிந்து வந்துள்ளது. பயன்படுத்திக் கொள்ளுங்கள். இந்த இராசியில் பிறந்து திருமணத்திற்குத் தயாராக உள்ள ஆண் பெண் இருபாலருக்கும் குறிப்பாக மாதத்தின் பிற்பகுதியில் திருமணம் நிச்சயமாகும் சூழ்நிலை உள்ளது. வீடு கட்டும் யோகமும் உண்டு. பொன்னகைகள், வீட்டிற்குத் தேவையான விலையுயர்ந்த ஆசனங்கள், பீரோக்கள் ஆகியவை வாங்கும் வாய்ப்பு

# அறிமுகம் "ஒரே ஒரு" டூத்பேஸ்ட்

## உங்களது பற்களிலே கால்ஷியத்தை மீண்டும் சேர்ப்பதற்கென

**புதிய ப்ருடெண்ட் கால்ஷியம்**++ இப்போது உங்கள் பற்களை சீராக வைப்பதற்கு அருமையான புதியதோர் படைப்பு—புதிய ப்ருடெண்ட் கால்ஷியம்++ நாள்தோறும் உங்கள் பற்கள் இழக்கும் கால்ஷியத்தை மீண்டும் சேர்க்கும் இந்தியாவின் ஒரே ஒரு டூத்பேஸ்ட். ஆம் நாள்தோறும்.




தேர்ந்தெடுத்த நகரங்களில் மட்டுமே கிடைக்கிறது.



உங்கள் பற்களின் எடையைக் குறைய விடாதீர்கள். பற்களிலுள்ள எனாமல் அளவு அவற்றிலுள்ள கால்ஷியத்தைப் பொறுத்துள்ளது. நீங்கள் உண்ணும் ஆகாரத் துணுக்குகள் மற்றும் சர்க்கரைகள் மூலம் வெளிவரும் தீங்கிழைக்கும் அமிலங்கள் இந்த எனாமலை அழிக்கின்றன. இதனால் வலி ஏற்படுத்தும் பற்குழிகள் ஏற்படுகின்றன. ஆகவே, பற்களின் எடையை ஒருபோதும் குறைய விடக்கூடாது.

**பிரஷ் செய்து அவற்றை உயிர்ப்பிக்கச் செய்யுங்கள்!** புதிய ப்ருடெண்ட் கால்ஷியம்++ கரையும் கால்ஷியம் அடங்கிய, இந்தியாவின் ஒரே ஒரு டூத்பேஸ்ட். எனாமல் வலிவிழக்கும் பகுதிகளை இது மீண்டும் வலிவு பெறச் செய்கிறது. ஆம், மீண்டும் சேர்க்கப்பட்ட இந்த கால்ஷியம் வாயை அலம்பும்போது வெளியேறுவதில்லை.

இதை உங்கள் பற்களது ப்ரோட்டீன் என்றுகூடச் சொல்லலாம்.



ஆகவே, ப்ருடெண்ட் கால்ஷியம்++ வாங்குங்கள். பற்களை சீராக வையுங்கள். மிண்டின் புத்துணர்ச்சி தரும் சுவையுடன்.

உங்கள் பற்களுக்கு நலம் இன்று
உங்கள் பற்களுக்கு நலம் நாளை.

உறுதியான பற்கள்...

எதை சாப்பிட்டாலும்சரி!

கால்ஷியம் யம் யம்!

PARLE

BW/92/1011/TAM

# எனக்கு – என் அம்மாவுக்கு ஏன் என் பாட்டிக்குக் கூட!

பெமிரு

10,11 மேலச்சித்திரை வீதி, மதுரை

“எங்கள் குடும்பத்தில் திருமண நாளானாலும் சரி, தீபாவளி – பொங்கல் போன்ற திருநாட்கள் ஆனாலும் சரி என்றைக்கும் சேலைகள் வாங்க நாங்கள் நாடுமிடம் பெமினா ஒன்றேதான்...

Femina
OCEAN OF SAREES

சந்தைக்கடை போல கூச்சலின்றி ரம்மியமான சூழலில் மனதுக்குப் பிடித்த சேலைகளை மனம் மகிழ தேர்வு செய்ய சிறந்த பட்டு ஜவுளிக்கடையும் பெமினா தான்...

பெமிரு சில்க்ஸ்

30, மேலச்சித்திரை வீதி, மதுரை

Femina
OCEAN OF SAREES

பெமிரு சேரீஸ்

கோல்ச்சா காம்ப்ளக்ஸ், அண்ணாநகர், மதுரை.

பெண்களுக்கு மட்டுமே இந்தக்கடை என்பதால் எங்களுக்கெல்லாம் மிக மிகப் பெருமை.. எனக்கு, என் அம்மாவுக்கு, ஏன் என் பாட்டிக்குக் கூட சேலைகள் வாங்குவதென்றால் நாங்கள் பெமினாவில் தான் வாங்குவோம்...

Femina
OCEAN OF SAREES

சேலைகளுக்கு மட்டும் ஒரு கடை ஆரம்பித்து மதுரையில் 25 ஆண்டுகள் சிறப்பாக செயல்பட்டு வெள்ளி விழா காண்கிறது என்றால் அதற்குக் காரணம் பெமினாவின் தரமான சேலைகள் தான்.”

பெமிரு

ஹோட்டல் தமிழ்நாடு வளாகம்,
அழகர் கோவில் சாலை மதுரை.

இன்பமயமான

**25**

ஆண்டுகள்

Femina
OCEAN OF SAREES

இது எங்கள் குரலல்ல – எங்களைப் பற்றி ஒலிக்கும் எங்கள் வாடிக்கையாளரின் இனிய குரல்.

மதுரையில் வெள்ளி விழா கண்ட மாபெரும் ஸ்தாபனம்.

UNIQUE/FS/1909/7/92

உண்டு. வியாபாரிகளுக்கு நல்ல இலாபகரமான நிலை உண்டு. மறுதேர்வு எழுதும் மாணவ மாண விகளுக்கு வெற்றி ஏற்படும். ஆகாத நாட்கள் 21, 22, 23. இலாபகரமான தேதிகள் 27, 28, 29.



## கும்ப ராசி :

அவிட்டம் 3, 4 - ஆம் பாதங்கள், சதயம், பூரட்டாதி 1, 2, 3 - ஆம் பாதங்கள்.

விரய பாகத்தில் உள்ள சனி, குரு பார்வை பெறுவதால் விபரீதமாக ஒன்றும் நடக்காது தடுக்கப்படும். ராகுவால் வாகன யோகம் உண்டு. குடும்பத்தில் சகஜமான உறவு நிலை நீடிக்கும். கேதுவும், செவ் வாயும் சகோதரர்களிடையே சச்சரவைத் தோற்றுவிக்கலாம். புத்திரர்களால் மனக் கவலை உண்டாகும். அது அவர்களது நடத்தை காரணமாகவோ, படிப்பில் பிடிப்பு இல்லாமல் சுற்றுவதாலோ கூட ஏற்படலாம். ஆனால் கவலைப்படத் தேவையில்லை. பெண்ணால் கூட கவலை தோன்றலாம். அஷ்டமத்துக் குரு சற்று ஆட வைத்து வேடிக்கை பார்ப்பார். ஆனால் இராசிநாதனுக்கு 9, 10க்குடையவர்கள் 10ல் ஒன்று சேர்ந்து தருமகருமாதிபதி யோகத்தை மாதத்தின் பிற்பகுதியில் தருவதால் எதிர்பாராத தனலாபமோ, பதவி உயர்வோ, தொழில் முன்னேற்றமோ ஏற்படும். ஆகாத நாட்கள் 23, 24, 25 தேதிகள்.

## மீன ராசி :

பூரட்டாதி 4 - ஆம் பாதம், உத்திரட்டாதி, ரேவதி.



இராசிநாதனின் பார்வையால், இதுவரை இருந்த குழப்ப நிலையும் பொருளாதார நெருக்கடியும், உடல் நோயும் படிப்படியாக மாறி நல்லதொரு நிலைக்கு உங்களைக் கொண்டு செல்லும். சனீஸ்வர வால் இலாபமும், தொழிலில் ஏற்றமும் உண்டு. அலுவலகப் பெண்களுக்கு பண ஆதாயத்துடன் பதவி உயர்வு வரலாம். நகை மீட்கப்படும். புது நகை வாங்கலாம். புதுத் தொழிலும் ஆரம்பிக்கலாம். நடிப்புத் துறையினர்க்கு திடீர் யோகம் ஏற்பட்டு, இதுவரை உங்களை ஓரங்கட்டியவர்கள், உங்களைத் தேடி வந்து நல்லதொரு வாய்ப் பைத் தருவார்கள். திருமண வாய்ப்பு வந்தும் திடீரென நின்று விட்ட நிலையில் உள்ளவர்களுக்கு, மீண்டும் அந்த வாய்ப்பு வந்து திருமணம் நடக்கும். மீனராசிக்காரர் களுக்கு இதுவரை எழுதி வந்த நல்ல அம்சங்களில் ஒன்று கூட நிறைவேறவில் லையே என ஏங்கும் நிலை இருந்தது உண்மைதான். ஆனால் இப்போது நிலைமை மாறியுள்ளது. எனவே புது முயற்சி மேற்கொள்ளுங்கள். இது எத்துறை யினருக்கும் பொருந்தும். ஞானி ஒருவ ராலோ, அல்லது வெளிநாட்டவர் ஒருவ ராலோ உங்களுக்கு ஒரு நன்மை ஏற்பட வாய்ப்பு உள்ளது. தொல்லை கொடுத்த புத்திரர்கள் இனி உங்களுக்கு அனுசரணை யாக இருப்பார்கள். ஏற்ற நாட்கள் 5, 6, 7 தேதிகள். ஒதுக்கப்பட வேண்டியவை 25, 26, 27 தேதிகள்.

## அழிவைத் தந்து புகழைப் பெறச்செய்யும் அங்காரகன்!

உள்ளதை உள்ளபடி உரைக் கும் உங்கள் கை உங்களது உடன் பிறப்புகளைப் பற்றியும் உணர்த் தும். ஜாதகத்தில் செவ்வாய் எனும் அங்காரகனே அண்ணன் தம்பி களைப் பற்றியும், அக்காள் தங்கை யைப் பற்றியும் கூறும் கிரகமாக விளங்குகிறார். குறிப்பாக குருவுக் கும் சுக்கிரனுக்குமிடையேதான் ஜாதகத்தில் செவ்வாய் கிரகத்திற்கு இரு வீடுகளை ஒதுக்கியுள்ளனர். அது போலவே உள்ளங்கையிலும் பிரதான செவ்வாய்மேடு குரு மேட்டிற்கும் (m) சுக்கிரமேட்டிற் கும் இடையே காணப்படும். இந்த



செவ்வாய் மேட்டின் மீது காணப்படும் (x-y) ரேகை செவ்வாய் ரேகை. இதைத் துணை ஆயுள் ரேகை என்றும், இளைய ஆயுள் ரேகை என்றும் கூறுவர். சாதாரணமாகச் செவ்வாய்க் கிரகத்துக்கென்று சில சிறப்புகள் உண்டு. உடலில் உள்ள உதிரத்திற்குக் காரகன் செவ் வாய். நிலமகளின் கர்ப்பத்தில் உதித்து, மின்னலைப் போன்ற ஒளியுடன் திகழ்ந்து, மங்களன் எனும் பெயர் பெற்றுள்ள அங்காரகனே உடல் உறுதிக்கும், மனஉறுதிக்கும் காரணமாகிறான். ஜாதகத்தில் மேஷத்தில் இருந்து கொண்டு, தனது மற்றொரு வீடாகிய விருச்சிகத்தைப் பார்க்கும் சிறப்பினைப் பெற்றவன். இந்தச் சிறப்பு வேறு எந்த கிரகத்திற்கும் இல்லை. தன் வீட்டிலிருந்து கொண்டு தன் வீட்டையே பார்க்கின்ற ஒரே கிரகம் செவ்வாய். புரட்சியாளர்களையும், புரட்சிக் கலைஞர்களையும் தோற்றுவிக்கும் ஆற்றலைப் பெற்றவன் அங்காரகன். அவனருள் இருந்தால் அரசியலில் ஒரு மாபெரும் தலைவனாக வரலாம். மன்னவன் ஆகும் யோகத்தைத் தருபவன் செவ்வாய். காவல் துறை, சுங்கத் துறை, மற்றும் இராணுவத் துறை ஆகியவற்றில் பணிபுரிபவர்களுக்குச் செவ்வாய் ஆட்சி உச்சத்தில், அல்லது ஒரு கேந்திரத்தில் இருப்பதைக் காணலாம். இரசாயனத் துறை, அனல்மின் துறை, மற்றும் எரிபொருள் துறை ஆகியவற்றிற்கும் அவனே காரணமாகிறான். திருமணப் பொருத்தம் பார்க்கும் போது செவ்வாய் இரு ஜாதகத்திலும் தோஷமின்றி இருக்க வேண்டும். சில ஜாதகங்களில் செவ்வாயுடன் குரு, சனி, ராகு, கேது போன்ற கிரகங்களின் பார்வை பெற் றிருந்தால் தோஷ பரிகாரம் ஏற்படும். அப்படிப்பட்ட தோஷ பரிகாரங்களை உடைய ஜாதகங்களைத்தான் சேர்க்க வேண்டுமென்பது ஜோதிட விதிகளில் ஒன்றாகும்.

ஒருவரது கையில் உள்ள செவ்வாய்மேட்டில் (s) ஒரு நட்சத்திரக் குறி, அல்லது கூட்டல் குறி (+) இருந்தால் அவருக்குக் கட்டாயம் செவ்வாய் தோஷம் உண்டு. அரசியல் தலைவராக இருந்து அவரது செவ்வாய்மேட்டில் நல்லதொரு ரேகை (x-y) அமைந்து அதே சமயம், பாம்புவிரல் என்றும், சனிவிரல் என்றும் அழைக்கப்படும் நடுவிரலின் முதல் அங்குலாஸ்தியில் ஒரு நக்ஷத்திரக் குறியும் (s) காணப்பட்டு, விதி ரேகையில் ஒரு குறுக்கு வெட்டியும் (c-r) அமைந்திருந்தால், அத்தகையவர்கள், தங்களது அரசியல் வாழ்க்கையில் புகழுடன் அகில உலகிலும் போற்றும் தன்மையுடன் இருக்கையில் எதிர்பாராத விதமாக வெடிகுண்டு, அல்லது வாகன விபத்து ஆகியவைகளில் தங்கள் உயிரை இழக்க நேரிடும் என்பதைக் காட்டும். எனவே இத்தகைய குறிகள் காணப்படுகின்ற அரசியல்வாதிகள் மிகுந்த கவனத்துடனும், சதாசர்வ காலமும் பாதுகாப்புடனும் செயல்பட்டால், அத்தகைய அகால மரணத்திலிருந்து தப்பலாம். அவ்வாறு ஆபத்துக்களிலிருந்து தப்புவதற்குக் கூடச் செவ்வாய் மேட்டில் அல்லது சனி மேட்டில் ஒரு சதுரக் குறி (D) காணப்பட வேண்டும். அத்தகையவர்களுக்கு ஆபத்தான சூழ்நிலை இருந்தாலும் அவர்களை ஒன்றும் செய்யாமல் இத்தகைய சதுரக்குறி காப்பாற்றிவிடும். ஆயுள் காரகனின் தசை நடந்து அங்காரகனின் பார்வை, லக்னம், ராகு மற்றும் சனி இவர்கள் மீது பட்டால் அத்தகைய ஆபத்து அந்தக் குறிப்பிட்ட காலங்களில் நடக்கும் என்பது பொருள். ஆகவே அரசியலில் ஒருவரைத் தூக்கிவிட்டு அவர் புகழேணி யின் உச்சியில் இருக்கும் போது அவரது பூத உடலுக்கு அழிவைத் தந்து, காலத்திலும் அவர் அழியா இடத்தையும், புகழையும் பெறும் அளவிற்கு அவரை மாற்றுபவன் அங்காரகனே ஆவான்.

– ஜெயலட்சுமி கிருஷ்ணன்

**கடையில் வாங்கிய அல்வாவோ அல்லது வீட்டில் செய்த அல்வாவோ சில தினங்கள் ஆகிவிட்டால் நெய் உறைந்து காணப்படும். வாணலியை லேசாகச் சூடு படுத்திவிட்டு அல்வாவை அதில் போட்டுப் புரட்டி எடுத்தால் அப்போதுதான் செய்த புத்தம்புது அல்வா போல் சுவையாக இருக்கும். (இது என் அனுபவத்தில் கண்டது.)**

**– எஸ். உமா**



## இவர்கள் அனைவரும் உங்கள் இல்லத்திற்கு வந்தால்,
## அவர்கள் பருக எதை வழங்குவீர்கள்...

SAGAR
SKIMMED
MILK POWDER
SPRAY DRIED

ஒவ்வொரு சாகர் ஸ்கிம்ட் மில்க் பவுடர் பேக் உங்களுக்கு வளமான புரதச் சத்துள்ள $5^1/_4$ லிட்டர் பாலைத் தருகிறது ஆம்! இத்தனை எளிதாக இவ்வளவு பாலை நீங்கள் இதுவரை தயாரித்தது இல்லை. அபரிமிதமான பாலைப் பெற, இன்றே வாங்குங்கள் சாகர்.

---

கோவை அவினாசிலிங்கம்
மனையியல் கல்லூரி
துணைவேந்தர் திருமதி
ராஜம்மாள் தேவதாஸ்
இங்கே குறைந்த செலவில்
தீபாவளி பலகாரங்கள் செய்வது
பற்றிக் கூறுகிறார்....

# துணைவேந்தர் கூறும் தீபாவளி சமையல் குறிப்புகள்...



தீபாவளி பண்டிகையின் போது, பல விதபலகாரங்களை நாம் செய்து உண்பது வழக்கம். அன்றாட வாழ்க்கையில் உணவுப் பொருட்களின் விலைகள் ஏறிக் கொண்டே போகின்றன. இதனால் ஏழை எளியவர்கள் மிகவும் பாதிக்கப் படுகின் றார்கள். குறிப்பாக பெண்களுக்கு இது பெரும் பிரச்னையாக இருக்கின்றது. விலை மிகுந்த நெய், முந்திரிப் பருப்பு முதலிய பொருட்களை வாங்குவது பெரும் பாடாக இருக்கிறது. அதற்குப் பதிலாக விலை குறைந்த ஆனால் சத்து நிறைந்த சோயா, பாசிப் பருப்பு, கோதுமை, வெல்லம் போன்ற பொருட்களால் சுவை மிக்க உணவுப் பண்டங்களை தீபாவளிக் குத் தயார் செய்யலாம்.

## 1. லட்டு

தேவையான பொருட்கள் :
கடலை மாவு - 100 கிராம்
சோயா மாவு - 50 கிராம்
சூடுபடுத்திய எண்ணெய்
அல்லது நெய் - 100 கிராம்
சர்க்கரை பொடித்தது - 150 கிராம்
ஏலக்காய் - 3 கிராம்
செய்முறை :

கடலை மாவையும், சோயா மாவை யும் வாணலியில் விட்டு பொன்னிறமாகும் வரை வறுக்கவும். இதனுடன் பொடித்த சர்க்கரை, ஏலக்காய், எண்ணெய் ஆகியவை கலந்து சிறுசிறு உருண்டைகளாகப் பிடிக்க வும். சுவைமிக்க சத்துள்ள லட்டு தயார்.

## 2. டயமண்ட் கட்ஸ்

தேவையான பொருட்கள் :
சோயா மாவு - 50 கிராம்
மைதா - 50 கிராம்
டால்டா - 20 கிராம்
உப்பு - தேவையான அளவு
மிளகாய்த் தூள் - 1 டீஸ்பூன்

எண்ணெய் பொறிப்பதற்கு

செய்முறை :

மைதா மாவையும், சோயா மாவையும் உப்பு சேர்த்துச் சலித்துக் கொள்ளவும். அதனுடன் டால்டா, மிளகாய்த் தூள் சேர்த்து பிசைந்து கொள்ளவும். பின் சப்பாத்தி போல் வட்டமாக இட்டு, சிறு துண்டுகளாக டயமண்ட் வடிவில் வெட்டி, எண்ணெயில் போட்டுப் பொறித்து எடுக்கவும்.



## 3. கோதுமை பாயசம்

தேவையான பொருட்கள் :

கோதுமை - 100 கிராம்



வெல்லம் - 200 கிராம்

கடலைப் பருப்பு - 25 கிராம்

செய்முறை :

கோதுமையை வறுத்து ஒன்று இரண்டாக உடைத்து, வேகவைத்துக் கொள்ளவும். அதனுடன் பொடித்த கடலைப் பருப்பு, வெல்லம் சேர்த்து கொதிக்க வைக்கவும். வாசனைக்கு ஏலக்காய், சுக்கு போடலாம். சுவை மிகுந்த பாயசம் ரெடி.

## கோதுமை லட்டு

தேவையான பொருட்கள் :

கோதுமை - 100 கிராம்

பாசிப்பருப்பு - 80 கிராம்

பொட்டுக் கடலை - 25 கிராம்

வெல்லம் - 200 கிராம்

ஏலக்காய் - 4

செய்முறை :

கோதுமை, பாசிப்பருப்பு, பொட்டுக்கடலை ஆகியவற்றை வறுத்துப் பொடி செய்து கொள்ளவும். வெல்லத்தைப் பாகு வைத்து பொடி செய்தவைகளுடன் சேர்த்து சிறு உருண்டைகளாக பிடிக்கவும். சத்துள்ள லட்டுகள் தயார்.

கோதுமைக்குப் பதிலாக ராகி, சோளம் அல்லது மக்காச் சோளம் இவற்றையும் பயன்படுத்தலாம்.

மேலும் அவர் கூறும் சில யோசனைகள் :

- முறுக்கு, தட்டை செய்யும் போது, எண்ணெய் குறைக்க நிலக்கடலையை வறுத்து பொட்டுக் கடலையோடு சேர்த்து, கொஞ்சம் ஓமப்பொடி சேர்த்துக் கொண்டால் எண்ணெய் அளவு குறையும். செலவும் குறையும். சத்து அதிகமாக இருக்கும்.
- தீபாவளி அன்று நிறைய இனிப்புகளைச் சாப்பிடாமல் தவிர்ப்பது நல்லது.
- பச்சை காரட் சாப்பிட்டு விட்டு இனிப்புச் சாப்பிடுவது வாந்திவரும் உணர்வைத் தடுக்கும். தீபாவளி பலகாரம் சாப்பிட்டு விட்டு வாந்தி, அஜீரணக் கோளாறுகள் வராமல் தடுக்க 'தீபாவளி லேகியம் (வேப்ப இலை, இஞ்சி கலந்தது) அவசியம் சாப்பிட வேண்டும்.

பேட்டி,

**விஜயா கண்ணன்**

'நல்ல' என்ற அடைமொழி யோடு, மாமியார், மருமகள் அமைவது எப்படி அதிர்ஷ்டமோ, அதேபோல்தான் நல்ல வேலைக் காரி அமைவதும். வாடகை வீட் டில் இருந்தால் நல்ல வீட்டுக் காரர்கள் அமைவது, சொன்ன டயத்தில் காலி செய்யும் நல்ல குடித்தனக்காரர்கள் அமைவது ஆகிய எல்லாமே அவரவர் களின் பூர்வ ஜென்ம சுகிருதங்கள்.



எங்கள் வீட்டில் நல்ல வேலைக்காரி அமைந்தது என் அதிர்ஷ்டமோ என்னவோ, அவளுக்கு நான் நல்ல 'மேம் சாப்' பாக இருப்பதைத்தான் அவள் தன் அதிர்ஷ்ட மாக தினமும் கூறுகிறாள். காரணம் நான் கீறிய கோட்டை - ஸாரி, ஸாரி - அவள் கீறின கோட்டை நான் ஒரு போதும் தாண்டுவதும் இல்லை. தாண்ட முயற்சித்ததும் இல்லை என்பதால்தான் அவளுக்கு என்மேல் அவ்வளவு பிரியம்.

வேலைக்கு வரும் போதே 'டென் கமாண்மெண்ட்ஸ்' எனக்குக் கொடுத்து விட்டுத்தான் அவள் வீட்டின் உள்ளேயே நுழைவேன் என்றாள். நானும் 'ஓகே' சொல்லி விட்டேன்.

மாதத்தில் இரண்டு நாள் கட்டி (விடு முறை) வேணும். ஓகே! துணிமணிகளை

# மேம்சாப்

அவள் வருவதற்கு முன்னால் சோப்பில் ஊறப் போட்டு வைத்திருக்கணும். ஓகே! (அன்று திடீரென்று கட்டி போட்டால், துவைத்த மணி மறுநாள் வரை ஜலத்தில் நாறுவது அவள் பொறுப்பல்ல) திடீர் கட்டிகளுக்குச் சில சமயங்களில் முன்னறிப்புத் தர இயலாது. ஓகே! தினமும் பாத்திரங்களை ஜலத்தில் ஊறப் போட்டு வைத்திருக்கணும். ஓகே! (அப்பத்தான் பாதி சாமான்களை வெறுமனேயே அலம்பி வைத்து விடலாம்!). நல்ல வேளை, தான் வருவதற்குள் வீடு மொழுகும் துணியும், ஜாடுவுமாக நான் கையில்



வைத்துக் கொண்டு தயாராக நிற்கணும் என்று சொல்லவில்லை. அப்படிச் சொன்னாலும் நான் தயாராக இருக்க வேண்டியதுதான்.

க ஷ் ட மே மா, நஷ்டமோ கிடைத்தவளை விடாமல் பிடித்துக் கொள்வது என்று தீர்மானிக்கும் போது கண்டிஷன்களுக்குப் பயந்தால் முடியுமா? மாமியாருக்கே சில சமயம் பயப்படாதவள், பிம்லாவின் ஒவ்வொரு சொல்லுக்கும் நான் கட்டுப்பட்டுக் கொண்டிருப்பேன். என் பெண்கள் வாயைப் பொத்திக் கொண்டு சிரிப்பார்கள். சிரித்துவிட்டுப் போகட்டும். என் முதுகு வலியும், தோள் வலியும் எனக்குத்தான் தெரியும்.

'என்னமோ நீதான் பெரிசா அலுத்துக்கறே. அந்தகாலெ நாலும் பொண்ணாப் பொறந்திருக்குன்னு. எங்கம்மாவுக்கு நா பதினஞ்சாவது பிள்ளை தெரியுமா? எங்கப்பா தன்னோட குமாஸ்தா சம்பளத்துல எட்டு பொண்களுக்குக் கல்யாணம் பண்ணியிருக்கார். (இவர் எந்த உலகத்தில் இருக்கார்?) இவர் ஆபீஸ் பியூன் கூட இவர் அப்பா வாங்கிய குமாஸ்தா சம்பளம் வாங்குகிறாரா இன்று?

நல்ல வேளை, ஒன்பதாவது இவர் மிச்சம். பாக்கி ஆறும் அரைகுறை வயதில் விஷஜுரம் வந்தும், அம்மை போட்டியும் இறந்து விட்டதாம். இல்லா விட்டால் வீட்டில் இன்னும் எத்தனை நாத்தனார்களோ? மைத்துனர்களோ? உள்ளூரில் யாரும் இல்லை. எல்லோரும் வெளியூரில்தான் இருக்கிறார்கள். அதனால் கணக்கு வைத்துக் கொண்டு அவருடைய சகோதரிகள் வருஷா வருஷம் பட்டாளத்தோடு லீவுக்கு வந்துவிடுவார்கள். பிறகு பள்ளிக் கூடம் திறந்து பத்து நாள் ஆன பிறகு தான் மனமில்லாமல் ஊருக்குப் போவார்கள்.

பேரன் பேத்திகளைப் பிரிய தாத்தா பாட்டிக்கும் மனமிருப்பதில்லை. அம்மா அப்பாவைப் பிரியும் போது பொண்களுக்கும் குளமாகக் கண்ணீர் ஓடும். என் குழந்தைகள் நாலும் ரயில்வா எப்படி இருக்கும் என்று பரிதாபமாகக் கேட்காத குறையாக அவர்களைப் பார்த்துக் கொண்டு நிற்கும்.

'ஸ்ரீமயி'



ஊருக்குக் கிளம்பும் போது கூட, 'சித்ரா! அடுத்த லீவுக்குக் குழந்தைகளை அழைத்துக் கொண்டு நீ கட்டாயம் வரணும். நீதான் வருவதே இல்லை. நாங்க அக்கா தங்கைகள்தான் மாத்தி மாத்தி வருஷா வருஷம் வந்து கொண்டிருக்கோம்' என்று ஒருத்தி வாயிலாவது வரணுமே? ஊஹூம்.

கிளம்பும் சமயத்தில் கூடத் தன் அம்மாவிடம் மட்டும், 'அம்மா! அடுத்த லீவுக்கு மைதிலி குழந்தைகளோட இங்க வரப் போறாளாம். இங்கேந்து பத்ரிநாத், சிம்லா, அமர்நாத் எல்லாம் போகலாம்னு இருக்காளாம். லெட்டர் போட்டிருந்தாள். நீயும் வரதானால் முன்கூட்டியே எனக்கு எழுதிடு. சேர்ந்து போலாம்னு எழுதியிருக்காள். அவர் சம்மதிப்பாரோ என்னவோ தெரியலை. சின்னச் சின்னக் குழந்தைகளை வெச்சுண்டு அங்க பனியிலெல்லாம் போயி மாட்டிண்டா நாமதான் சிரமப்படுவோம். குழந்தைகள் கொஞ்சம் பெரிசாகட்டும் பார்க்கலாம்னு சொல்லிண்டிருக்கார்'' என்று எதையோ கோட்டை விட்டாற் போல ஒரு ஏக்கத்தோடு அம்மாவையும் அப்பாவையும் பிரியாவிடை பிரிந்து போவாள்.

என் வேலைக்காரி பிம்லாவுக்குத்தான் கோபம் பொத்துக் கொண்டு வரும். ''வருஷம் தவறாம ஒன்னோட நநத்' எல்லாமே வந்து கொண்டிருக்காளே. நீயும் உன் குழந்தைகளும் எங்கயும் போக மாட்டாயா? உன் 'மைக்கே'வுக்குக் கூடப் போக மாட்டாயா? (எல்லாமே ஒருமையில்தான் பேசுவாள்) என்று கேட்பதோடு நிறுத்திக் கொள்ள மாட்டாள். அந்த ஒரு மாதமும் ஏகப்பட்ட பத்து தேய்ப்பதும், துணி துவைப்பதும் அவள் தோள் அசந்து போய்விடும். போற போக்கில் பிம்லாவின் கையில் அந்த பத்து என்று அவர்கள் கொடுக்காமல் போவது தான் அவள் ஆத்திரத்தைக் கிளப்பி விடும்.

என் மாமியாரிடம் இதெல்லாம் கத்தினா என்ன? என்னிடம்தான் பொறுமுவாள். நான் என்ன செய்வேன்? நான் போயி அவகிட்டப் பணம் கேட்க முடியுமா? கேட்டாலும் 'ஏண்டிம்மா, நீ மாதா மாதம் சம்பளம் குடுக்கறயோவோ? ஏதோ ஒரு மாசம் நாலு பாத்தரமும், நாலு துணியும் கூட விழுந்தா அதுக்குப் பணம் வேணுமாக்கும்? என் தம்பி முரளி கிட்ட அந்தபத்து கூட இல்லாமப் போச்சா? வாங்கிக் குடுக்க வேண்டியதுதானே? வேலைக்காரிக்கு நீ சிபாரிசு பண்றயா?' வேண்டுமென்றே தன் தானைப் பார்த்துக் கொண்டே பேசுவாள். இரண்டு பொண்களுமே என் கணவருக்கு அக்காக்களாகி விட்டதால் என்னால் எதற்குமே வாயைத் திறக்க முடியாது. கடைசி நாத்தனார் கீதா என்னைக் காட்டிலும் இரண்டு வயதுதான் பெரியவள்.

ஒருநாள் என் கணவர் எதேச்சையாக என்னிடம், ''சித்ரா! கீதா உன்னைக்காட்டிலும் ரெண்டு வயசு தான் பெரியவள். நீயும் கீதாவும் கிட்டத்தட்ட பார்ப்பதற்கு ஒரே மாதிரிதான் இருக்கிறீர்கள். நீ கீதாவைப் பெயர் சொல்லியே கூப்பிடு.'' என்றார் அவள் முன்னாடியே.. அவ்வளவு தான். கீதாவுக்கும் என் மாமியாருக்கும் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடிக்க ஆரம்பித்துவிட்டது.

''நல்லா இருக்குடா நீ பேசறது. அவ வயசு என்ன, அவ ஸ்தானம் என்ன? இவளிக்கிப் பெயர் சொல்லிக் கூப்பிடுவா. நாளைக்கு நாத்தனார்ங்கற மரியாதையில் லாமப் போயிடும். அப்புறம் ஒம் பொண்டாட்டி தம் பொண்களை ஏவற மாதிரி அவளையும் ஏதாவது வேலை ஏவ ஆரம்பித்து விடுவாள். 'அதைச்செய், இதைச் செய்' என்று உரிமை எடுத்துக்க ஆரம்பிச்சுடுவாள். எல்லாம் அதது 'அத்துல' இருந்தாதான் மதிப்பும் மரியாதையும் இருந்துண்டே இருக்கும்.''

என் நாத்தனார் பேசுவதற்குள் என் மாமியாரே பேசி என் கணவரின் வாயை

சமோசாவுக்கு மாவு பிசையும் போது மைதா மாவைச் சலித்து ஒரு மெல்லிய துணியால் கட்டி இட்லித் தட்டின் மேல் வைத்து ஐந்து நிமிடங்கள் வரை ஆவி பிடித்துப் பிறகு உப்பு, சீரகம், டால்டா போட்டுப் பிசைந்து சமோசா செய்து பாருங்கள். மிகவும் மிருதுவாக, அதே சமயம் மொறு மொறுப்பாகவும் இருக்கும். டால்டாவும் கொஞ்சம் போட்டால் போதும்.

- கீதா

**தீபாவளிக்கு...**

அடைந்து விட்டாள். அதன் பிறகு அவர்கள் முன்னால் நிற்பதற்கு நான் என்ன டைத்தியமா? பிம்லா எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருப்பாள், பாஷை புரியா விட்டாலும் பிறகு நான் யாருமில் லாத சமயம் பார்த்து, ஹிந்தியில் அவ ளுக்கு விஷயத்தைச் சொல்லியாகணும். பிம்லாவுக்கு எல்லார் வீட்டு நியூஸ்'ம் தெரியும். தெரிந்தாகணும். குறிப்பாக என் வீட்டு நியூஸில் அந்தக் காலனியில் இருப்பவர்கள் எல்லோருமே ஒரு தனி ருசியும் சுவாரஸ்யமும் வைத்துக் கொண் டிருக்கிறார்கள்.



ஏனென்றால் நான் ஒருத்திதான் மாமி யார் மாமனாரோடு இருப்பவள். மற்ற வர்கள் எல்லோருமே தனிக் காட்டு ராஜா. அதிலும் 'ஒண்ணே ஒண்ணு' என்று இருப்பவர்கள் பாதிபேர். 'நாமிருவர் நமக் கிருவர்' என்று இருப்பவர்கள் பாதி பேர்.

என் வீட்டுக் கூட்டத்தில்தான் தினமும் நிறைய விஷயம் கிடைக் கிறதே. சுவாரஸ்யம் இருக்காதா பின்னே? பிம்லாதான் இவர்களுக் கெல்லாம் ஆல் இண்டியா ரேடியோ. ஆனால் அவளுக்கு என்மேல் தனி இரக்கமும் உண்டு. நான் படும் கஷ்டத்திற்காகவே சில சமயங்களில் மட்டும் தன் கண்டிஷன்களை எனக்காகத் தளர்த்திக் கொள்வாள்.

கடந்த நான்கு வருடங்களாக என் வீட்டில்தான் விடாமல் வேலை செய்து கொண்டிருக் கிறாள். மற்றபடி அவள் அடிக்கடி தான் புதிய வீடு மாற்றி விட்டதாகத்தான் (வேலை செய்யத்தான்) என்னிடம் சொல் கிறாள்.

ஒரு நாள் காலையில் இடுப்பில் ஒரு தொஞ்சாவோடு வந்தாள் என்னிடம். லீவா? ஏற்கனவே அவள் கண்டிஷன் படி இந்த மாதம் ரெண்டு நாள் லீவு ஆயி, எக்ஸ்ட்ரா ஒரு லீவும் ஆயிடுத்து. இப்ப மறுபடியும் லீவா? ''மேம் சாப்! இன்னிக்கி வேலை செய்ய முடியாதுன்னு சொல் விட்டுப் போக வந்தேன். நா ஆஸ்பத் திரிக்குப் போறேன். என் பிள்ளைக்கு ரெண்டு நாளா நல்ல ஜுரம்'' என்றாள்.

''ஏண்டி! உன் பிள்ளைக்கு எத்தனை மாசமாறது?'' என்றேன்.

அந்தச் சோனியைப் பார்த்துக் கொண்டே, அவள் லீவு போட்ட கோபத் தையும் மறந்து.

'''அடுத்த மாதம் வந்தா ஒரு வயசு முடியறது. இது ரெட் டைம்மா. இதோட பொறந்தது வீட்ல இருக்கு...'' என்றாள்.

அவளை அதட்ட எனக்கு என்ன யோக்யதை இருக்கு? என் குழந்தைகள் மூன்றில், இரண்டு பேர் ஒரு வயது வித்தியாசத்தில் பிறந்தவர்கள்.

பாவம் பிம்லாவைச் சொல்லிக் குற்ற மில்லை. நாலு வீட்டில் வேலை செய்து கட்டு அலுத்துச் சலித்து வீட்டுக்குப் போய் அங்கேயும் தன் கணவன், குழந்தை தவிர ஆடுகோழி எல்லாவற்றையும் கவனிக்க வேண்டியிருக்கு அவளுக்கு. ஆடு கோழிக் குத் தீனி நிறையப் போட்டு வளர்த் தால்தானே அந்தப் பணத்தில் தன் குழந் தைக்குத் 'தீனி' போட முடியும்?

இரண்டு நாள் முன்பு பிம்லா வீட்டு வேலை செய்து கொண்டிருக்கும் போது பாத்ரூமில் திடீரென்று மயக்கமாக விழுந்து விட்டாள். கேட்ட போது எனக்குப் பகீ ரென்றது. இரண்டு மாதமாகக் குளிக்கலை யாம். ''ஏண்டி! போன வருஷம் தானே, ரெட்டையாவே, பெத்துப் போட்டுட்டியே இப்ப என்னத்துக்குடி மறுபடியும்?'' முதல் தோஞ்சான் ஒரு நிமிஷம் என் கண்ணுக்குள் வந்து மறைந்தது. அவள் ஆடு வழியச் சிரித்தாள்.

''க்யா கரேன் மேம் சாப்! நாம சும்மா இருந்தாலும் ஆம்பளை சும்மா இருக்கா?'' என்றாள் லேசாக மட்டும் வெட்கப்பட்டுக் கொண்டு. 'அது சரி, நீ சொல்லிட்டே. நா

அரை கப் மைதா மாவில் சிறிது தண்ணீர் விட்டுக் கரைத்து, அடுப்பில் வைத்துப் (2 நிமிடம்) பசை போல் காய்ச்சி இறக்கவும். சோமாஸி, சமோசா, கொழுக்கட்டை, போளி, போன்றவை செய்யும் பொழுது இந்தப் பசையால் ஓரத்தை ஒட்டினால் உடைந்து போகாமல் அதாவது போளி, சமோசா போன்றவை பிரிந்து பூரணம் கொட் டாமல் இருக்கும்.

- பாலா



# LIQUID

These are troubled times.

'Smart' operators who were offering 'incredible' deals, suddenly appear to be neither smart nor credible.Unable to return even depositors' money. Which is why you need to invest in a company that's liquid – one that will have your money ready when you need it.

A company like CLIF.

Coimbatore Lakshmi Investment & Finance. Part of the 500 crore Lakshmi Group of Companies.

**Do you really need the backing of a 500 crore group to make a retrievable 5000 rupee deposit?**

Yes, you do. When you deposit your money with CLIF, you know it will be there when you want it. Because it s being managed with the same expertise that has built such a large group over the years. The same sense of responsibility that has earned the trust of millions, over 3 generations. The same philosophy which places the company's well-being side-by-side with society s well-being.

**OK. The Lakshmi Group is philanthropic. What does that mean to a depositor?**

A great deal. The Lakshmi Group runs hospitals, schools, colleges and even temples, through various trusts. Institutions that have been built through decades of commitment. To you, this means that CLIF is part of a group that cares for society and believes in being a responsible corporate citizen. So with CLIF, you get sincere responsible people to handle your deposit.

And the assurance that your money couldn't be in safer hands.

சொல்லலே. அதுதான் உனக்கும் எனக்கும் வித்தியாசம்.' என்று நினைத்துக் கொண்டேன் அதனை தொடர்ந்து,

''ஹாங் மேம் சாப்! அதுகளுக்கு சீமா, பூஜானு பேர் வெச்சிருக்கேன். அவ அப்பனாட்டம் அழகா, என்ன மாதிரிக் கலரா பொறந்திருக்கு. ஒரு நா கூட்டிண்டு வந்து காட்டறேன்.'' நான் கேட்டதை விட்டுட்டுச் சம்பந்தா சம்பந்தம் இல்லாமல் பேசினாள் பிம்லா சிரித்துக் கொண்டே. 'ஆ... மா! யாரு கேட்டா இவளைக் கூட்டிண்டு வந்து காட்டுனு' நான் அவளை நன்றாகத் திட்டிவேன். ரெட்டை யாப் பொறந்தா என்ன? ஒத்தையா பொறந்தா என்ன? படிக்காத அவளுக்கும் படித்த எனக்கும் என்ன வித்தியாசம்? நாளைக்கு இதுவும் ரெட்டையா பொறந்தா அவளும் என்னைப் போல நாலு பொண் ஒரு பிள்ளைக் காரி ஆவாள். அவ்வளவுதான். என்வெட்கமே என்னைப் பார்த்துத் தலை குனிந்து கொண்டது.

''ஏன்டி! இப்பத்தான் ஆஸ்பத்திரியில அதிகம் பொறக்காம இருக்க வழியெல்லாம் பண்ணி வெச்சிருக்காளே (உபதேசமா?) நீயும் பண்ணிண்டிருந்தா அந்த ரெட்டைக்கு அப்புறம் இப்படி இன்னொண்ணும் வந்துருக்காதே?''



''ஆமா மேம் சாப். நா கூட அவ அப்பங்கிட்டச் சொன்னேன். ஆனா அவ அப்பன் கேக்கலை. நெறைய இருந்தா வீட்டு வேலைக்குச் சௌகரியந்தானே. அப் க்யா பஹாட் டுடேகான்னு எம்மேல கோபப்படறார் மேம் சாப்!'' என்றாள் ஹிந்தியில் பரிதாபமாக. இதற்குப் பெயர் பெண் அடிமையா? பெண் கொடுமையா?

''மேம் சாப்! நீ ஒருத்திதான் அடுத்தவ வீட்டு வம்புக்கு ஆசைப்படாம எனக்காகப் பேசறே. மிஞ்சினது மீதாகது சாப்பாடும் துணியும் குடுக்கறே. பாக்கி எல்லோரும் நா லேட்டா வந்தா என்னைத் திட்டறதுலேயும் அடுத்தவ வீட்டு வம்புலேயும் பொழுதைப் போக்கிண்டு இருக்காளுக. நீ இருபத்தி நாலு மணி நேரமும் வேலை செஞ்சிகிட்டே இருக்கே. உனக்குத் தெரியுமா? ஒன் வீட்டுல மட்டுந்தான் நான் முணுமுணுக்காம வேலை செய்யறேன். அதுவும் ஒனக்காக.''

மாமியார் விரட்டினால் என்ன? நாத்திமார்கள் அதட்டினால் என்ன? என் வீட்டு வேலைக்காரியின் சப்போர்ட் இருக்கும் வரை நான் என்றும் 'மேம் சாப்' தான்.

---

# உங்கள் குழந்தை சரியாக சாப்பிடவில்லையா ?

## பசியைத்தூண்ட ஓமம் நிறைந்த நியுபான் கொடுங்கள்.






அனுபவமிக்க தாய்மார்கள் குழந்தைகளின் பசியைத் தூண்ட ஓமத்தை பயன்படுத்தி நல்ல பலன் கண்டிருக்கிறார்கள். சரியான விகிதத்தில் ஓமம் நிறைந்த நியுபான் உங்கள் குழந்தையின் பசியின்மையை நீக்கி அதன் ஆரோக்கியத்தை பாதுகாக்கும். குழந்தையின் வளர்ச்சிக்கும் உறுதுணையாகும்.

ஓமத்துடன் வசம்பு, அதிமதுரம், கடுக்காய், ஏலக்காய், போன்ற சிறந்த மூலிகைகள் தேவையான அளவு சேர்க்கப்பட்டுள்ள நியுபான், குழந்தைகளின் வாயு தொந்தரவு, வயிற்றுவலி, வயிற்றுப் பொருமல் ஆகியவற்றையும் போக்கும்.

நியுபான் குழந்தைகள் விரும்பி சாப்பிடக் கூடியது. தொடர்ந்து கொடுக்கலாம். பசியைத் தூண்டும். பின் விளைவுகள் எதுவுமில்லை. பாதுகாப்பானது.




613 007

**நியுபான்**

குழந்தைகளின் பசியைத் தூண்டும்

EXELADS ● PP 075 ● 92



"சுமார் 35 வருடங்கள் ஆகாயத்தில் பறந்த என்னை ஒரு சிராய்ப்புக் கூட இல்லாமல் காப்பாற்றிய இறைவனின் கருணையை என்னவென்பது? இதற்கு நான் என்ன கைமாறு செய்வேன்? இப்படி யோசித்த போது என்னுயிரைக் காத்த இறைவனின் மற்றொரு படைப்பான வாயில்லா ஜீவன்களைக் காக்க ஒரு காப்பகம் நிறுவுவதுதான் சரியான செயல் என்று தோன்றியது. அதன்படி தோன்றியதுதான் இந்த ப்ளூ கிராஸ் ஆஃப் இந்தியா." இப்படிக் கூறியவர் விமானம் ஓட்டுனராக இந்தியன் ஏர்லைன்ஸில் பல ஆண்டுகள் பணிபுரிந்து ஓய்வு பெற்ற கேப்டன் வி. சுந்தரம்.

சென்னை அடையாறு, பெசன்ட் கார்டனில் அமைந்துள்ள ப்ளூ கிராஸ் ஆஃப் இந்தியா என்பது பிராணிகள் நலக் காப்பகம் ஆகும். இது சென்னையில் மட்டுமே இயங்கும் ஒரு அமைப்பு. நாட்டில் வேறு பெயர்களில் பிராணிகளைக் காக்கும் சங்கங்கள் இயங்குகின்றன. ஆனால் அவை இதன் கிளைகள் அல்ல.

இவ்வமைப்பு தனிநபர் ஒருவரின் உதவியால் துவங்கப்பட்டாலும் தமிழ்நாடு கால்நடை பராமரிப்புத் துறையும், மத்திய மிருகநலத் துறையும் நிதி உதவி செய்கின்றன. சுமார் ரூ 300 செலுத்தி ஆயுள் உறுப்பினராக 1400 பேரும், ரூ 30 செலுத்தி ஆண்டு உறுப்பினராக சுமார் 600 பேரும் இதன் நிர்வாகத்திற்கு நிதியுதவி வழங்கும் மக்கள் பிரதிநிதிகள் ஆவர்.

ஓரளவு நிதிவசதி இருந்தாலும் இவ்வமைப்பை நடத்துவது அவ்வளவு ஒன்றும் எளிதான வேலை இல்லை என்பதை நேரில் பார்த்த போது புரிந்தது. திறந்த வெளியில் (சுற்றிலும் உயரமான கம்பி வேலி உண்டு) பல நாய்களும், கூண்டுக் குள் பூனைகளும், பறவைகளும், கொட்டிலில் மாடுகளும், மறுபகுதியில் கழுதைகள், ஆடுகளும் சுதந்திரமாக வயிறார உண்டு மகிழ்வுடன்

# ப்ளூ-கிராஸ்
# பிராணிகளின் புகலிடம்



காணப்பட்டன. ஆனால் அவை ஒவ்வொன்றும் இங்கு வந்த சோகக் கதைகள் வித்தியாசமானவை.

பெரும்பாலும் ஆடு, மாடு, எருமை, கழுதை, நாய் இவை சாலை விபத்துக்களில் அடிபட்டு விடும். உயிருக்குப் போராடும் இவைகளை யாரும் மருத்துவமனைக்கு எடுத்துச் செல்வதில்லை. (அடிபட்ட மனிதர்களையே வேடிக்கை பார்த்து விட்டு நகரும் சமூகம் இது!) ஆடு, மாடு, இவற்றின் சொந்தக்காரர்களுக்கு அடிபட்ட விபரம் தெரிந்தாலும் பிறகு வழக்கு, விசாரணை என்று வரும் எனப் பயந்து பிராணியைக் கண்டு கொள்வதில்லை. மனிதாபிமானம் (விலங்காபிமானம்?) கொண்ட யாராவது ப்ளூ கிராஸ் நிறுவனத்துக்கு போன் செய்தால் இவர்கள் ஆம்புலன்ஸ், சில ஆட்கள், டாக்டர் இவர்கள் சகிதம் அடிபட்ட பிராணி கிடக்கும் இடத்தை அடைந்து (சென்னையைச் சுற்றி சுமார் 30 கிலோ மீட்டர் வரை இவர்களது உதவிக்கரம் நீள முடியும்) அந்தப் பிராணியைக் கொண்டு வருகிறார்கள். அவைகளுக்கு ஊசி, மருந்து, முறிவு ஏற்பட்டிருந்தால் கட்டுப் போடுதல், தேவையானால் அறுவை சிகிச்சை அனைத்தும் அளிக்கிறார்கள். சில சமயம் தன் மாடு பிழைத்து விட்டது என்று தெரிந்த பின் மெதுவாக மாட்டுச் சொந்தக்காரர் எட்டிப் பார்ப்பதுண்டு. பிராணி பூரண குணமடைந்த பிறகு சில எச்சரிக்கைகள், நிபந்தனைகள் இவற்றுடன் பிராணியைச் சொந்தக்காரரிடம் ஒப்படைப்பதுண்டு.

ஆனால் ஆயுள் முழுவதும் உழைத்து பால் வற்றிய மாட்டையும், கிழடு தட்டிய எருதுகளையும் ப்ளூ-கிராஸ் மீட்டு வந்தால் பெரும்பாலும் அவற்றின் சொந்தக்காரர்கள் திரும்பிப் பார்ப்பதில்லை. (பெற்றவர்களுக்கே இந்தக் கதி ஆகி விடும் போது!) அவற்றை ஆயுள் முழுவதும் வைக்கோல், மாட்டுத்தீவனம் அளித்து இந்நிறுவனம் பராமரிக்கிறது. கண்ணிரண்டும் பிறவியிலேயே குருடாகப் பிறந்த கன்றுக் குட்டி, பின்னங்கால் உடைந்த எருமை, மூன்று கால்களே உடைய கழுதை, வால் அறுந்த பசு இவை மனிதர்களின் சுயநலத்திற்குப் பலியான அப்பாவிகள். அவை பயமற்று இங்கே வாழுகின்றன.

அடுத்து மிகுதியான எண்ணிக்கையில் காணப்படுபவை நாய்களும், பூனைகளும். சொந்தக்காரர் வேறு ஊர் மாற்றிப் போகும் போது கருணையே இல்லாமல் வளர்த்த நாயை விட்டு விட்டுச் செல்ல, அது பலநாள் உணவு இல்லாமல் ஊளையிட்டு அழ, நிறுவனத்திற்கு யாரோ தகவல் சொல்ல அதைப் பிடித்து வந்து வளர்க்கிறார்கள். குட்டிகள் போட்ட அனாதைத் தெருநாய், வதவதவென குட்டிகளால் வீட்டுக்காரரின் அதிருப்திக்கு ஆளான வீட்டுப் பூனை, தனியாகத் திரியும் அநாதை நாய்கள், பூனைகள் இவை இவர்களை நாடிவரும் விருந்தாளிகள்.

ஆனால் இவற்றைப் பிடித்து வருவது என்பது எளிய வேலை இல்லை. சாக்கு, கயிறு, அட்டைப் பெட்டி, டின் இவைகளைக் கொண்டு பல ஆட்கள் பல மணி நேரம் போராடி மிக லாகவமாக இவற்றைப் பிடிக்க வேண்டும். ப்ளூ கிராஸிற்கு வந்த பிறகு கூட சில மிக ஆக்ரோஷத்துடன் குரைக்கும். கூண்டைப் பிராண்டும். சில பூனைகள் உணவு உண்ணாது. ஆயினும் இவைகளைத் தனித் திறமையோடு பக்குவமாகக் கையாள இங்குள்ள ஆட்கள் பழக்கப்பட்டுள்ளார்கள்.

ஒவ்வொரு விலங்கிடமும் மருத்துவர் முதல் ஊழியர் வரை அனைவரும் மிகுந்த அன்பு, அனுதாபம் இவற்றுடன் பழகுகிறார்கள். பூனைகளைத் தடவிக் கொடுத்து



செல்லமாகக் கொஞ்சினால்தான் அவை உணவு உண்ணும் என்பதற்காகவே ஒரு பெண் ஊழியர் நியமிக்கப்பட்டுள்ளார் என்றால் பார்த்துக் கொள்ளுங்கள்!



இங்குள்ள பூனை, நாய், பறவைகளுக்குக் காலையில் பால் காய்கறிகளுடன் சமைத்த சாதம், மாலையில் ராகி கஞ்சி, பூனைகளுக்குக் காலையில் பால், முட்டை இவை வழங்கப்படுகின்றன. தவிர இவைகளுக்கு ராபீஸ் நோய்த் தடுப்பு ஊசி (இவை கடித்தால் மற்றவர்களுக்கு இந் நோய் வராமலிருக்க) மற்றும் இனப் பெருக்கம் செய்யாமலிருக்க அறுவை சிகிச்சை செய்கிறார்கள். சில பூனைகள் வெளியே சென்று விட்டு டாண் என்று சாப்பாட்டு வேளைக்கு ஆஜராகி விடுமாம் (கொடுத்து வைத்தவைகள்!) நாய்களை வெளியே விடுவதில்லை.

இவற்றின் பராமரிப்புக்கான இரண்டு முழு நேர கால்நடை மருத்துவர்கள், ஒரு ஆம்புலன்ஸ், பதினோரு ஊழியர்கள், வாட்ச்மேன் ஆகியோர் பணிபுரிகின்றனர்.

இவர்களின் மேற்பார்வையில் இயங்கும் மருத்துவமனைகளில் வீட்டுச் செல்லப் பிராணிகளுக்குத் தடுப்பூசி போடப்படுகிறது. இதற்கு மட்டும் குறைந்த தொகை வசூலிக்கப்படுகிறது. ஆனால் வேறு சிகிச்சைக்கென வரும் மிருகங்களுக்கு சிகிச்சைகள் இலவசமாகவே அளிக்கப்படுகின்றன. ஆனால் ஊருக்குச் செல்பவர்கள் குறிப்பிட்ட நாட்களுக்கு மட்டும் என மிருகங்களை இங்கு விட்டு விட்டுச் செல்ல முடியாது. வீட்டுச் சூழலில் பழகிய பல பிராணிகள் சொந்தக்காரர்களைப் பிரிந்த ஏக்கத்தில் உணவு உண்ணாமல் இறப்பதே இதற்குக் காரணம்.

சிலர் உயர்ரக நாய்க்குட்டிகளைப் பிறருக்குக் கொடுக்க விரும்புவார்கள். அதே போல் சிலர் நல்ல நாய்க் குட்டிகளைப் பெற விரும்புவார்கள். இவர்கள் இரு பிரிவினரின் முகவரிகளையும் சேகரித்து வைத்து ஒருவருக்கொருவர் தொடர்பு கொள்ள ப்ளூ க்ராஸ் உதவுகிறது. இங்கே வந்து குறிப்பிட்ட நாய் அல்லது பூனைக் குட்டியை வளர்க்க விரும்புகிறவர்களுக்கும் அவை கொடுக்கப்படுகின்றன. செல்லப் பிராணிகள் பராமரிப்பு பற்றி ''டிப்ஸ்''ஸும் நேரில் வந்தால் இங்கு பெறலாம்.

''ஆயினும் மக்களுக்குப் பிராணிகளை இம்சை செய்யக் கூடாது என்கிற உணர்வு குறைவுதான். அதிக லோடு ஏற்றிச் செல்லும் வண்டியைத் தடுத்து லோடை குறைக்கச் சொல்லி அறிவுரை வழங்குகிறார்கள், எங்கள் நிறுவனத்தைச் சேர்ந்த வாலண்டியர்கள். ஒருமுறை கரடியை வைத்து வித்தை காட்டியவரிடமிருந்து மீட்டு அதை வண்டலூர் மிருகக் காட்சி சாலையில் சேர்த்தோம். சுகாதாரமற்ற மாட்டுக் கொட்டில் வைத்திருப்பவர்கள், மாட்டை எலெக்ட்ரிக் கம்பத்தில் கட்டுபவர்கள், மாட்டை அடிப்பவர்கள், புண் கழுத்துடன் மாட்டை வண்டியில் பூட்டுபவர்கள் இப்படிப் பலரையும் நாங்கள் சந்தித்து அறிவுரைதான் வழங்க முடிகிறதே தவிர தண்டிக்கவோ, அபராதம் விதிக்கவோ எங்களுக்கு அதிகாரம் இல்லை. இத்தகைய நிலை ஏற்பட்டால் எஸ்பிசிஏ



சகோதரிகளே!

# நீங்கள் கிரைண்டர் வாங்கும்பொழுது அதில் AUE மோட்டார் பொருத்தப்பட்டு உள்ளதா என்று கவனித்து வாங்கவும்!







Anubhav/M-042/91

இல்லத்தரசியின்
இன்றியமையாத துணை,
AUE மோட்டார்
பொருத்தப்பட்ட வெட்கிரைண்டர்கள்.






# SURYA வின் படைப்புகள்.



IS 4246



SURYA-G Salem Stainless Steel LPG Stove

காப்பர் பாட்டம் அடிப்பாகத்தைக் கொண்ட SURYA வின் படைப்புகள்.


மில்க் பாய்லர்


பருப்பு சட்டி


வெண்ணெய் சட்டி


டீலக்ஸ் சாஸ்பான்


ஃப்ரை பான்


உருளி


இட்லி சட்டி


ஹண்டி


டோப்ஸ்


கடாய்


தவா

- சூர்யாவின் காப்பர் பாட்டம் கொண்ட பாத்திரங்கள் முதல்தர AISI 304 ரக சேலம் எஃகினால் ஆனது. நேர்த்தியான வெளிநாட்டுப் பொருட்களுக்கு ஈடானது.
- உறுதியான, கவர்ச்சியான நீண்ட நாள் உழைக்கக்கூடிய இணைப்பு கொண்டவை.
- சூர்யாவின் CBSS சமையல் பாத்திரங்கள் காப்பர் பாட்டத்தால் இணைக்கப்பட்டவை.
- காப்பர்பாட்டத்தின் தடிப்பு அயல்நாட்டுப் பொருள்களைப்போல உறுதியானது.
- நீண்ட இவாலை தேவையற்றது.

60% எரிபொருளை மிச்சப்படுத்துங்கள்

விற்பனை உரிமை
**சூர்யா சேல்ஸ் கார்ப்பரேஷன்,**
24, காளப்பா 'ஏ' தெரு,
பார்க்டவுன், சென்னை — 600 003.
போன் : 563760

Ramu Kariat Associates

(Society for the Prevention of Cruetly for animals) யினருக்குத் தகவல் கொடுத்தால் அவர்கள் சட்டரீதியாக இவர்களைத் தண்டிப்பார்கள். ஆயினும் சட்டத்தால் செய்ய முடியாததை அன்பால் செய்ய முடியும் என்றே நாங்கள் நம்புகிறோம்'' இப்படிக் கூறியவர் இந் நிறுவனத்தின் செயலாளரும் கௌரவ மருத்துவராகவும் பணிபுரியும் டாக்டர். சேகர்.



வாரத்தின் ஆறு நாட்களில் (ஞாயிறு நீங்கலாக) காலை 8:30 முதல் மாலை 5 மணி வரை இயங்கும் ப்ளூ கிராஸ் அடிபட்ட விலங்குகளை மீட்க இரவு - பகல் எந்நேரமும் தயார் நிலையில் உள்ளது என்பது குறிப்பிடத்தக்கது. மாணவர்களிடையே 'பிராணிகளிடம் அன்பு காட்ட வேண்டும்' என்ற உணர்வை உண்டாக்க பிராணிகள் பற்றிய படங்களை பள்ளிகள், கல்லூரிகளில் திரையிட்டுக் காட்டுகிறார்கள். தவளை, எலி போன்றவற்றைச் சோதனைச் சாலையில் அறுத்துச் சோதிப்பதையும் இச் சங்கம் தடுக்க விரும்புகிறது. இதற்காக 'ஹ்யூமன் எஜுகேஷன் ப்ரோக்ராம்' ஒன்றை நடத்துகிறது. கம்ப்யூட்டரில் புரோக்ராம் செய்யப்பட்ட தவளையின் உடற்பகுதியைச் சோதிக்கும் சோதனையை மாணவர்கள் சென்று செய்து பார்க்கலாம். நிஜத் தவளையை வைத்துச் செய்வது போன்ற நிறைவு ஏற்படுமாம். தவிர பள்ளிகளில் பிராணிகள் சம்பந்தப்பட்ட வரைபடப் போட்டி, பேச்சுப் போட்டி ஒவ்வொரு வருடமும் நடத்தி வெற்றி பெற்றவர்களுக்குப் பரிசு வழங்குகிறார்கள்.

இவ்வளவு செய்தாலும் பிராணிகள் என்னவோ அவதிப்பட்டுக் கொண்டுதான் இருப்பது போல் தோன்றுகிறது.

நம்மை இதுநாள் வரை எவ்விதக் குறையுமின்றி வைத்த இறைவனுக்கு நாம் செய்யப் போகும் நன்றிக்கடன் என்ன? ''யாவர்க்கும் ஆகும் ஒரு பிடிப் புல்'' என்ற ஆழ்வார் வாக்கிற்கு ஏற்ப நம்மைச் சுற்றி வாழும் (உண்மையில் நமக்குப் பல வகையில் உதவும்) வாயில்லா ஜீவன்களைக் கூடியவரை பாதுகாப்பதுதான் நாம் இறைவனுக்குச் செய்யும் நன்றிக்கடன். ஊர்கள்தோறும் ஒரு ப்ளூ கிராஸ் சங்கத்தை ஆரம்பிக்க முடியாதா என்ன? நிச்சயம் முடியும்.

– லக்ஷ்மி சங்கர்

முகவரி :
ப்ளூ கிராஸ் ஆஃப் இண்டியா,
13 பெசன்ட் கார்டன்ஸ்,
சென்னை - 20.
தொலைபேசி : 413270

## 'லில்லி' உள்பாவாடைகள் தயாரிப்பாளர்

# கரூர் P.R.C. கார்மெண்ட்ஸ்ஸாரின்

### இரட்டிப்புப் பயன் தரும் புதுமையான திட்டத்தில் சேர்ந்து பயனடையுங்கள்.

டிசைன் நெ. 1



டிசைன் நெ. 2



**திட்டத்தின் விவரம் :**

ரூபாய் 210/- செலுத்தியவுடன் ஐந்து லில்லி, உள்பாவாடைகள் (Normal Size, இடுப்புச் சுற்றளவு அதிகபட்சம் 35"/88 cms., உயரம் 36"/90 cms., 38"/95 cms., 40"/100 cms., 42"/105 cms.)

(அல்லது)

ரூபாய் 250/- செலுத்தியவுடன் ஐந்து லில்லி உள்பாவாடைகள் (Spl. Size : இடுப்புச் சுற்றளவு : 40"/102 cms, உயரம் : 36"/90 cms., 38"/95 cms., 40"/100 cms., 42"/105 cms.) உங்களுக்கு விருப்பமான கலரில், தேவையான அளவுகளில் பதிவுத் தபால் மூலம் பெற்றுக் கொள்கிறீர்கள். வெளிமார்க்கெட்டில் கிடைக்கும் அதே விலையில் ஒன்றின் விலை (Normal Size : ரூ. 42/ Spl. Size : ரூ. 50/).

இவ்வாறு குறைந்த பட்சம் ஒரு வருடத்திற்கு இரண்டு முறை மொத்தம் 10 லில்லி உள்பாவாடைகள் வீதம் ஐந்து வருடத்திற்கு நீங்கள் பணம் செலுத்தியவுடன் எங்களிடமிருந்து லில்லி உள்பாவாடைகள் பெற்றுக் கொள்கிறீர்கள்.

மேற்படி ஐந்து ஆண்டுகளில் நீங்கள் பெற்றுக் கொண்ட லில்லி உள்பாவாடைகளுக்காக செலுத்திய பணம் முழுவதையும் (அதாவது ஒவ்வொரு முறையும் நீங்கள் செலுத்திய பணம் ரூ. 210/- அல்லது ரூ. 250/- வீதம் ஐந்து ஆண்டுகளில் 10 முறை செலுத்திய தொகை ரூபாய் 2,100/- அல்லது ரூபாய் 2,500/-) ஆறாவது ஆண்டு துவக்கத்தில் திரும்பப் பெற்றுக் கொள்ளுகிறீர்கள்.

இத்திட்டத்தின் மூலம் உங்கள் தேவைக்கு தரத்தில் சிறந்த, வண்ணம் கலையாத வடிவமைப்பில் சிறந்த மற்றும் தேவையான அளவுகளில் லில்லி உள்பாவா டைகள் பெற்றுக் கொள்வதுடன் நீங்கள் செலுத்திய பணத்தையும் திரும்பப் பெற்றுக் கொள்கிறீர்கள்.

இத்திட்டத்தில் இந்தியாவில் எந்தப் பகுதியில் உள்ளவரும் சேர்ந்து பயனடையலாம். Normal Size ரூ. 210/-; Spl. Size ரூ. 250/-. உங்கள் தேவைக்கு D.D. அல்லது M.O. கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும்.

## P.R.C. கார்மெண்ட்ஸ்,

**லில்லி உள்பாவாடைகள் தயாரிப்பாளர்,**

26, பிரதட்சணம் ரோடு, 'ஏ' பிளாட்,

கரூர் - 639 002. தொ.பே.: 21946.

குறிப்பு : 1) தபால் செலவை எங்கள் நிறுவனமே ஏற்றுக் கொள்கிறது. 2) Normal Size டிசைன் நெ. 1 & 2 ல் கிடைக்கிறது. Spl. Size டிசைன் நெ. 1 ல் மட்டும் கிடைக்கிறது. 3) இத் திட்டத்தில் வியாபாரிகளும் கலந்து கொள்ளலாம். விவரங்களுக்கு எமது நிறுவனத்துடன் தொடர்பு கொள்ளவும்.

**Repayment Guarantee Card உடனடியாக வழங்கப்படும்**

புதுமை திட்டம் No. 2 தற்பொழுதும் செயல்படுகிறது.

# ஊனமுற்றோர்க்கு உதவிக்கரம் நீட்டுபவள்

ஒரு கையையோ காலையோ சிறிது நேரம் கட்டிக் கொண்டு அவற்றை உபயோகப்படுத்த முடியாத நிலையில் இருப்பதாகக் கற்பனை செய்து பாருங்கள்! ஒருசில நிமிடங்களிலேயே மிகுந்த கஷ்டமும் வேதனையும் அசௌகரியமும் இருப்பதாக உணரும் நீங்கள், திடீரென்று ஏற்படும் விபத்தாலோ அல்லது வியாதி காரணமாகவோ கை கால்களை இழந்து விடுபவர்களைப் பற்றி யோசித்துப் பார்த்ததுண்டா? அன்றாட வாழ்வில் அவர்களை நாம் அடிக்கடி சந்தித்தாலும் அவர்களுடைய இயலாமையையும் மனவேதனைகளையும் புரிந்து கொள்ள முயற்சித்தது உண்டா?

உடல் ஊனம் என்பது ஒருவருக்கு வாழ்க்கையில் ஏற்படும் பேரிழப்பு என்றே சொல்லலாம். அதிலும் ஒரு குடும்பத்தைக் காப்பாற்ற வேண்டிய நிலையிலிருப்பவருக்கு இத்தகைய கஷ்டம் நேர்ந்து விட்டாலோ அந்தக் குடும்பம் படும்பாடு சொல்லி முடியாது. அப்படிப்பட்டவர்களுக்குத் தேவையான செயற்கை உறுப்புகளை இலவசமாக அளித்து அவர்கள் மனதில் தன்னம்பிக்கையை உண்டாக்குவதோடு அவர்கள் புதுவாழ்வு நடத்தவும் வகை செய்து வருகிறது சென்னை லாயிட்ஸ் ரோடில் இயங்கி வரும் ''முக்தி'' நிறுவனம். சப்தமில்லாமல் இந்தச் சேவையை பல ஆண்டுகளாகச் செய்து வரும் இந் நிறுவனத்தின் ஸ்தாபகர் திருமதி. மீனா தாதாவைச் சந்தித்துச் சில கேள்விகள் :

*''ஊனமுற்றோர்க்குத் தேவையான செயற்கை உறுப்புகளை இலவசமாக வழங்கும் எண்ணம் உங்களுக்கு எப்படி ஏற்பட்டது?''*

''1986 ஆம் வருடம் ஜெய்ப்பூர் ஸ்ரீ பகவான் மஹாவீர் சஹாயதி சமிதியும் இராஜஸ்தான் இளைஞர் சங்கமும் இணைந்து செயற்கை உறுப்பு வழங்கும் முகாம் ஒன்று நடத்தியது. அப்போது அங்கு சென்றிருந்த எனக்கு ஊனமுற்றோரின் அல்லல்களையும் வேதனைகளையும் நேரில் காணும் வாய்ப்பு கிடைத்தது. அங்கு பலர் செயற்கை உறுப்புகள் கிடைக்காமல் ஏமாற்றத்துடன் திரும்பியதைக் கண்டேன். சொந்தமாக அவற்றைச் செய்து கொள்ளவும் வசதியில்லாமல் பலர் இருப்பதை அறிந்து மனம் வருந்தினேன். அன்றே ஊனமுற்றோர்க்குத் தேவையான உறுப்புகளை இலவசமாக வழங்கி உதவ வேண்டும் என்ற எண்ணம் என் உள்ளத்தில் உருவாயிற்று. முக்தி என்றால் கஷ்டங்களிலிருந்து விடுதலை



என்றும் ஒரு பொருள் உண்டு. செயற்கை உறுப்புகளைப் பொருத்திக் கொண்டவர்கள் மனக்கஷ்டத்திலிருந்தும் உடல் ஊனத்திலிருந்தும் விடுபடுவதால் நிறுவனத்திற்கு ''முக்தி'' என்று பெயர் வைத்தேன்.''

''செயற்கை உறுப்புகளை உங்கள் நிறுவனமே தயாரிக்கிறதா? இதுவரை எத்தனை பேருக்கு செயற்கை உறுப்புகளை வழங்கியுள்ளீர்கள்?''

''தாதா குடும்பத்தினரால் அளிக்கப்பட்ட நன்கொடையில் ஒரு சிறிய இடத்தில் ஆரம்பிக்கப்பட்ட இந் நிறுவனத்தில் ஆரம்ப காலத்தில் அலுமினியத்தில் உறுப்புகளைத் தயாரித்து வந்தோம். ஜெயப்பூரில் பயிற்சி பெற்ற திறமையான டெக்னீஷியன்கள் பலர் எங்களிடம் பணியாற்றுகிறார்கள். அதனால் நல்லதரமான உறுப்புகளைக் குறைந்த செலவிலேயே எங்களால் தயாரிக்க முடிகிறது. சென்னையைத் தவிர, கேரளம், ஆந்திரா, பம்பாய், கல்கத்தா ஏன் வெளிநாடுகளுக்குக் கூட அழைப்பின் பேரில் சென்று உறுப்புகளைச் செய்து தருகிறோம் என்றால் பாருங்களேன்! இதுவரை மூவாயிரத்துக்கும் மேற்பட்டவர்களுக்குச் செயற்கை உறுப்புகளை வழங்கியிருக்கிறோம்.''

''ஊனமுற்றோர்க்காக ''முக்தி'' செய்துவரும் மற்ற சேவைகள் குறித்து?''

''வருடா வருடம் அவர்களுக்காக ஏதாவது ஒரு ஸ்டேடியத்தில் பலவிதமான விளையாட்டுப் போட்டிகளை நடத்துகிறோம். அவர்களுக்குத் தாழ்வு மனப்பான்மை ஏற்படாமல் தன்னம்பிக்கையை வளர்க்கவும், அவர்களிடம் இருக்கும் பல்வேறு திறமைகளை வெளிக்கொணரவும் இப் போட்டிகள் உதவுகின்றன. சென்ற வருடம் குழந்தைகள் தினமன்று ஊனமுற்ற குழந்தைகள் பங்குகொண்ட கலை நிகழ்ச்சி ஒன்றை ராணி சீதை அரங்கில் நடத்தி பங்கேற்ற குழந்தைகளுக் கெல்லாம் பரிசுகளும் வழங்கினோம்.

''இந்தப் புனிதமான சேவையில் உங்களுக்கு ஏற்பட்ட சுவையான, மறக்க முடியாத நிகழ்ச்சி ஏதாவது உண்டா?''

''ஒரு சமயம் இராஜரத்தினம் ஸ்டேடியத்தில் ஊனமுற்றோர்க்காக நாங்கள் ஏற்பாடு செய்திருந்த ஓட்டப் பந்தயப் போட்டி ஒன்று விறுவிறுப்பாக நடைபெற்றுக் கொண்டிருந்த போது, திடீரென்று பந்தயத்தில் ஓடிக் கொண்டிருந்த ஒருவர் பாதை மாறி அங்கேயிருந்த தென்னை மரம் ஒன்றில் ஏறி ஒரு இளநீரைப் பறித்து வந்து என்னிடம் கொடுத்தார். எங்களிடம் செயற்கைக் கால் பொருத்திக் கொண்டதற்கு நன்றியைக் காட்டும்விதமாக அதைக் கொடுப்பதாகக் கூறினார். தென்னை மரத்தில் மிருந்த லாவகத்துடனும் வேகத்துடனும் ஏறி இறங்கி வந்த அவர் முகத்தில் காணப்பட்ட மகிழ்ச்சியையும் தன்னம்பிக்கையையும், பெருமிதத்தையும் பார்த்து நாங்கள் பூரித்துப் போனோம்.

மற்றொரு சம்பவம் கூட உண்டு. இரண்டு கைகளும் ஒருகாலும் இழந்து எங்களிடம் வந்து உறுப்புகளைப் பொருத்திக் கொண்டவருக்கு அப்போதுதான், சுமார் பத்து வருடங்கள் கழித்துத் தன் கையினாலேயே உணவை எடுத்து உண்ண முடியும் என்ற நிலை வந்தது. டேபிளில் வைத்திருந்த பூரியைக் கையில் எடுத்து உண்டார். மிகவும் உணர்ச்சிவசப்பட்டு அழுதே விட்டார். அவர் பலத்த ஆரவாரத்துக்கிடையே சாப்பிட்டதை எங்களால் மறக்கவே முடியாது.''

''உங்கள் நிறுவனத்துக்குப் பொது மக்களின் ஆதரவு இருக்கிறதா?''

''நிச்சயம் இருக்கிறது. நிறையவும் இருக்கிறது. ரோட்டரி, லயன்ஸ் போன்ற சங்கங்கள் முதல் ஏழ்மை நிலையிலுள்ள சாதாரண மக்கள் வரை பலரும் ஆதரவு

அளித்து வருவதால்தான் எங்கள் நிறுவனம் இன்று இவ்வளவு வளர்ந்துள்ளது.''

''எதிர்காலத்தில் இன்னும் என்னென்ன திட்டங்களைச் செயல்படுத்த இருக்கிறீர்கள்?''

''செயற்கை உறுப்புகளை இலவசமாக வழங்குவதோடு பிஸியோதரபி சிகிச்சையையும் இலவசமாக அளிக்க வேண்டும். கிராமப்புற மக்களுக்கும் எங்களது சேவை கிடைக்கும்படி செய்ய வேண்டும். சமுதாயத்தில் காணப்படும் ஆதரவற்ற அபலை பெண்களுக்காக ஒரு இல்லம் தொடங்கி அவர்களுக்கு மறுவாழ்வு கொடுக்க வேண்டுமென்றும் விரும்புகிறேன்.

வெளிநாடுகளில் பெரும்பாலோர் சாலை விபத்துகளால் கை கால்களை இழக்கிறார்கள் என்றால் நம் நாட்டில் அறியாமையால் உறுப்புகளை இழப்பவர்கள்தான் அதிகம். கால்களில் முள் குத்தினாலோ, காயம் ஏற்பட்டாலோ உடனே சிகிச்சை செய்து கொள்ளாமல் அசட்டையாய் இருப்பது, நீரிழிவு நோய் உள்ளவர் கவனக் குறைவாக இருப்பது இதுபோன்ற அறியாமையை மக்கள் மனதிலிருந்து நீக்க வேண்டுமென்பதே என்னுடைய இலட்சியம்.''

– கிருத்திகா



நறுமணம் அனைவரையும் வசியப்படுத்தும்.

உடலையும், உள்ளத்தையும் தழுவிடும்.

நெஞ்சை அள்ளும். கொள்ளை கொள்ளும்.

கொஞ்ச வைக்கும். கெஞ்ச வைக்கும்.

சொக்க வைக்கும்.

மயங்க வைக்கும்.

எங்கும், எவரையும் தன்வயமாக்கும்.



# மணக்கும்... மயக்கும்...



AMITY®

PERFUMES




6 புதிய சர்வதேச நறுமணங்களில்

everest/92/DM/293 tm

# பட்டாசுகளில் பணம் போடலாமா?



தீபாவளி என்றாலே பட்சணமும் பட்டாசும் தான் நம் கண்முன் வரும். எண்ணெய் விலையை நினைத்து இல்லத்தரசிகள் புகைந்தால், பட்டாசின் விலையை நினைத்து கணவன்மார்கள் வெடிக்க வேண்டியிருக்கிறது. இதில் போதும் போதாதற்கு சீனி வெடி மேலே எலக்ட்ரிக் சரமும் சேர்த்து வைத்துக் கொளுத்தினாற் போல தீபாவளி வருவதற்கு ஒரு வாரம் முன்பிருந்தே பட்டாசுகள் வெடித்தால்தான் (வீட்டின் முன் பட்டாசு குப்பையாவது இருக்கணுமாம்) தன் நண்பர்கள், நண்பிகளிடையே தனக்கொரு தனி கெதாப் என்று உதார் விட்டுக் கேரோ செய்யும் நம் புத்திர ரத்தினங்கள் வேறு ஒரு பக்கம்.

தீபாவளி பட்ஜெட்டில் அரை பங்கிற்கும் மேலே பணத்தை ஒதுக்கி வைத்து ஏதோ பெரிய பெட்டியில் அடுக்கி வரப் போகிறது பட்டாசுகள் என்று நினைத்து பெற்றோர்கள் மத்தாப்பாய் மலர்ந்து லிஸ்டை அனாயாசமாய் நீட்டினால் பதிலுக்குக் கடைக்காரர் பாண்ட் பைகளில் அல்லது கை பைகளில் அடங்கி விடும் அளவிற்கு ஒரு பொட்டலத்தை நீட்டும் போது புஸ்வாணமாய் இறங்கி விடுவார்கள். எனவே மற்ற செலவுகளுக்கு ஒரு பங்கு, பட்டாசிற்கு மூன்று பங்கு என்று ஒதுக்கினால்தான் அஞ்சரைப் பெட்டி அளவிலாவது பட்டாசுகள் கிடைக்கும் இன்றைக்கு. வருடத்தில் ஒரு தடவைதானே என்று இதில் காசு போட துணிபவர்களும் உண்டு. 'டாம் டுமீல்னு காது கிழியற சத்தத்திற்குக் காசு செலவழிக்கக் கரியாக்கணுமா. அதற்குப் பதில் துணிமணிகளில் போட்டாலாவது உண்டு' என்று நினைப்பவர்களும் உண்டு.

இதைப் பற்றிச் சில பெண்மணிகளிடம் கேட்ட போது :

* ரம்யா



* பரிமளா



* ஜெயஸ்ரீ



## திருமதி ஜெயஸ்ரீ சுப்ரமணியம் :

“எனக்கு இரண்டும் பெண் குழந்தைகள்தான். பெரியவளை விட நான்கு வயதான சின்னவளுக்கு வாண வேடிக்கைகளில் இன்னும் ஆர்வம் அதிகம்.

அவர்களின் சந்தோஷத்திற்காக பட்டாசுகளில் காசைப் போடு கிறோமே என்று துளியும் எண்ண மாட்டேன். வருடத்தில் ஒருமுறை தானே செலவழிக்கப் போகி றோம். மேலும் புதுத் துணிகள் வாங்க வருடம் முழுவதும் பல விசே ஷங்கள் - பண்டிகைகள், திருமண நாள், பிறந்த நாள்னு இதற்கெல்லாம் வாங்கா மலா போய் விடுவோம். போட்ட பட் ஜெட்டுக்கு மேலே போனா கூட பட்டாசு வாங்கிடுவேன். அதுவும் போறாதுன்னு என் பெண் என் அம்மா வீடு, பெரியம்மா வீடுன்னு போய் அங்கிருந்தும் கொண்டு வந்து சேர்த்து விடுவாள்.''



## திருமதி செல்லம் :

"என் கணவர் அந்தக் காலத்திலேயே (கிட்டத்தட்ட 30, 40 வருடங்க ளுக்கு முன்பு) ஏராளமாகப் பட்டாசு வாங் குவார் என்றால் பார்த்துக் கொள்ளுங்கள். அவர் விதவிதமாகப் பட்டாசுகள் வாங்கு வதைப் போலவே நானும் விதவிதமாக பட்சணங்கள் செய்வேன். யார் மூலம் குழந்தைகள் அதிகமாக மகிழ்ச்சியுறுகி றார்கள் என்று எங்களுக்குள் ஒரு சுவை யான போட்டி. ஆனால் பட்டாசில் பணம் போடுவதில் எனக்குத் துளியும் விருப்பம் கிடையாது. காது கிழியற சத்தமும் வீடு நிறைய புகையும்தான் மிச்சம். அது மட்டு மல்ல. அந்தப் புகையினாலே வயிற்றுக் கோளாறினாலும், உடற்கோளாறினாலும் குழந்தைகள் பாதிக்கப்பட்டால் அடுத்து வர கொஞ்ச நாளுக்குப் பள்ளிக்கும் மட்டம் போட வேண்டி வரும். ஏதோ சாஸ்தி ரத்திற்குச் சி றி து செலவழித்தால் போதாதோ?''

## பரிமளா பார்த்தசாரதி :

''குழந்தைகளுக்குப் போய் விட்டீர் களே. என்னைக் கேளுங்கள் முதலில். இந்த வருடமும் நீ பட்டாசு வெடிப்பாயா என்று ஒவ்வொரு வருடமும் எங்கள் வீட்டில் கேட்பார்கள். நானும் விடாது அவர்கள் கேட்டதற்காகவாவது வெடித்தே தீருவது என்று ஆட்டம்பாம், லக்ஷ்மி வெடி என்று ஒன்று பாக்கியில்லாமல் வெடிப் பதில் எனக்கு ஆர்வம் அதிகம். ஆனால் ஒன்று, பட்டாசு வெடிக்க பணம் அதிகம் செல வழிப்பதில் நான் பயப்பட மாட்டேன். மாறாகக் குழந்தைகளுக்கு ஒரு விபத் தும் ஏற்படாதவாறு பாதுகாப் பதில்தான் என் கவலையே இருக் கும்.''

## குமாரி ரம்யா பாலசந்திரன் :

"பட்டாசு வெடிப்பது என் றால் எனக்கு உயிர். மேலும் நாங்கள் வசிப்பது ஒரு பெரிய காலனியானதால் யார் அதிகம் பட்டாசு வாங்கியிருக் கிறார்கள் என்பதில் எங்களுக்குள் ஒரு போட்டியே நடக்கும். பெரிய பெரிய வெடிகள் எல்லாம் காலனியில் பொதுவில் வாங்கி வெடித்தாலும், கடைக்குச் செல் லும் போது எனக்கும், என் அம்மாவிற்கும் கடைக்காரர் முன்பே சண்டை ஆரம்பித்து விடும்.

பட்டுப் புடைவைகளைத் துவைக்கும் போது, சலவை சோப் உபயோகிக்காமல், உடம்புக்குப் போட்டுக் குளிக்கும் வாசனை சோப்பை உபயோகித்தால் புடைவை கெட்டுப் போகாமல் இருப்பதுடன், நல்ல வாசனை யுடனும் இருக்கும்.

- எஸ். உமா



எனக்காக ஓரளவு விட்டுக் கொடுத்தாலும் கடையில் அம்மாதான் ஜெயிப்பார். எனக்கு மனத்தின் ஓரத்தில் வருத்த மிருந்தாலும் அம்மா சொல்வதிலும் நியாயமிருக்கிறது என்பதை உணர்ந்து இறுதியில் நான் சமாதானமாகி விடு வேன்.''

அதிக பட்டாசு கொளுத்திக் குழந் தைகள் கையைச் சுட்டுக் கொள்ளவும் வேண்டாம். போட்ட பட்ஜெட்டை அதிக மாக்கி பட்டாசு விலை உங்கள் கையைக் கடிக்கவும் வேண்டாம். எனவே அளவோடு வெடித்து மகிழ்வோடு கொண் டாடலாமே தீபாவளியை.

தொகுப்பு : கீதா

# பங்கு மார்க்கெட்டா?
# டெபாசிட் மார்க்கெட்டா?




1. பங்கு மார்க்கெட்டில் போடப்படும் பணம் சூதாட்ட வகையை சேர்ந்தது. டெபாசிட் மார்க்கெட்டில் ஈடுபடுத்தப்படும் பணம் நேரிடையாக உற்பத்திக்கு உபயோகப்படுத்தப்படுகிறது.
2. மொத்தத்தில் பங்கு மார்க்கெட்டில் லாபம் ஈட்டியவர் கிடையாது. ஒருவருடைய லாபம் மற்றவருடைய நஷ்டம் என்பது பங்கு மார்க்கெட் நியதி. லாபத்தைப் பெரிதாக சொல்பவர்கள் நஷ்டம் ஏற்படும் போது மவுனம் சாதிப்பர்.
3. பங்கு மார்க்கெட்டில் விளையாடும் மியூச்சுவல் நிதி நிறுவனங்களுக்கு வருமான வரி கிடையாது. விளையாட்டில் பங்கேற்கும் மற்றவர்களுக்கு வரி உண்டு.
4. பங்கு மார்க்கெட்டில் காணப்படும் லாபம் பெரும்பாலும் மாயை. பேப்பரைப் பார்த்தே சந்தோஷப்பட்டுக் கொண்டிருக்க வேண்டியதுதான்.
5. டிவிடெண்டு தொகை முதலீட்டில் 2-3 சதவிகிதம் கூடக் கட்டாது. ஆனால் அதே பணத்தை அதே கம்பெனிகளில் நேரிடையாக முதலீடு செய்தால் ஒரு ஆண்டுக்கு 15 சதவிகிதம் வட்டி பெறலாம்.
6. பங்கு மார்க்கெட் லாபத்திற்கு வரி உண்டு. ஆனால் பங்கு மார்க்கெட் நஷ்டத்தை மற்ற வருமானத்தில் ஈடு செய்ய முடியாது.
7. பங்கு மார்க்கெட்டில் சூதாட எல்லோருக்கும் ஆசை உண்டு ஆனால் டெபாசிட் மார்க்கெட்டில் முதலீடு செய்பவர்கள் குறைவு.

* நீங்கள் சூதாட்ட விரும்பியா? அல்லது முதலீட்டாளரா? நீங்களே தீர்மானியுங்கள்!

**For unbiased and reliable information on investment matters read "INTEGRATED NEWS" regularly.**



**INTEGRATED ENTERPRISES (INDIA) LTD.**

A National Movement of Investors

*Absolute Integrity to Investors.*

Contact us at any of our branches.

சென்னை: 1, ஸ்ரீ ப்ளாட், 42, மோதிலால் தெரு, தி. நகர், (447830 / 445193) மற்றும் மயிலாப்பூர், அடையார், அண்ணாநகர், பாரிமுனை, தங்கதல்லூர்: கோயம்புத்தூர்: ஸ்ரீநிவாசா டிரேட் சென்டர், 159, (2வது மாடி), டி.பி. ரோடு, ஆர் எஸ். புரம், (41944) மதுரை: 38, முதல் மாடி, வடக்கு வெளி வீதி. திருச்சி: சித்ரா காம்ப்ளெக்ஸ், முதல் மாடி, சிந்தாமணி, (33670) மற்றும் கும்பகோணம், திருநெல்வேலி, காரைக்குடி மற்றும் பம்பாய், பெங்களூர், ஹைதராபாத், டெல்லி, கல்கத்தா, பூனா.

**Special Mobilisation Drive**

எந்த வகை முதலீடாக இருந்தாலும், அதோடு இந்த 'கூப்பனை' இணைத்து, உங்களுக்கான சிறப்பு ஊக்கத் தொகையைப் பெற்றுக் கொள்ளுங்கள்.
மேலும் இந்த விளம்பரத் தொடரின் 4 பகுதிகளையும் சேகரித்து ஒரு சிறப்பு அன்பளிப்பைக் கேட்டு வாங்குங்கள்.

AAA/IE/9275 T

# அந்த நாட்களின் தொல்லை அறவே உங்களுக்கு இல்லை



பட்டிலும் மெல்லிய முதன்மையாக
விஸ்கோஸ் இழைகள் முழுமையான சுகம்
உயர்ரகப் பருத்தியை அடுக்காக,
அமைத்த நிலை அதிகமாக உறிஞ்சும்
உறிஞ்சும் தன்மையற்ற நீலநிற
பருத்தி இழைகளினால் மூடிய
அடிப்பாகம் உள்ளாடைகள்
கறைபடாமல் பாதுகாக்கும்
நமது சீதோஷ்ண நிலைக்குத்
தகுந்தாற்போல் அமைந்திருப்பதால்
100% திருப்தியை
அளிக்கிறது.

**NEW helena**

*ஹெலனா உங்களின் துணை!*
*இல்லை இதற்கு இணை!*




சர்காட் இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிட்
மில்: சூரியநாராயணபுரம், ரேணிகுண்டா (A.P.)
தலைமை அலுவலகம்: 23, புரசைவாக்கம் நெடுஞ்சாலை,
சென்னை-600 007. போன்: 6421982/6422004

*Carrying a helena is carrying confidence*

AIKSERVE

# நிம்மதியான நித்திரைக்கு

# ஓர் உறக்க மாத்திரை.




**6-டு-6. கொசுக்களிடமிருந்து முழு இரவுப் பாதுகாப்புக்கு.**

ஜப்பானின் சுமிடோமோ கம்பெனியின் மூலப்பொருளுடன் வரும் 6-டு-6 மட்டுமே நீண்ட நேரம் நிலைத்து நிற்கிறது. எனவே கொசுக்கடியில்லாத நிம்மதியான நித்திரைக்கு 6-டு-6 பாதுகாப்பு பெற்றிடுங்கள். இரவு முழுதும் அமைதியாக இனி உறங்கலாம்.

மிகச்சிறந்த பலன்களுக்கு ஜப்பானில் தயாரிக்கப்பட்ட தெர்மிஸ்டர் கொண்ட 6-டு-5 எலக்ட்ரானிக் வேப்பரைஸரையே பயன்படுத்தவும்.

6 TO 6
SIX-TO-SIX

**இரவிலே இல்லை கொசுக்களின் தொல்லை.**

50 வருடங்களுக்கும் மேலாக உங்களைப் பாதுகாத்து வரும் கிரௌன் பிராண்ட் பூச்சி மருந்து தயாரிப்பாளர் வழங்குவது.

Enterprise Blr SFL TM



* கூட்டத்தின் ஒரு பகுதி....

# மதுரையில்...

மகளிர் - மருத்துவர் சந்திப்பு சமீபத்தில் மதுரையில் நடைபெற்றது. மீனாட்சி ஆட்சி செய்யும் மதுரை ஆயிற்றே! மதுரை மாநகரைச் சேர்ந்த அனைத்து மகளிர் சங்கங்களும் கலந்து கொண்ட இந்த விழாவில் தமிழ்நாடு மருத்துவமனையைச் சேர்ந்த மருத்துவர்களும் மகிழ்ச்சியோடு பங்கேற்றனர். டாக்டர்கள் - ரவி ராஜகோபால், அஜித்யாதவ், மீனாட்சி, உஷா ஸ்ரீராம் இவர்கள் பெண்களின் கேள்விக் கணைகளில் புகுந்து வெற்றிகரமாக வெளிவந்தனர். நிர்வாக இயக்குநர் வேலுசாமி கலந்து கொண்ட இவ்விழாவிற்குச் சிறப்பு விருந்தினராக மதுரை அகில இந்திய வானொலி நிலைய இயக்குனர் லீலாவும் வந்திருந்தார்.

நிறைய பேர் மிகவும் பயனுள்ள கேள்விகளைக் கேட்டனர்....

கோமதி : மாதாந்திர விலக்கு நாட்களுக்கு முன்பு டிப்ரெஷன் வருகிறதே. இதை நீக்க முடியாதா?

மீனாட்சி : இது தற்காலிகமானதுதான். மனதை ஆரோக்கியமாக, உடலைச் சுறுசுறுப்பாக வைத்துக் கொண்டால் போதும். இது மாதாந்திர டிப்ரெஷன்தான் என உணர்ந்து கொண்டாலே நம்மால் இவற்றை வெற்றிகரமாகச் சமாளிக்க முடியும்.

லதா : குழந்தைகளுக்கு அடிக்கடி உடம்பு படுத்துகிறது. டாக்டர்கள் எழுதிக் கொடுக்கும் ஆண்டிபயாடிக் கொடுத்தால் மிகவும் 'வீக்'காகி விடுகிறார்கள்.

* வேலுசாமி * ரவி * அஜித் * லீலா




எழுந்திருப்பதே இல்லை. என்ன செய்ய லாம்?

*உஷா* : எங்களுடைய குறிக்கோளே மிகக் குறைந்த அளவு மருந்துதான் கொடுக்க வேண்டும் என்பதுதான். பொது வாக ஆன்டி-பயாடிக் ஒரு குறிப்பிட்ட தினங்களுக்கு டாக்டர் சொல்லும் நாட் களுக்குக் கொடுப்பது நல்லது. உடம்பு சரி யாகி விட்டதே என நிறுத்தி விட்டால் மீண் டும் பழையபடி உடம்பு படுத்தும். ஆன்டி பயாடிக் உடம்பில் போய் எதிர்ப்புச் சக்தியை ஏற்படுத்தத்தான்.

*சாந்தி* : மார்பகங்களில் கொப்புளம் இருக்கிறது. இது கேன்சர்தானா என

* ஒரு வாசகி

எப்படிக் கண்டு பிடிப்பது?

*ரவி* : கொப்புளம் என்றாலே கேன்சர் எனப் பயப்பட வேண்டியதில்லை. கக்கங் களில் வியர்வை படிவதால் 'இன்ஃபெக் ஷன்' ஏற்பட்டு இருக்கலாம். அதே போல பலருக்கும் கைகளின் கீழ் பவுடர் போடும் பழக்கம் உண்டு. இதனாலும் ஏற்படலாம். இருந்தாலும் டாக்டரிடம் சென்று தரோ செக்-அப் செய்வதுதான் நல்லது.

*அழகம்மாள்* : குடும்பக் கட்டுப்பாடு ஆபரேஷன் செய்து கொண்டால் உடம்பு பெருத்துவிடுகிறது என்கிறார்களே....

*உஷா* : குடும்பக் கட்டுப்பாட்டு ஆப ரேஷனுக்கும் உடம்பு சதை போடுவதற்கும் சம்பந்தமே இல்லை. சிறிய ஆபரேஷன் தான் அது. நாமாக நமக்கு ஏதோ மிகப் பெரியது நடந்துவிட்டது என்று பயந்து கொண்டு படுக்கையை விட்டு எழுந்திருப் பதே இல்லை. இதனால் உடம்பு குண்டாகி விடுகிறது. குறிப்பிட்ட சில நாட்கள் ஓய் விற்குப் பிறகு வழக்கமான வேலை, வழக்கமான உடற்பயிற்சி எனத் தொடர்ந் தால் ஒன்றும் ஆகாது.

*பங்கஜம்* : முப்பத்தைந்து வயதிற் கெல்லாம் மாதவிலக்குப் பிரச்னைகள் வரு கிறது. மெனோபாஸ் தொந்தரவுகள் உள் ளது.

*மீனாட்சி* : முப்பத்தைந்து வயதில் வருவது மெனோபாஸ் தொந்தரவு இல்லை. நாமாக எதையும் நினைத்துக் கொள்ளக் கூடாது. வேறு ஏதேனும்

* உஷா * மீனாட்சி

# வீட்டிலேயே அம்லா கூந்தல் தைலம் தயாரியுங்கள்



அம்லாவின் (நெல்லிக்காய்) பயன்கள் காலம் காலமாக அறியப்பட்டிருக்கின்றன. கேசத்தை அடர்த்தியாகவும், செழுமையாகவும் பாதுகாப்பதற்கு அம்லா தைலம் உதவுகிறது.

குறிப்பிட்ட சில வேர்களையும், மூலிகைகளையும், அம்லா விழுதுடன் எண்ணெயில் கொதிக்கச் செய்தால், மூலப் பொருட்களின் நல்ல தன்மைகள் அனைத்தும், எண்ணெயுடன் சேர்ந்து, அம்லா தைலம் உருவாகின்றது.

*100 மில்லி அம்லா தைலம் தயாரிக்க தேவையானவை:*

அம்லாகி 3 கிராம், ப்ரமி 3 கிராம், ஜடமன்ஸி 2 கிராம், பத்ரா 2 கிராம், ஹரிதகி 2 கிராம், ரக்தசந்தன் 2 கிராம், சந்தன தைலம் 2 கிராம், தேங்காய் எண்ணை 99 மில்லி.

செய்முறை:

மேற்கண்ட மூலப்பொருட்களை அம்மியில் நன்கு விழுதாக அரைத்துக் கொண்டு பாத்திரத்தில் இட்டு மரக்கரண்டியால் மிதமான சூட்டில் கிளறவும். இதனுடன் எண்ணெயை சிறிது சிறிதாக சேர்த்து கொதிக்க வைக்கவும். மூலிகையிலுள்ள தண்ணீர் ஆவியான பிறகு பாத்திரத்தின் அடியில் கசண்டு தங்கும். இதில் சிறிது எடுத்து, சிறிய பந்தாக உருட்டி தீயில் காட்டவும். சீரான தீப்பிழம்பு தோன்றினால், தண்ணீர் முற்றிலும் ஆவியாகி விட்டதாகக் கொள்ளலாம். (இல்லையெனில் இன்னும் சிறிது நேரம் கலவையை கொதிக்க வைக்க வேண்டும்) பாத்திரத்தை இறக்கி, குளிர வைத்து கலவையை துணியில் வடிகட்டவும். இத்தைலத்தை ஏழு நாட்களுக்குப் பிறகு உபயோகப்படுத்தவும்.

பிரச்னைகள் இருக்கும். மருத்துவரிடம் செல்லுங்கள்.

*இந்திரா* : மெனோபாஸ் சமயத்தில் பிரச்னைகள் வந்துதான் தீருமா?

*உஷா* : இது உடம்பின் இயற்கை. மாதவிலக்கு வந்து கொண்டு இருக்கும் வரை நமக்குக் காவலாக இருந்த ஈஸ்ட் ரோஜன் குறைந்து, நின்றுவிடுவதால் நம் எலும்புகள் தேய ஆரம்பிக்கின்றன. ப்ளட் பிரஷர், இருதய நோய் எனப் பல வரலாம். மருத்தவர் ஆலோசனை பேரில் அவரவ ருக்கு ஏற்ற அளவில் ஈஸ்ட்ரஜோனை மருந் தாக எடுத்துக் கொள்ள வேண்டும். ஓரளவு



✱ மாதர் சங்கத்தின் ஆர்வம்

உடற்பயிற்சி, மனதை அமைதியாக வைத் துக் கொள்வது இப்படிப் பழக்கிக் கொண் டால் அதிகமான பிரச்னைகள் இருக்காது.

*ஜெயா* : மூல நோய் அறுவை சிகிச்சை யில்லாமல் சரிசெய்ய முடியுமா?

*ரவி* : மூல நோய்க்கு எளிய வைத் தியங்கள் இருக்கின்றன. இந்த இடத்தில் நான் ஒன்றைச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். மூல நோய் எனப் பலரும் நினைத்திருப்பார்கள். ஆனால் அது ஆசனவாயில் ஏற்பட்ட புற்றுநோயாகக் கூட இருக்கலாம். பொதுவாக நம்மவர்கள் நம்மால் முடிந்தவரை டாக்டரிடம் போகா மல் தள்ளிப் போடலாமே எனும் மனப் பான்மை உள்ளவர்கள். மிகவும் முற்றிய நிலையில் வருகிறார்கள். இந்த மனப் பான்மை மாற வேண்டும். பொது மக்க ளிடையே உடல் ஆரோக்கியத்தைப் பற்றிய விழிப்புணர்வு வேண்டும்.

*மகேஸ்வரி* : காலில் பித்த வெடிப் பிற்கு என்ன செய்யலாம்?

*மீனாட்சி* : பொதுவாக பெண்கள் முகத்தை அழகாக வைத்துக் கொள்ள பாடு படுவார்கள். கைகளைக் கூட கவனித்துக் கொள்வார்கள். கால்களுக்கு அவ்வளவு முக்கியத்துவம் கொடுப்பதில்லை. கால் கள் ஆரோக்கியமாக இருந்தால்தான் உடல் நலம் நன்றாக இருக்கும். மலிவான செருப்புக்களை வாங்கிப் போடுவதைத் தவிர்க்க வேண்டும். நம் காலிற்கும் சௌ கர்யமாக இருக்கும்படியான செருப்புக் களையே அணிய வேண்டும். 'ப்யூமிக் ஸ்டோன்' தேய்த்துக் கால்களைச் சுத்தப் படுத்திக் கொண்டால் பித்த வெடிப்பு வராது.

நிறைய கேள்விகள் வந்து கொண்டே இருந்தன. மூன்று மணி நேரத்திற்கும் மேல் ஆகிவிட்டதால் அதோடு கூட்டத்தை முடித் துக் கொள்ள வேண்டியதாயிற்று. மதுரை மகளிர் சார்பாகப் பேசிய லீலா அழகாக நிகழ்ச்சிகளைத் தொகுத்து விமர்சித்து விட்டார். 'பெண்கள் தங்கள் உடலை ஆரோக்கியமாகப் பார்த்துக் கொண்டால் குடும்பமே ஆரோக்கியமாக இருக்க முடி யும்' என்றார்.

**– கோம்ஸ்**

வீட்டிலேயே அம்லா
கூந்தல் தைலம் தயாரிக்க
நேரமோ அல்லது
விருப்பமோ
இல்லையெனில், இதற்கு
சரியான மாற்று வழி —
அம்லா ப்ளஸ் வாங்குதல்
மட்டுமே. இதில்
கிடைப்பதோ அம்லாவின்
அனைத்து நன்மைகளும்.




# அல்லது அம்லா ப்ளஸ் வாங்குங்கள்

தேங்காய் எண்ணையுடன்!
இத்துடன் மூலிகைகளின்
நன்மைகளும் சேர்ந்து
கிடைக்கின்றன! மேலும்
குறிப்பிட்ட அளவு தைலம்
மட்டுமே வெளியேறும்
ஒரு வித்தியாசமான,
வடிவமைப்புடன் கூடிய
பாட்டிலில் கிடைக்கின்றது.

- ✔ கேசம் உதிர்வதைத் தவிர்க்கும்
- ✔ பொடுகினைப் போக்கும்




## அம்லா ப்ளஸ்

பிரம்மி தைலம்



VVD

Gateway

# ஜுரத்தின் தீவிரம்

ஆகஸ்ட் '92. இதழ் "பரவி வரும் டியூஷன் ஜுரம்" கட்டுரை தக்க சமயத்தில் எழுதப்பட்டது. "Need of the day" என்பார்களே அதுபோல. ஆனாலும் ஜுரத்தின் தீவிரத்தைப் பற்றி எழுத விட்டு விட்டீர்களே - அதான் டியூஷன் ரேட்!

பம்பாயில் நான் பலரிடம் இது பற்றிப் பேசியதில் என் மனத்தில் பட்டதை எழுதுகிறேன்.

டியூஷன் எடுப்பது ஒரு பிஸினஸ். லாபம் மிக அதிகம். எல்.கே.ஜியிலிருந்து குழந்தைகளை டியூஷனுக்கு அனுப்பும் பெற்றோர்கள் உண்டு. எல்.கே.ஜி, யூ.கே.ஜி. டீச்சர்கள் தங்கள் மாணவ மாணவிகளுக்கு வீட்டில் டியூஷன் எடுக்கிறார்கள். பார்ட் டைம் ஸ்கூல் வேலை. வீட்டில் பாட்ச் பாட்ச் ஆக 8-10 குழந்தைகளுக்கு டியூஷன். ஒரு குழந்தைக்கு மாதச் சம்பளம் ரூபாய் 100. வகுப்பில் எட்டு குழந்தைகள் தங்கள் டீச்சர் வீட்டிற்குப் போய் ஹோம்



வொர்க் செய்வதை பெருமை யாகப் பேசும் போது மற்ற குழந்தைகளும் டீச்சர் வீட்டிற்குப் போக விரும்புகின்றன. அடம் பிடிக்கின்றன. பெற்றோரும் அனுப்புகிறார்கள்.



அடுத்தது ஒன்று முதல் நான்கு வகுப்பு வரை ப்ரைமரி. எனக்குத் தெரிந்து வேலைக்கு என்று வெளியே போகாமல் வீட்டில் இருக்கும் (அநேகமாக க்ராஜுவேட்டாக இருப்பார்கள்) பெண்மணிகள் தங்கள் குழந்தை எந்த வகுப்பில் படிக்கிறதோ, அதே வகுப்பில் (வேறு ஸ்கூலாளாலும்) படிக்கும் குழந்தைகளுக்கு மட்டும் டியூஷன் எடுப்பதை வழக்க மாக்கிக் கொண்டிருக்கிறார்கள். தினமும் மாலையில் 1 மணி நேரம் தன் குழந்தையும் ஹோம் வொர்க் செய்து பாடம் படிக்கும். மற்றவர்களுக்குச் சொல்லிக் கொடுப்பதால் பணமும் ஆயிற்று. மாதம் ரூபாய் 150 முதல் 200 வரை வாங்குகிறார்கள்.

ஐந்து முதல் எட்டு வரை வகுப்பில் படிக்கும் மாணவமாணவிகளுக்கு ஸ்கூல் டீச்சர்கள் விஷய வாரியாக டியூஷன் எடுக்கிறார்கள். முக்கியமாகக் கணக்கு டீச்சருக்குக் கிராக்கி அதிகம். இதில் இரண்டு விதம் உண்டு. ஒரு விஷயத்திற்கு மாதம் ஐம்பது ரூபாய் வாங்குவது. அல்லது அந்த விஷயத்தில் முழு ஸிலபஸ் கவர் செய்ய 500 ரூபாய். இந்த முறையில் முதல் மூன்று மாதத்தில் முழு புக்கை முடித்து விடுகிறார்கள். பிறகு வாரம் ஒரு முறை டாபிக் வாரியாக கேள்வித்தாள் கொடுத்து குழந்தைகளைப் பதில் எழுத வைக்கிறார்கள்.

ஹைஸ்கூல் வகுப்புகளுக்கு. ஒன்பது முதல் 12 வரை வகுப்புகளுக்கு இருக்கவே இருக்கிறது - கோச்சிங் க்ளாஸஸ். இதிலும் இரண்டு வகை - 'வெகேஷன்' அல்லது 'ரெகுலர்.' வெகேஷன் என்பது 8 ம் க்ளாஸ் முழுப் பரீட்சை முடிந்த ஒரு வாரத்தில் 9 ம் க்ளாஸ் பாடம் ஆரம்பிக்கப்படும். ஸெகண்ட் டெர்ம் மார்க் பார்த்து அட்மிஷன். 2 மாத லீவில் முழு வருட கோர்ஸ் முடித்து விட்டு ஆகஸ்ட், செப்டம்பர், அக்டோபரில் வாரா வாரம் ஞாயிற்றுக் கிழமை டாபிக் வாரியாக டெஸ்ட்டுகள். பிறகு தீபாவளி லீவில் (3 வாரம்) 'ரிவிஷன்' நடக்கும். கோச்சிங் கிளாஸூம் ரக வாரியாக இருக் கும். 80% ம் அதற்கு மேலும் வாங்கு பவர்களுக்கு மட்டும் அட்மிஷன் கொடுக் கும் க்ளாஸ், 60% மேல் வாங்குபவர் களுக்கே அட்மிஷன் கிடைக்கும் க்ளாஸ், மற்ற ரகம் பாஸான எல்லா மாணவர்களையும் சேர்த்துக் கொள் ளும் ரகம். Fees இரண்டாயிரத்து ஐந்நூறிலிருந்து மூவாயிரத்து ஐந்நூறு வரை.

11, 12 ம் வகுப்பு (+1, +2) இந்த கோச்சிங் கிளாஸ் நடத்தும் ஆசிரியர்களே ''ப்ரைவேட்'' டியூஷனும் அதே க்ளாஸில் வைத்து வாரத்தில் 2 அல்லது மூன்று நாட்கள் எடுக்கிறார்கள். 5 (அ) 6 மாணவர்கள் இருப்பார்கள். கணக்கிற்கு மட்டும் கோர்ஸிற்கு ரூபாய் பத்தாயிரமும் மற்றபடி பிஸிக்ஸ், கெமிஸ்ட்ரி, பயாலஜிக்கு - ஒவ்வொன்றிற்கு எட்டாயிரம் ரூபாயும்தான் ஸ்டாண்டர்ட் ரேட். ரூபாய்



தீபாவளி ஸ்வீட்ஸ் செய்யும்பொழுது, சில சமயங்களில் லட்டு, பர்பி, மைசூர் பாகு போன்றவற்றிற்குச் சர்க்கரையின் அளவு மறந்து காலை வாரிவிடுவதுண்டு. அதற்காகச் சில (ஞாபக) குறிப்புகள் :

*மைசூர் பாகு* : ஒரு கப் கடலை மாவிற்கு - 2 கப் சர்க்கரை, 3 கப் நெய் சரியான அளவு முறையாகும்.

*தேங்காய் பர்பி* : ஒரு கப் தேங்காய்த் துருவலுக்கு - ஒரு கப் சர்க்கரை, 1/2 கப் நெய் போதும்.

*பயத்தம் பருப்பு 'ரவ'லட்டு* : ஒரு கப் பயத்தம் பருப்பு, 1 கப் சர்க்கரை, 1/2 கப் நெய் இருக்க வேண்டும்.

*பூந்தி லட்டு* : ஒரு கப் கடலை மாவு, 1 கப் சர்க்கரை, 1/2 கப் நெய் சேர்க்க வேண்டும்.

*அதிரசம்* : ஒரு கப் இடித்த ஈரமான அரிசி மாவு, ஒரு கப் வெல்லம் போதுமானது.

*குலோப் ஜாமூன்* : ஒரு கப் பால்கோவா, 3 கப் சர்க்கரை, 2 டீஸ்பூன் மைதா மாவு போதுமான அளவு முறையாகும்.

- பாலா

முப்பத்து நாலாயிரம் கொடுத்து 12 வதிற்கு எல்லா விஷயங்களுக்கும் ப்ரைவேட் டியூஷன் வைத்துக் கொள்ளும் (இவர்கள் 10ஸ்ரீ ல் 80 திலை 85% ற்கு மேலே வாங்கியவர்கள்) பல மாணவ மாணவிகளும் இருக்கிறார்கள்.

இப்படிப் படித்து 12 வதில் 90% ற்கு மேலும் மார்க் வாங்கியும் என்ஜினியரிங், மெடிகல் இரண்டிலும் ஸீட் கிடைக்காமல் விரக்தியாகி, பி.எஸ்ஸி. பிஸிக்ஸ், கெமிஸ்ட்ரி, எடுத்துப் படிக்கும் மாணவ மாணவிகள் பலர். இவர்கள் 8 ம் க்ளாஸிலிருந்தே கோச்சிங் கிளாஸ் போகிறார்கள். ஆக நான்கு வருடங்களாக வெகேஷன் கூட இல்லாமல் படிப்பவர்கள்.

இப்படிப்பட்ட டியூஷன்கள் ஆசிரியர்களுக்கு பணம் பண்ணுவதற்கு, வாய்ப்பளிக்கிறது என்பது மட்டுமே உண்மை. ஸ்கூல், ஜூனியர் காலேஜ்களில் லெக்சரராக இருக்கும் ஆசிரியர்களே தான் கோச்சிங் க்ளாஸ்களிலும் பாடம் நடத்தி, ப்ரைவேட் டியூஷனும் எடுக்கிறார்கள். வகுப்பில் பார்க்கப் போனால் 5% ற்கும் கீழே தான் கோச்சிங் க்ளாஸ் அட்டெண்ட் செய்யாத மாணவர்கள் இருக்கிறார்கள். இதனால் என்னாகிறது? ஆசிரியர்களும் வகுப்பில் சின்சியராக பாடம் நடத்துவதில்லை. அல்லது நடத்த அனுமதிக்கப்படுவதில்லை.. அவர்களுக்கும் ஆர்வம் இல்லை. மாணவர்களும் வகுப்பில் பாடத்தில் கவனம் செலுத்துவதில்லை. க்ளாஸ், ப்ரைவேட் டியூஷன், ப்ரிண்டட் - சைக்ளோஸ்டைல்ட் நோட்ஸ், முதலியன இருக்கவே இருக்கிறது. மேலும் +1 அண்ட் +2 காலேஜில் இருக்கும் 90 சதவிகிதம் காலேஜ்களில் அட்டெண்டன்ஸ் கம்பல்ஸரி இல்லாததால் மாணவர்கள் ப்ராக்டிகல்ஸிற்கு மட்டுமே காலேஜ் போகிறார்கள். லெக்சர்ஸ் அட்டெண்ட் செய்பவர்கள் மிக மிகக் குறைவு.

எவ்வளவுதான் பணம் கொடுத்து எத்தனை டியூஷன் வைத்தாலும் பரீட்சை எழுத வேண்டியது குழந்தைகள்தானே. ஒவ்வொரு குழந்தைக்கும் ஒரு capacity, ஒரு ability க்கும் லிமிட் உண்டு, என்பதை பெற்றோரும் புரிந்து கொள்ள வேண்டாமா? எட்டாயிரம், பத்தாயிரம் என்று ஒவ்வொரு மாணவர்க்கும் ஃபீஸ் வாங்குவது (எத்தனைதான் மண்டையில் புகுத்தட்டுமே) பகல் கொள்ளை இல்லையா?

இந்தப் போக்கு சரியா? மற்ற வாசகியர், - பெற்றோர்கள், ஆசிரியர்கள் இது பற்றி என்ன நினைக்கிறார்கள்? ஏன் இந்த rat race? எதைச் சாதிக்க? இதற்கு மாற்று வழிதான் என்ன?

– டி. ஜானகி

தங்கம் போல் மனிதர் வேண்டும்
வைரம் போல் உள்ளம் வேண்டும்
தீபாவளி சிறக்க வேண்டும்
திசையெல்லாம் செழிக்க வேண்டும்

— கவியரசு வைரமுத்து





# பாலு ஜுவல்லர்ஸ்

72, உஸ்மான் சாலை, தி.நகர், சென்னை-17 போன்: 441812, 441741.

## 21%

WE ACCEPT
FIXED DEPOSITS
AT 21% INTEREST P.A.
INTEREST PAID: MONTHLY
MINIMUM AMOUNT: RS. 5000
PERIOD OF DEPOSIT: ONE YEAR

ஒரு மனிதனுக்குப் போறாத காலம் என்றால் அது எப்படி வேண்டுமானாலும் வரலாம். சாப்பிட்டு விட்டு நிம்மதியாகத் தூங்கலாம் என்று வந்து படுத்தால் மீண்டும் எழுந்திருக்க முடியாத ஸ்ட்ரோக்காக, வெளே என்று பிளாட்பாரத்தின் ஓரமாக போய்க் கொண்டிருக்கும் பொழுது, ப்ரேக் இழந்து பிளாட்ஃபாரத்தில் ஏறி



மோதித் தள்ளும் பல்லவன் வடிவத்தில் இப்படி எப்படி வேண்டுமானாலும் வரலாம். ஆனால் எனக்கு வெகு வினோதமாக என்னுடைய செக்ரெட்டரி ரூபத்தில் வந்தது.

என்னுடைய உழைப்பு எங்கள் கம்பெனியின் விற்பனை டார்ஜெட்டைத் தாண்டி அதில் கம்பெனிக்குக் கணிசமான லாபம் கிடைத்ததோடு, இந்த ரீஜனிலேயே

கொடைக்கானல்
KODAIKANAL

# கொடைக்கானல் போனோம்



அதிகம் விற்பனை செய்த டிவிஷன் என்ற சிறப்பும் சேர எங்கள் மானேஜர் மகாருஷியானார்.

எல்லோருக்கும் முன்னால் அவர் என்னை, ஆஹா! ஓஹோ வென்று புகழ்ந்தபொழுதே பயந் தேன். பயந்தபடியேதான் நடந்தது. என் னைத் தனியாக அழைத்து, ''இந்த சண்டே டின்னருக்கு எங்க வீட்டுக்கு வந்துடு ஓ.கே.?''

''இல்லை... எதுக்...?''

''என்ன எதுக்கு? சாப்பிடத்தான். நான் என் வொய்ஃப்கிட்டே சொல்லியாச்சு. அவ இதுக்காக தன்னோட ப்ரொக்ராமெல் லாம் கேன்சல் பண்ணியிருக்கா, லோ யூ ஆர் கமிங் வித் யுவர் வொய்ஃப்...''



ஆணையிட்டு விட்டு ஃபைலை தீ வி ர மாக பார்ப்பது போலப் பாவனை செய் தார்.

அவருக்கு அஸிடிடி வந்தாலும் வந்தது. அதுதான் சாக்கென்று அவர் மனைவி புளி சேரக் கூடாது, காரம் அதிகம் கூடாது, கிழங்கு கூடாது, எண்ணெய் கூடாது என்று தினசரி பத்திய சமையலை சமைக்க... இவருக்கு நாக்கு அருவருத்துப் போகும்போதெல்லாம் எங்களில் யாரை யாவது ஏதாவது சாக்குச் சொல்லிச் சாப் பிடக் கூப்பிட்டு விடுவார்.

வேறு வழியில்லை போய்த்தான் ஆக வேண்டும். அங்கு போய் மானேஜர் யாரை யாவது சாப்பிடக் கூப்பிட்டாலே அவர் மனைவி செய்யும் சாம்பார் சாதத்தையோ, பிஸிபேளாபாத்தையோ, வாங்கிபாத் தையோ, உருளைக் கிழங்கு டோஸ்டோட சாப்பிட வேண்டும். அவர் கைவசம் இருக் கும் எத்தனையோ முறை கேட்டு அலுத்த இரண்டு ஜோக்குகளுக்கு விலாநோக சிரிக்க வேண்டும். அவர் குழந்தைகளின் அதிகப்பிரசங்கித்தனங்களை, ''ஐயோ

நிரஞ்சனா



"என்ன அறிவுக் கூர்மை!" என்று சிலாகிக்க வேண்டும். இதையெல்லாம் விட அவர் மனைவி புதிதாக வாங்கியுள்ள நகையையோ, புடவையையோ, க்லாஸ் வேரையோ, துடைப்பத்தையோ பார்த்து விட்டு என் மனைவி என்னோடு போடப் போகும் சண்டைக்கும், அதன் பிறகு சமாதான நடவடிக்கைக்காக செலவிட வேண்டியதற்கும் ஆயத்தமாக வேண்டும்.

மாலை காப்பியைக் குடித்துக் கொண்டே சாருவிடம் விஷயத்தைச் சொன்னேன்.

"அப்படியா அப்போ நான் அந்த பின்னி சில்க்கை எடுத்துக்கலாம்..." என்றவுடன் நில அதிர்ச்சிக்குள்ளானது போல... என்றெல்லாம் சொன்னால் அது பொய். சாரு அவ்வப்பொழுது வீசும் குண்டுகளை சமாளித்துச் சமாளித்து நான் 'ஷாக்ப்ரூஃப்' ஆகவே மாறி விட்டேன். ஹைட்ரஜன் குண்டாவது, நைட்ரஜன் குண்டாவது ஒன்றும் இனிமேல் என்னை எதுவும் செய்ய முடியாது.

"என் ஃப்ரெண்ட் மீனா மத்தியானம் வந்திருந்தா. அவளுக்காக இந்தப் புடைவையை வாங்கினாளாம். ஆனா அவ ஹஸ்பெண்ட் அவளுக்கு இந்தக் கலர் சூட்டாகாதுன்னு சொன்னாராம். நான் ஃபேராக இருப்பதால் எனக்கு நல்லா சூட்டாகும்னு மீனா சொன்னா..."

இப்போது இதை நான் ஆமோதித்தாலும் கஷ்டம், ஆமோதிக்காவிட்டாலும் கஷ்டம். ரெண்டுங்கெட்டானாக "ம்ம் புடைவை நல்லாத்தான் இருக்கு. ஆனா இப்போ... எது...க்...கு..?"

"ஒங்க மானேஜர் வீட்ல சாப்பிடக் கூப்பிட்டிருக்காங்க, பளிச்சுனு ட்ரெஸ் பண்ணிண்டு போக வேண்டாமா...? தவிர போன தடவை உங்க மானேஜர் வொய்ஃப் ஒரு பின்னி சில்க் கட்டிண்டிருந்தா. என்ன விலைன்னு கேட்டதுக்கு, இதெல்லாம் ரொம்ப காஸ்ட்லின்னு திமிரா பதில் சொன்னா. அவளால தான் காஸ்ட்லி புடவை கட்டிக்க முடியுமா? என்னாலேயும் முடியும்னு காட்டணும்..."

"காஸ்ட்லி புடைவ கட்டிக்கணும்னா ஒங்கிட்ட எவ்ளோ பட்டு சாரி இருக்கு. அதுல ஒண்ணு கட்டிக்கோயேன்."

"ம்ம்... நீங்க பஞ்ச கச்சம் கட்டிண்டு வாங்கோ, நான் பட்டு சாரி கட்டிக்கறேன்..."

"அப்போ எதுக்குப் பட்டுப் புடவை வாங்கணும்...?"

"ரொம்ப அழகா இருக்கே. கோவில் குளம், நாள், கிழமை, கல்யாணம் கார்த்தி... இதுக்கெல்லாம் பட்டுப் புடவை வேண்டாமா?"

நான் வாயடைத்துக் கொண்டேன். "போன மாதம் ஒரு ஷிபான் வாங்கினாயே" என்று கேட்கவில்லை. அதற்கும் ஏதாவது பதில் இருக்கும். சாரு வழக்கம் போல் என் மௌனத்தைச் சாதகமாக எடுத்துக் கொண்டாள்.

"மீனா ரொம்ப நல்ல மாதிரி. இப்போ பணத்துக்கு அவசரமில்லை, மெதுவா மாசக் கடைசில கொடுன்னு சொல்விட்டா..."

இருபதாம் தேதி என்பது மாதம் முதல் என்று எண்ணும் சாருவுக்கு எப்படியோ இன்னும் பத்து நாள் டயம் இருக்கே என்று நினைத்துக் கொண்டேன்.

"இன்னும் கிளம்பலையா? பேப்பரெல்லாம் அப்புறம் படிக்கலாம். சீக்கிரம் கிளம்புங்கோ..."

"எங்கே...?"

"எங்கேயா? சரிதான் இன்னிக்கு ப்ளவுஸ் பீஸ் வாங்கி தைக்கக் குடுத்தாதான் அவன் சனிக்கிழமை சாயந்திரம் குடுப்பான்."

சாருவிடம் ஏற்கெனவே ரெண்டு கருப்பு ப்ளவுஸ்கள் இருப்பது என் நினைவுக்கு வந்தாலும் அதை வெளியே சொல்லவில்லை. சொல்லி என்ன பிரயோஜனம்?

"ஐயோ ஒங்களுக்குக் கலரைப் பத்தி ஏதாவது தெரியுமா? அது ப்ளாக்கிஷ் க்ரீன் இது க்ரீனிஷ் ப்ளாக்..." என்பாள். பேசாமல் கிளம்பினேன்.

"ஏன் இப்படி மூஞ்சியை உம்முனு வெச்சிண்டு வரீங்க? எப்படியும் என்னோட பர்த்டே இன்னும் பதினைந்து நாள்ல வரும். அதுக்கு வேற புடவை வாங்க வேண்டாம். நான் இதையே கட்டிக்கறேன்..."

குளிர்காலம் வந்துவிட்டால் குளிப்பதற்கு வெந்நீர் இல்லாமல் முடியாது. ஹீட்டரில் வெந்நீர் போடும் போது, பக்கெட்டின் குறுக்கே பொருந்தும்படியாக ஒரு கட்டையை வைத்து அதில் ஹீட்டரை மாட்டி விட்டால் ஷாக் அடிக்காது.

– எஸ். உமா



காண்டம்ஸ்தான்னு அவள் வற்புறுத்தினால் ?

புருஷனை அடக்கியாள்பவள். புருஷனைப் பத்தின அக்கறை இல்லாதவள்னு தெரிஞ்சுக்கலாம்.

புருஷன் 'வாஸக்டமி' செய்துக்கணும்னு அவ விரும்பினால் ?

அதே கதைதான். அவள் வச்சதுதான் சட்டம்.

லூப் அல்லது காப்பர் T-யை தேர்ந்தெடுத்தால் ?

பத்தினித் தெய்வம். தியாகத்தின் ஸ்வரூபம் !

மாத்திரை போட்டுக்கொள்பவளாக இருந்தால் ?

பாதகமில்லை. இலட்சியவாதியாக இருப்பாள்.

# "ஒரு பெண்ணின் புத்திசாலித்தனத்திற்கு சான்று கர்ப்பத்தடை சாதனத்தில் அவள் செய்யும் தேர்வு..."

ஹ ஹ ஹா ! அவள் தேர்ந்தெடுப்பது 'டுடே' என்றால் ?

சந்தேகமென்ன : தன்னம்பிக்கையும் புத்திசாலித்தனமும் நிறைந்தவள். புருஷனிடம் அக்கறை கொண்ட நவீன யுவதி.

பெரிய மனோதத்துவ நிபுணராக இருப்பீர்கள் போலிருக்கே ?

அதெல்லாம் இல்லை ! நான் புத்திசாலியான நவீன யுகத்து பெண்மணி. சுயகௌரவமும், புருஷனிடம் அக்கறையும் உண்டு. அவ்வளவுதான்.

புரிஞ்சுகிட்டேன் ! நீங்க 'டுடே' உபயோகிக்கிறீங்க இல்லையா ?

கெட்டிக்காரர்தான் நீங்க !

நன்றி ! அது எப்படி வேலை செய்யுதுன்னு கொஞ்சம் விவரமா சொல்ல முடியுமா ?

தாராளமா ! இது ரொம்ப சின்ன வில்லை வடிவில் இருக்கும். பாதுகாப்பு தேவைப்படும் சமயத்தில் உடலில் பொருத்திக்கணும் அவ்வளவுதான்.

அவ்வளவுதானா ?

ஆமாம் ! ரொம்ப சுலபமாகவும், அந்தரங்கமாகவும், சுயமாக இதை பொருத்திக்க முடியும்.

இதன் ஆற்றல் எப்படி ?

சர்வதேச கணக்குப்படி 99%-க்கும் அதிக ஆற்றல் கொண்டது.

பத்து நிமிடத்திற்குள் இது உடலில் கரைந்து, கருவணுக்களை தாக்கும் செயலைப் புரியும். இருக்கும் இடம்கூட தெரியாமல், வேலை முடித்ததும் தானாகவே உடலிலிருந்து வெளியேறியும் விடும்.



கருத்தடை பற்றிய இலவச பிரசுரத்தைப் பெற, சுய முகவரியிட்ட மற்றும் தபால் தலையுடன் கூடிய உறையை கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பவும். ட்ரில் கெமிக்கல்ஸ் & ஃபார்மாசூடிக்கல்ஸ் இந்தியா லிட்., ஸ்கைடெக் ஹவுஸ் அனெக்ஸ், மரோல், அந்தேரி (கிழக்கு), பம்பாய்-400 059.

அபாரமா இருக்கே !... சரி ஏதேனும் பின் விளைவு ஏற்படுமா ?

ஒண்ணே ஒண்ணு ஏற்படும்.

அட கஷ்டமே ! அதென்னது ?

முகத்தில் மலர்ச்சியை ஏற்படுத்தும் !

ஓஹோஹோ ! அதான் உங்களைப் பார்த்தாலே தெரியுதே !

**டுடே**

பெண்களின் அந்தரங்க கருத்தடை சாதனம்.



இப்போது இப்படித்தான் சொல்லுவாள். ஆனால் பர்த்டேக்கு நாலு நாள் முன்னால் ஒரு சாந்தா வந்து அவள் வாங்கிக் கொண்ட புடவை டிசைன் அவ ஹஸ்பெண்டுக்குப் பிடிக்கலைன்னு இவளிடம் குடுத்துட்டுப் போவாளே...!

அந்த ஞாயிற்றுக் கிழமை நாங்கள் மானேஜரின் வீட்டுக்குப் போன பொழுது, அவர்கள் வீட்டில் டீ.வி.யில் ஏதோ ஒரு தமிழ்ச் சினிமா ஓடிக் கொண்டிருந்தது. நாங்கள் போனதும் அவருடைய குழந்தைகள் வால்யூமைக் குறைத்து விட்டு டீ.வி. அருகே அமர்ந்து படம் பார்ப்பதைத் தொடர்ந்தனர். வழக்கமான நலவிசாரிப்புகள் முடிந்து எங்கள் பார்வை டீ.வி.யில் விழுந்த போது படத்தில் பாடல் காட்சி. அதுவரை ஏதோ ஒரு கிராமத்தில் பாவாடை, தாவணி அணிந்து குஞ்சலம் வைத்துப் பின்னிக் கொண்டிருந்த கதாநாயகியும், வேஷ்டியும், தாயத்துக் கயிறுமாக இருந்த கதாநாயகனும் திடீரென்று மாடர்ன் உடை அணிந்து, ஏதோ ஒரு மலைவாசஸ்தலத்தில் ஜிங்குஜிங்கென்று குதித்தார்கள். ஏரியில் படகோட்டினார்கள்.

படம் பார்த்துக் கொண்டிருந்த மானேஜரின் மகள் பாதியில் திரும்பி, "டாடி. இது கொடைக்கானல் லேக்தானே...?" - என்றாள்.

"ஆமாம், ஆமாம்" என்றவர் அதோடு நிற்காமல் என் பக்கம் திரும்பி, "நீங்கள் கொடைக்கானல் போயிருக்கிறீர்களா முரளி...?" என்றதுதான் என் போதாத காலம்.

"ம்ஹூம்.. இல்லை..." என்று சாரு என்னை முந்திக் கொண்டு பதில் சொன்னாள்.

"நைஸ் ப்ளேஸ், யூ ஷோல்டு ஸீ..." என்றவர் தொடர்ந்து, "உனக்குந்தான் லீவ் இருக்கே, ஜாலியா போயிட்டு வர வேண்டியதுதானே. இந்த வெயிலிலிருந்து ஒரு வாரம் தப்பிக்கலாம்" என்றார்.

"லீவெல்லாம் ப்ராப்ளம் இல்லை. இப்போ சீஸன் சமயமாச்சே, ரூம் கிடைக்க வேண்டாமா...?"

"ஓ! கமான்... ஸ்டே பண்றதா ப்ராப்ளம். நம்ம ஆபீஸிற்கு ஹோட்டல் ஸ்வயம்ப்ரகாஷ்ல ஒரு ரூம் உண்டு. நீ என்னிக்குப் போறன்னு சொல்லு. நான் உனக்கு ரூம் புக் பண்ணித் தரேன்..." என்று டிசைட் பண்ணி வேண்டும் என்பதற்கும், வேண்டாம் என்பதற்கும் எனக்கென்னவோ அதிகாரம் இருப்பது போலச் சொன்னார்.

வீட்டிற்கு வரும்பொழுது சாரு, "நான் கொடைக்கானல் பார்த்ததே இல்லை..." என்றாள்.

"நான் நிறையப் பார்த்திருக்கேன் சினிமால..."

என் ஜோக்கிற்கு அவள் சிரிக்கவில்லை. "இந்த வருஷம் போகலாமா? உங்க மானேஜர்தான் ரூம் புக் பண்ணித் தரேன்னு சொல்றாரே..."

"ரூம்தான் புக் பண்ணிக் கொடுப்பார். துட்டு நான்தான் குடுக்கணும். பாக்கி செலவெல்லாம் யார் பண்ணுவா...?"

சாரு வாயை மூடிக் கொண்டதில் அந்த சப்ஜெக்டையே மூடியாயிற்று என்று நினைத்தேன். மறுநாள் அவள் சித்தி வரும் வரை...

"வா சித்தி, எப்படியிருக்கே? உஷா கிட்டேயிருந்து லெட்டர் வரதா? உஷா எப்போ வருகிறாள்?"

"பத்தாம் தேதி வரா... இந்தத் தடவை அவ நேரா டில்லி வரப் போகிறாள்... நானும் சித்தப்பாவும் டில்லி போறோம். அங்கேயிருந்து ஆக்ரா, சிம்லா எல்லாம் பார்த்துட்டு இங்கே வந்து பதினைந்து நாள்தான் இருப்பா, அப்புறம் நேரா சிங்கப்பூர், ஹாங்காங் போயிட்டு அப்படியே ஊருக்குப் போயிடறா. பாக்கேஜ் டூர்..."

"நீ ஏற்கெனவே டில்லி பார்த்திருக்கே இல்லியோ...?"

"அது அப்போ.. காசி, பத்ரியெல்லாம் போன போது.... சிம்லா, ஆக்ரா பார்க்கலையே. சித்தப்பா அடுத்த வருஷம் ரிடையர் ஆயிடுவா. அதுக்குள்ளே எல்.டி.ஸி.யில் போனால்தானே உண்டு."

தான் வீசிய குண்டின் விளைவை உணராமல் சித்தி போய் விட சாரு, "ஹூம் அதிர்ஷ்டம்! இந்த உஷா வெறும் எஸ். எஸ். எல். சி., நான்



★ காலையில் செய்த மோர்க்குழம்பு பிற்பகலிலேயே கண்ணை மூடிக் கொள்ளச் (புளிப்பு) சொல்லி விட்டது. அப்போது அரைத்த தோசைமாவில் கரைத்து வார்த்தேன். தோசை ஏ ஒன் மட்டுமல்ல. மங்கலமாக மஞ்சள் கலர் தோசையாகவும் இருந்தது.

- ரோஜி.

பி.எஸ்ஸி., படித்திருந்து என்ன பிரயோஜனம்? கேவலம் ஒரு கொடைக்கானல் போகக் கொடுத்து வைக்கலை.. இவ போன வருஷம் யூரோப் போயிட்டு வந்து அலட்டினா, இந்த வருஷம் ஃபார் ஈஸ்ட்... எல்லாத்துக்கும் தலைல எழுதியிருக்கணும்...''

அவளுடைய பொருமல் எனக்கு எரிச்சலூட்டினாலும், அது ஓரளவு நியாயமானது தான். கல்யாணமான இந்த இரண்டு வருடங்களில் நான் அவளை எங்கேயும் அழைத்துச் சென்றதில்லை. எனக்கு



அலையும் உத்யோகம் என்பதால் எப்போதடா வீட்டில் இருப்போம் என்றிருக்கும். அவளுடைய பிறந்த வீடும் சென்னையாகவே இருப்பதால் பிறந்த வீட்டிற்குப் போகும் சாக்கில் ஊருக்குப் போவதும் இல்லை. இப்போது ஒரு மாறுதலுக்குக் கொடைக்கானல் போனால் என்ன?

''வெரிகுட் டிஸிஷன்! போயிட்டு வா. இந்த வயசுல என்ஜாய் பண்ணாம அப்புறம் எப்போ என்ஜாய் பண்ண முடியும்? ஐ வில் அரேன்ஜ் ஃபார் யுவர் ஸ்டே'' - மானேஜர் தட்டிக் கொடுத்தார்.

நாங்கள் கொடைக்கானல் போகப் போவதை சாரு பக்கத்து வீட்டில் புத்தகம் இரவல் வாங்கி, அவுட் ஹவுஸ் குழந்தைகளை டீ.வி. பார்க்க அழைத்து, வேலைக் காரியோடு சிரித்துப் பேசி, லெட்டர் எழுதி, போன் பண்ணி எல்லோருக்கும் தெரியப்படுத்தினாள்.



அடுத்த ஒரு வாரத்தில் என் பர்ஸ் மள மளவென்று காலியாக, சாரு, கொடைக் கானல் போக சீப்பு, கொடைக்கானல் போக சோப்பு, கொடைக்கானல் போக ஸ்டிக்கர் பொட்டு... என்று வாங்கிய சாமான்களின் அளவு கல்யாண மாகிச் செல்லும் பெண்ணிற்கு வாங்கிக் கொடுக்கும் சாமான்களை விட அதிகம் இருந்தது.



ஊருக்குப் போவதற்கு நான்கு நாட்கள் முன்பிருந்தே பாக் பண்ண ஆரம்பித்து விட்டாள். தன் பீரோவை தலை கீழாகக் கொட்டி முதலில் பச்சைப் புடைவையை எடுத்து வைப்பாள். ''பச்சை வேண்டாம் அங்கே எங்க பார்த்தாலும் பச்சையாக இருக்கும். காண்ட்ராஸ்டாக ஏதாவது கட்டிக் கொள்ளலாம்...'' என்று பச்சைப் புடவையை உள்ளே வைத்து விட்டு, சிவப்புப் புடவையை எடுத்து வைப்பாள். அதற்கு ப்ளவுஸ் பழசாகத் தோன்றும். உடனே அதை வைத்து விட்டு ப்ரவுன் புடவையை எடுத்து வைப்பாள்.

''சாரு அப்படியே எங்க நாக்பூர் அக்கா கொடுத்த ஷாலையும் எடுத்து வெச்சுக்கோ..''

''ஆமாம், பெரீ...ய்...ய ஷால்! ஒரு அரதல் பழசை தூக்கிப் போட மனசில்லாம ஒங்ககிட்டே குடுத்திருக்கா, அதை எடுத்து வெச்சுக்கணுமா? தவிர இது ஜூன் மாசம்தானே இப்போ ஒண்ணும் குளிராது...''

ஒரு இடத்தின் சீதோஷ்ணம் அது கடல் மட்டத்திலிருந்து எத்தனை உயரத்தில் இருக்கிறது என்பதைப் பொறுத்து மாறுபடும் என்னும் அடிப்படை பூகோளத்தை சாருவுக்குப் புரியவைக்கும் திராணி எனக்கில்லாததால் வாயை மூடிக் கொண்டேன்.

ஊருக்குக் கிளம்ப இரண்டு நாட்களுக்கு முன் திருச்சியில் இருக்கும் சாருவின் பெரியப்பா பையனுக்குச் சீமந்தம் என்று லெட்டர் வந்தது.

''எங்க பெரியப்பா அவ்வளவு பெரிய மனுஷன் (உசிலைமணி சைஸ்) தன் கைப்பட லெட்டர் எழுதியிருக்கார். போகாம இருக்கறது மரியாதை கிடையாது. தவிர அவருக்குப் பொண்ணே கிடையாது. நான் தான் பெண் ஸ்தானத்தில் இருந்து எல்லாம் செய்வேன். போற வழிதானே. தலையைக் காட்டிட்டுப் போயிடலாம்...''

''அங்க போனா ரெண்டு நாள் வேஸ்ட் ஆயிடும்...''

''எப்படி ரெண்டு நாளாகும், சீமந்தம் முடிஞ்சவுடனே சாப்பிட்டு விட்டுக் கிளம்பிடலாம்...''

''ரொம்ப அழகா இருக்குடி! வந்ததும் ஓடறேங்கறது... ஒருநாள்ல கொடைக் கானல் எங்கேயும் ஓடிடாது. சாயந்திரம் பூச்சூடலுக்கு நாத்தனார் ஸ்தானத்துல நீதான் இருக்கணும். நாளைக்கு ஃபர்ஸ்டு பஸ்



ஸுல ஒன்னை ஏத்தி விட்டுடறோம்..." சாருவின் பெரியம்மா கண்டிப்பாய்க் கூறி விட மீற முடியவில்லை.

நாத்தனார் ஸ்தானம் என்று கூறி விட்டதால் பூச்சூடல் பெண்ணுக்குப் புடவை எடுத்துக் கொடுக்கத்தான் வேண்டும் என்று சாரு. அவள் மன்னிக்கு ஒரு புடவையும் நான் இரண்டு புடவைகளும் எடுத்துக் கொண்டது வேறு விஷயம்.

சாரு அன்று இரவே எல்லோரிடமும், "போயிட்டு வரேன்" என்று சொல்லிக் கொண்டாள். "நாங்க காத்தால ஃபர்ஸ்ட் பஸ்ஸுல போயிடுவோம். நீங்கள்ளாம் தூங்கிண்டிருப்பீங்க, எதுக்கு எழுப்பிச் சிரமப்படுத்தணும்?"

காலையில் வீட்டில் உள்ள அனைவரும் அவளை எட்டு மணி வரை எழுப்ப வேண்டியிருந்தது.

அதற்குப் பிறகு முதல் காப்பி, செகண்ட் டோஸ், தர்ட் டோஸ், குளியல்.

"ஒரு வாய் சாப்டுட்டுப் போயிடலாமே...?"

"எந்த ராஜா எந்தப் பட்டணம் போனாலும் சாப்டவுடனே ஒரு பத்து நிமிஷம் படுத்துண்டாகணும்.."

பத்து நிமிடத்திற்குப் பிறகு ராகு காலம் ஆரம்பமானதை சாருவின் தவறு என்று சொல்ல முடியாது. எப்படியோ கிளம்பும் பொழுது மணி நாலு.

சாருவின் பெரியப்பாவிடம் விடை பெற்றுக் கொண்ட போது, துண்டை விரித்துப் படுத்திருந்தவர் எழுந்து கையிலிருந்த விசிறிக் காம்பை என் பக்கம் திருப்பி ஆட்டி, முகத்தை வேறு மேலே நீட்டி, "க்கும்...?" என்று உறும பயந்தே போனேன்.

பாதித் தூக்கத்தில் எழுப்பியதால் தன் பெரியப்பாவிற்குக் கோபம் வரும் என்று சாரு சொல்லியிருக்கிறாள். அதற்காக இப்படியா? என் அப்பா கூட என்னை விசிறிக் காம்பால் அடித்ததில்லை.

"ஸ்ஸ்... எப்படிப் போறீங்கன்னு பெரியப்பா கேக்கறார், சொல்லுங்களேன்..." என்று சாரு விலாவில் இடித்ததும்தான் அந்த உறுமலுக்கு இப்படியோர் அர்த்தம் உண்டு என்று தெரிந்தது.

"இங்கேர்ந்து நேரா மதுரை, மதுரைலேர்ந்து..." நான் முடிக்கும் முன் பெரியப்பா மறுபடி விசிறிக் காம்பை ஆட்டி, "ம்ஹூம்..." என்றார்.

பிறகு எழுந்து பக்கத்திலிருந்த சொம்பு ஜலத்தினால் வாயைக் கொப்புளித்து, "எதுக்கு அனாவசியமா மதுரை வரைக்கும் போவணும்? திண்டுக்கல்லில் எறங்குங்கோ, அங்கேர்ந்து கொடை ரோடுக்கு நிறைய பஸ் இருக்கு. கொடை ரோடுலேர்ந்து..."

கொடைக்கானல் செல்லும் கடைசி பஸ் சென்று ஐந்து நிமிடம் ஆகியிருந்தது.

"இனிமே நாளைக்குக் காலைல ஏழு மணிக்குத்தாங்க ஃபர்ஸ்ட் பஸ்..." என்ற டீக்கடைக்காரரிடம், "அப்போ இனிமே பஸ் கிடையாதா...?" என்று டி.வி.யில் பேட்டி எடுப்பவர் போல கேட்க அவர் முறைத்தார்.

"என்ன சார் கொடைக்கானலா...?" கேட்பது யார்... ஒரு டாக்ஸி டிரைவரா? "என்ன சார்..." மறுபடியும் என் மனத்திற்குள் சொல்லிப் பார்த்துக் கொண்டேன். எனக்குச் சிலிர்த்தது. "இன்னா? எவ்ளோ தர? குந்து..." என்று அஃறிணையில் விளிக்கப்பட்டே பழக்கமாகி விட்டதால் இவருடைய 'என்ன சாரு'க்காகவே அவர் வண்டியில் போவதென்று தீர்மானித்தேன்.

"அம்பாஸிடர் கார் இருக்கு. பெட்ரோல் போட்டுக்கணும், டீசல் பூட்டன வேன் இருக்கு. எது சார் வேணும்...?"

"அம்பாஸிடர்..." என்றேன் பிகுப்பாக.

"அறுநூறு ரூபா ஆகும் சார், வேனுக்கு நானூறு ரூபா ஆகும்..."

என் சந்தோஷம் அத்தனையும் நொடியில் மறைந்து போனது.

"என்னப்பா இது? கொஞ்சம் பார்த்துச் சொல்லுப்பா..."

"நீங்க எவ்ளோ சார் தருவீங்க...?"

கள்ளமில்லாத மனத்தோடு இருப்பதால்தான், குழந்தைகளின் முகம், யாவருடைய அன்பையும் பெறுகிறது. அதேமாதிரி மனத்தில் கல்மிஷம் இல்லாமலிருந்தால், முகம் தெளிவாக இருக்கும். எல்லோரும் விரும்புவர்.

- பார்வதி





சாரு ஏதோ சொல்ல வாயைத் திறப்பது தெரிந்தது. அவனை இப்போது பேச விடுவது ஆபத்து. சாருவுக்குப் பேரம் பேச ரொம்ப ஆசையுண்டு. காலையில் நான் பேப்பர் படித்துக் கொண்டிருக்கும் பொழுது பக்கத்து வீட்டிலிருந்து இரையும் ரேடியோ இரைச்சலையும் மீறி வாசலில் கறிகாய்க்காரனோடு சண்டை போடுவாள். அவன் ஒன்று எட்டணா சொல்லும் வாழைக்காய்களை, ''நோ பாருப்பா, அதெல்லாம் முடியாது, நான் மூணு எடுத்துக்கறேன், ஒண்ணே முக்கால் ரூபா குடுத்துடறேன்...'' என்று வெற்றிகரமாக வியாபாரத்தை முடிப்பாள். எனவே அவனைப் பேச விடாமல் முந்திக் கொண்டு, ஏதோ ஒரு குருட்டு தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, ''நானூறு ரூபா தர்றேன்...'' என்றேன்.

கையிலிருந்த பெட்டியைத் தொப்பென்று கீழே போட்டான். ''ஏய் சாருக்கு, நானூறு ரூபாய்க்கு மேல கொண்டு விடணுமாமே...'' என்று சற்றுத் தள்ளி நின்றிருந்த தன் நண்பர்களைப் பார்த்து கேலியாகக் கூறினான். அங்கிருந்த ஒருவன், ''பாவம் ஏன் சார் கஷ்டப்படுறீங்க? இப்படியே துண்டை விரிச்சுப் படுங்க. கார்த்தால மொத பஸ்ஸுல போயிடலாம்...'' என்றான்.

கொடை ரோடில் வந்து டாக்ஸி டிரைவர் ஒருவனின் கேலியை கேட்டுக் கொள்ள வேண்டும் என்பது தலையெழுத்து.

டீக்கடை ரேடியோவில் 'ஜெயமாலா' முடிந்து 'தேன் கிண்ணம்' துவங்கி விட்டது. சுற்றிலும் கவிந்து கொண்ட இருளில் நாங்கள் தனியே விடப்பட்டோம். இங்கு தங்குவதற்கு நல்ல ஹோட்டல் எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. நாங்கள் இருப்பதையே லட்சியம் செய்யாமல் டிரைவர் குழு அரட்டையடித்துக் கொண்டிருந்தது. கடைசியில் வேறு வழியில்லாமல் அவனிடம் மன்றாடித் தோற்று, கேட்டதைத் தருவதாக ஒப்புக் கொண்டு வேனில் ஏறினோம்.

''என்ன சார் ஹோட்டல்ல ரூம்லாம் புக் பண்ணிட்டீங்களா? இப்போ கோடை விழா நடக்குது. ரூமே கெடைக்காது...'' சொன்ன அவன் நாக்கு கரிநாக்காக இருக்க வேண்டும்.

ஹோட்டல் ஸ்வயம்பிரகாஷில் ரிசப்ஷனிஸ்ட் விவரம் கேட்டு விட்டு தடிமனான புத்தகத்தைத் திறந்து விவரம் தேடினார்.

''என்னிக்கு டெலிகிராம் கொடுத்தேன்னு சொன்னீங்க?'' என்று மீண்டும் சற்று சிறிய நோட் ஒன்றில் தேடி விட்டு, ''சாரி சார். உங்க பேர்ல ரூம் புக் பண்ணச் சொல்லி எந்த இன்பர்மேஷனும் எங்களுக்கு வரலை....'' என்றார்.

''விளையாடுறீங்களா? நான்தான் டெலிகிராம் கொடுத்தேன்...''

''இருக்கலாம். ஆனா எங்களுக்கு வந்து சேரலை. வேணாப் பாருங்க. இதுல நான் லெட்டர்ஸ், டெலிகிராம் எல்லாம் பின் பண்ணி வெச்சிருக்கோம்...'' அவர் ஒரு நோட்டை தூக்கிப் போட அதில் நான் கொடுத்திருந்த டெலிகிராம் இல்லை.

''எங்க ஆஃபீஸுக்குன்னு ஒரு ரூம் உங்க ஹோட்டல்ல உண்டு இல்லையா?''

''உண்டு சார். ஆனா அதுக்கு நீங்க முன்னாலேயே இன்ஃபார்ம் பண்ணணும். இப்படி திடீர்னு வந்து நின்னா எங்களால எதுவும் பண்ண முடியாது சாரி...''

''வேற ரூம் இருந்தாக் குடுங்க...''

''இப்போ சீஸன் சமயம். ஒரு ரூம் கூட காலியில்லை. வெரி சாரி...''

நல்லவேளையாக, ''எதற்கும் கையோடு வைத்துக் கொள்'' என்று என் மானேஜர் ஒரு கடிதம் கொடுத்திருந்தார். அதைப் படித்து விட்டு சற்று யோசித்தவன், ''லேடீஸோட வந்திருக்கீங்க, ஒண்ணு வேணா செய்யுங்க. ஸ்டாப் ரூம்ல இன்னி நைட் ஸ்டே பண்ணிக்குங்க. கார்த்தால வேற ரூம் பார்த்துக்கங்க... நான் ரூமை க்ளீன் பண்ணி வெக்கச் சொல்றேன். நீங்க காண்டீன்ல போய்ச் சாப்பிட்டு வந்துடுங்க. அப்புறம் சாப்பாடு தீர்ந்துரும்...''

ஏற்கெனவே தீர்ந்து விட்டது. நாங்கள் போனபொழுது பாத்திரங்களை ஒழித்து

மோர்க் குழம்புக்கு அரைக்கும் போது, 4, 5 பற்கள் பூண்டையும் சேர்த்து அரைத்தால், ருசியாகவும், மாறுதலாகவும் இருக்கும்.

- பார்வதி



விலை குறைவாக
இருந்தால் மட்டும்
போதுமா?



"போதாது. தாயாகவும்,
டாக்டராகவும் இருப்பதால்
என் குழந்தைக்கு எது
சரியானது என்பதை
நான் நன்றாக அறிவேன்.
அதனால் தரமான,
தூய்மையான
பொருட்கள்தான் என்
கண்களில் முதலில்
படும். ஆனால் அதே
உன்னதமான தரமும்,
தூய்மையும் குறை
வான விலைக்குக்
கிடைத்தால், எதற்காக
நான் அதிக விலை
கொடுக்கணும்?
கூடவே கூடாது.
அதனால்தான்
என் குழந்தைக்கு
நான் தூய்மையான,
மென்மையான, மற்றும்
ஸ்டெரிலைஸ் செய்த
விப்ரோ பேபி ஸாஃப்ட்
பவுடரை வாங்குகிறேன்.
விசேஷ ப்ளேட்லெட் கிரேடு
கொண்ட இந்த பவுடர் இதர
பவுடர்களைப் போல் சரும
துவாரங்களை அடைக்காது.
சருமத்தின் மேற்புறத்தில்
மட்டும் பரவுவதால்
சருமத்திற்கு எளிதாக
சுவாசம் கிடைக்கும். அதாவது
குழந்தைக்கு முற்றும்
பாதுகாப்பு. இத்தனை
சிறப்புகள் இருந்தும்
விலையும் மிக குறைவு.
இனியும் அதிக விலை
கொடுத்து இதர பவுடர்களை
வாங்குவீர்களா நீங்கள்?"




விப்ரோ
பேபி ஸாஃப்ட்
பவுடர்

குழந்தைக்கு தூய்மையானது. உங்களுக்கு சிக்கனமானது.

everest/92/WL/235-tm

வைத்துக் கொண்டிருந்தவன், எங்களைப் பார்த்ததும் முகச் சுளிப்போடு தண்ணீர் கொண்டு வைத்தான். வெஜிடேரியன், சைவம் என்றெல்லாம் சொல்லியும் மீண்டும் மீண்டும், ''சிக்கன் இருக்கு, மட்டன் இருக்கு...'' என்றான். கடைசியில் எவர் சில்வர் முறத்தில் கொண்டு வந்த சாதத்தை பாதிப் பாதியாக எங்கள் இருவர் இலையிலும் கொட்டினான். அதன் மீது தயிரை மீண்டும் கொட்டி விட்டு திரும்பியே பார்க்காமல் போய் விட்டான்.



உப்புக் கூட போடாமல், விறைத்துக் கிடந்த அந்தச் சாதத்தைச் சாப்பிட்டு விட்டு ரிசப்ஷனுக்குத் திரும்பினோம்.

''ரூமி, சாருக்கு ஸ்டாப் ரூமைத் தொறந்து விடு...''

அந்த ரூமி பெட்டியைத் தூக்கிக் கொண்டு நடந்து நடந்து நடந்து நடந்து ஹோட்டலில் ஒரு மூலையில் இருந்த ஸ்டாப் ரூமைத் திறந்து விட்டான். அதை ஸ்டாப் ரூம் என்பதை விட ஸ்டோர் ரூம் என்பது பொருத்தமாய் இருக்கும். சற்றே பெரியதான அந்த அறை அங்கு போடப்பட்டிருந்த சாமான்களினால் சிறியது போலத் தோன்றியது. ஒரு பக்க சுவற்றை ஒட்டிப் போடப்பட்டிருந்த டேபிள் மீது ஓட்டை உடைசல் நாற்காலிகள் கவிழ்த்துப் போடப்பட்டிருந்தன. இந்தப் பக்க சுவரை ஒட்டி த்ரீ சீட்டர் சோபா, சோபாவுக்கும், ஜன்னலுக்கும் இடையே ஒரு குட்டி மேஜை. அதன் மீது டெலிபோன் (எதற்கு?) நடுவில் ஒரு வட்ட டீப்பாய். அதன் மீது சாம்பல் தட்டப்படாத ஆஷ்-ட்ரே. ரூமி டீப்பாயை நகர்த்தி விட்டு ஒரு மடக்குக் கட்டிலைப் பிரித்து நடுவே போட்டான்.

''எதுனா வேணுமா சார்...?'

''கொஞ்சம் தண்ணி, தலைகாணி, போர்வை...''

''தண்ணி கொண்டாரேன். தலைகாணி போர்வ...?'' என்றபடி வெளியே போனவன், சற்று நேரத்தில் ஒரு ஜக்கில் தண்ணீரும், ஒரு தலைகாணியும், ஒரு படுக்கை விரிப்பைப் போர்வை என்றும் கொண்டு வந்தான். ''ஒண்ணுதான் சார் இருக்கு. ஒரு ராத்திரிதானே... கொஞ்சம் அட்ஜெஸ்ட் பண்ணிக்குங்க. பாத்ரூம் தோ அந்தக் கடசில இருக்கு...'' என்று கதவைச் சாத்திக் கொண்டு போய் விட்டான்.

நாங்கள் என்ன சினிமா ஹீரோ, ஹீரோயின்களா? ஒரே கட்டிலில் இருவரும் படுத்து டூயட் பாட... அது இருக்க

நிலைமையில் சாரு ஒருவளையே தாங்க முடியாமல் அவள் படுத்துக் கொண்டதும் கால் வளைந்து தொட்டில் போல ஆகி விட்டது.

ஒரு பொறுப்புள்ள, லட்சியக் கணவனாக இருந்த ஒரு போர்வை, தலை காணியையும் சாருவுக்குக் கொடுத்து விட்டு நான் சோபாவில் படுத்துக் கொண்டேன். ஜன்னல் வழியாக ஹலோ சொன்ன குளிர்க்காற்று என்னைத் தூங்க விட மாட்டேன் என்று பிடிவாதம் பிடித்தது. எழுந்து



ஜன்னல் கதவைச் சாத்த முயன்ற போதுதான் அதற்குக் கொக்கி இல்லாதது தெரிந்தது. கொஞ்சம் நடந்தால் குளிர் குறையலாம் என்று குறுக்கும், நெடுக்கும் நடந்தேன். சாருவோ, ஒரு ஞானி போல புது இடம், வாடிக் குறைவான படுக்கை, வாடைக் காற்று இவை எதனாலும் பாதிக்கப்படாமல் நிம்மதியாகத் தூங்கினாள்.

காலையில் ரூமைக்(??) காலி செய்து ரிசப்ஷனுக்கு வந்த பொழுது அவன், "நீங்க ரூமுக்கு வாடகை ஒண்ணும் கொடுக்க வேணாம். சாப்பாட்டுக்கு மாத்திரம் பணம் குடுங்க," என்று பில்லை நீட்டினான். அதைப் பார்த்து விட்டுக் கிறுகிறுத்து வந்ததற்கு ஒரு சோடா குடித்தால் தேவலாம் போல இருந்தது. அப்புறம் அதற்குமேல் லவா மூன்று மடங்கு விலை கொடுக்க வேண்டும். வேறு ஓட்டல்களில் ரூம் தேடி அலைந்ததுதான் மிச்சம். ஒரு ஹோட்டலில் கூட ரூம் காலி இல்லை.

கொடைக்கானலில் 'சில்வர் காஸ்கேட்' பின்னணியில் சாருவை அணைத்துக் கொண்டு புகைப்படம் எடுத்துக் கொள்ள ரூம் காலி இல்லை; ஏரியின் விஸ்தீரணத்தை பெடல் போட்டால் அளக்க ரூம் காலி இல்லை; குதிரைச் சவாரி செய்ய ரூம் காலி இல்லை; கோக்கர்ஸ் வாக்கில் கிடைக்கும் கடுகடு இட்லி வடையைச் சுவைக்க ரூம் காலி இல்லை. எனக்குத் தற்கொலை முறையிலிருந்து குதித்து விடலாம் போல எரிச்சல் வந்தது.

"என்ன சார் சேக்குதான் வந்தீங்க, அதுக்குள்ளே கௌம்பிட்டீங்களா" நேற்று வந்த டாக்ஸி டிரைவர்.

"இல்லைப்பா ரூமே கிடைக்கலை. என்ன பண்றதுன்னு தெரியலை..."

"நான்தான் அப்பவே சொன்னேனே, இப்போ சீஸன் சமயம். ரூம் கிடைக்காதுன்னு... ஒண்ணு பண்ணுங்க சார். இந்த கொடைக் கானல்லாம் ஒரு வாரமும்

# உங்கள் பாதுகாப்பான வருங்காலத்துக்குப் பாதை அமையுங்கள்.

முன்னெப்போதையும் விட இப்போது ஸ்ரீராம் சிட்ஸ் மிகவும் அவசியமாகிறது. பணவீக்கம், விலைவாசி உயர்வு, பெருகும் தேவைகள் என்றுள்ள இன்றைய சூழ்நிலையில், அன்றாடம் சமாளிப்பதே சிரமமான காரியம். அப்படியிருக்கும் போது வருங்காலத்தைப் பற்றித் திட்டமிடுவதைப் பற்றிச் சொல்லவே வேண்டாம். 5,00,000 பேருக்கு மேல் ஸ்ரீராமைப் பயன்படுத்தி இன்று மகிழ்ச்சியோடு வாழ்க்கை நடத்துவதோடு வருங்காலப் பாதுகாப்புக்கும் பாதை அமைத்துக் கொண்டிருக்கிறார்கள். நீங்களும் உடனே செயல்படுங்கள். ஸ்ரீராம் சிட்டில் சேர்ந்து உங்கள் வாழ்க்கையைப் பொருள் பொதிந்ததாகவும் பாதுகாப்புள்ளதாகவும் அமையுங்கள்.

ரூ.75,000 வரையில் உள்ள சீட்டுகளை எடுப்பவர்களுக்கு, பொதுத் துறை அல்லது தனியார் துறை அல்லது அரசுப் பணி அல்லது அங்கீகாரம் பெற்றுள்ள நிறுவனங்கள் ஆகியவற்றில் பணிபுரியும் மூன்று பேர் உத்தரவாதம் அளித்தால் போதுமானது.

வேலையிலிருக்கும் பெண்மணி ரூ.15,000 வரையில் உள்ள சீட்டுகளை எடுக்கும்போது அவரின் கணவருடைய உத்தரவாதமே போதும்.

1 2 3 4 5 6

ஸ்ரீராமின் சீட்டு உற்சவம்
விஜயதசமி
10-நாள் விழா!

செப்டம்பர் 27 - அக்டோபர் 6, 1992

## சந்தாதாரர் பரிசுகள்

| | சீட்டின் மதிப்பு ரூ. | சந்தாதாரருக்குக் கிடைக்கும் பரிசு |
|---|---|---|
| 1. | 200 x 40 = 8,000 | – [illegible] |
| 2. | 250 x 40 = 10,000 | – 4 கிராம் வெள்ளிக் காசு |
| 3. | 500 x 30 = 15,000 | – [illegible] |
| 4. | 625 x 40 = 25,000 | – [illegible] |
| 5. | 500 x 60 = 30,000 | – [illegible] |
| 6. | 1,000 x 50 = 50,000<br>1,250 x 60 = 75,000 | – மூடியுடன் கூடிய [illegible] காப்பர் பாட்டம் [illegible] |
| 7. | 1,000 x 100 = 1,00,000<br>2,500 x 40 = 1,00,000 | – மூடியுடன் கூடிய [illegible] காப்பர் பாட்டம் [illegible] |
| 8. | 4,000 x 50 = 2,00,000 | – 25 கிராம் வெள்ளிக்காசு [illegible] |
| 9. | 5,000 x 60 = 3,00,000 | – 2 கிராம் தங்கப் பதக்கம் |
| 10. | 10,000 x 50 = 5,00,000 | – 4 கிராம் தங்கப் பதக்கம் |
| 11. | 20,000 x 50 = 10,00,000 | – 8 கிராம் தங்கப் பதக்கம் |

* [illegible]

SHRIRAM GROUP COMPANIES
MADRAS

**ஸ்ரீராம்** சிட்ஸ் &
இன்வெஸ்ட்மெண்ட்ஸ் பி.லிமிடெட்.

நிர்வாக அலுவலகம் :
"சுப்பிரமணியம் பில்டிங்",
1, கிளப் ஹவுஸ் ரோடு,
சென்னை - 600 002.
போன்: 474451/475536/470400/473932.

ALL INDIA DEPOSIT MOBILISATION DRIVE TILL 31.10.'92

ஸ்ரீராம் சிட்ஸ் - பலருக்கும் பல வகையிலும் பலன்.

மறைந்து காத்திருக்கும் மர்மம் என்ன?

7

8

9

10

11

# ரூ. 20 லட்சம் பரிசளிக்க மோகம்!

முதல் முறையாக

## அறிமுகப்படுத்துவோர் ஒவ்வொருவருக்குமே மறைந்து காத்திருக்கிறது ஒரு பரிசு!

அறிமுகப்படுத்துவோர் ஒவ்வொருவருமே முதல் முறையாக ஆச்சரியப்படப் போகிறீர்கள். அதுதான் மறைந்து காத்திருக்கும் பரிசு.

அறிமுகப்படுத்துவோர் கூப்பன் ஒவ்வொன்றிலுமே மறைந்து காத்திருக்கும் பரிசின் பெயர் வெளித் தெரியாமல் மறைக்கப்பட்டிருக்கும். அந்தப் பரிசைப் பெற நீங்கள் செய்ய வேண்டியது எல்லாம் இதுதான் — ஒரு புதிய சந்தாதாரரை அறிமுகப்படுத்தி, பரிசுக் கூப்பனில் உள்ள வெள்ளிப் பூச்சைத் தேய்த்து அழிக்க வேண்டியதுதான். அதோ! உங்களுடைய பரிசின் பெயர் தெரிந்துவிட்டது.

மறந்து விடாதீர்கள். ஸ்ரீராம் கிளை அலுவலர் முன்னிலையில் மட்டுமே அந்த வெள்ளிப் பூச்சை அழிக்க வேண்டும். எத்தனை புதிய சந்தாதாரர்களை வேண்டுமானாலும் அறிமுகப்படுத்துங்கள். மறைந்து காத்திருக்கும் பரிசைப் பெற்றிடுங்கள்.

**பரிசு!**
**பரிசு!**
ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பாத்திரம் முதல் தங்கப் பதக்கம் வரை!

அறிமுகப்படுத்துவோர் பரிசு சந்தாதாரர்களுக்கு மட்டுமே.

பார்க்கலாம், ஒரு நாள்லேயும் பார்க்கலாம். ஒன் அவர்லேயும் பார்க்கலாம். எல்லாம் ஒண்ணு தான். பேசாம ஒரு டாக்ஸி அரேன்ஜ் பண்ணிக்கிட்டு சுத்திப் பார்த்துட்டு கீள எறங்கிடுங்க. அதான் பெஸ்ட். நம்ம ஃப்ரெண்ட் ஒருத்தர் இருக்காரு.''

அவர் அறிமுகப்படுத்திய டிரைவர் அப்படிச் சொல்ல முடியாமல், சோப்பு விளம்பரத்தில் வருவது போல வெள்ளை வெளேர் வேட்டி, சட்டை அணிந்து, மரியாதைக்குரிய தோற்றத்தில் நடுவயதினராக இருந்தார்.

''டிஃபன் சாப்டீங்களா சார்...?''

''இன்னும் இல்லை, ஃபர்ஸ்ட் ஒரு நல்ல ஹோட்டலுக்குப் போங்க பயங்கர பசி...'' அவர் அழைத்துச் சென்ற ஹோட்டலில் கும்பல் நெரிந்தது. அன்றைய ஸ்பெஷல் பொங்கலாம். அதை நாங்கள் சாப்பிட ஆரம்பித்த பொழுது ''ஊஊஊ...'' என்று ஒரு பெரிய சைரன் ஒலி கேட்டு ஹோட்டலே திடுக்கிட்டது. ஒலித்தது எங்கள் டேபிளுக்கு எதிர் டேபிளில் இருந்த ஒரு ஐந்து வயது பையன். அந்த நிமிடமே எங்கள் தட்டு அவன் டேபிளுக்கு வந்தாக வேண்டும் என்று அவன் அலறிய அலறலுக்குப் பணி(ய)ந்து ரவாப் பொங்கலை அவனிடம் சமர்ப்பித்து விட்டு வெமனே இல்லாத ஒரு வெமன் ரைசை சாப்பிட்டு மந்தனாக இருந்த தண்ணீரைக் கடவுள் பெயரைச் சொல்லி முழுங்கி விட்டு 'கொடைவலத்தை'த் துவங்கினோம்.



பில்லர் ராக்கருகே வரும் பொழுது கார் ஒன்று பழுதாகி இருக்க உதவிக்கு யாருமில்லாமல் ஒரு பெண் தனியே நின்று கையைப் பிசைந்து கொண்டிருந்தாள்.

''ஹை! நம்ம ராகினிஸ்ரீ! டிரைவர் டிரைவர், வண்டியை நிறுத்துங்க. பாவம் நம்ம ராகினிஸ்ரீ தனியா நிக்கறாங்க...'' சாரு பேசிக் கொண்டே கார் கதவைத் திறந்து கொண்டு அந்தப் பெண்ணருகே ஓடினாள்.

''கட் கட் கட்! யாரும்மா அது? குறுக்க வரது? இப்போ ஹீரோவோட காருல்ல வரணும்...?''

காலம் காலமாக சினிமாக் காதல் பிறக்கும்விதம் படமாக்கப்பட்டுக் கொண்டிருக்கிறது. தெரியாமல் நடுவே புகுந்து விட்டோம். மன்னிப்புக் கேட்டுக் கொண்டு பயணத்தைத் தொடர்ந்தோம்.

சாருவுக்குக் கொடைக்கானல் ட்ரிப் ப்ளாப் ஆன வருத்தம் ராகினிஸ்ரீயைப் பார்த்ததில் எங்கேயோ பறந்து போய் விட்டது. ''நேர்ல பார்க்கறதுக்கும், சினிமாவப் பார்க்கறதுக்கும் வித்தியாசமே இல்லையே... கலர்தான் கொஞ்சம் மட்டு... யார் ஹீரோன்னு தெரியலை... ச்சே! இன்னும் கொஞ்சம் லேட்டா வந்திருந்தா ஹீரோவையும் பார்த்திருக்கலாம்...'' பேசிக் கொண்டே வந்தவள், பாதி தூரம் நடக்கும் பொழுது,

''வயித்தைப் பிரட்டறது...'' என்றாள்.

''கிரீம் இறங்குவதால் இருக்கும். இந்த எலுமிச்சம் பழத்தை...'' நான் சொல்லி முடிப்பதற்குள் குபுக்கென்று வண்டிக்குள்ளேயே வாந்தி எடுத்தாள்.

வண்டியை ஓரமாக நிறுத்தி, டவலால் துடைத்துச் சுத்தம் செய்தேன். அதற்குப் பிறகு வண்டியை இரண்டு மூன்று இடங்களில் நிறுத்த வேண்டியிருந்தது. சாருவைப் பின் சீட்டில் படுக்க வைத்து விட்டு நான் முன்சீட்டுக்கு வந்தேன்.

''கடவுளே என்னை ஏன் இப்படிச் சோதனை பண்றே? அவ்வளவு தான் நான் இனிமே பிழைக்க மாட்டேன். கடைசி தடவையா எங்க அம்மா முகத்தைப் பார்ப்பேனா? நான் செத்துப் போயிட்டா என் சாம்பலை கூவத்துல கரைச் சடுங்க...''

## மொடக்கத்தான் கீரை தோசை

மொடக்கத்தான் கீரையைப் பற்றி அனைவருக்கும் தெரியும். நம்மில் பெரும்பாலோர் அதை காரகுழம்பு துவையல் செய்துதான் சாப்பிடுவார்கள். இந்தக் கீரையில் தோசை வார்க்கலாம். எப்படியெனில் எப்போதும் தோசைக்கு அரைப்பதுபோல் அரிசி+உளுந்தும் மாவை அரைக்க வேண்டும். மொடக்கத்தான் கீரையை ஆய்ந்து, தண்ணீரில் அலசி, தனியாக அரைக்க வேண்டும். இது கொழ கொழவென்று இருக்கும். இதைத் தோசைமாவில் கலந்து உப்புப் போட்டு கரைத்து வைத்து விட வேண்டும். காலையில் வித்தியாசமான, பச்சை நிற நெய்யில் வார்த்த தோசை ரெடி. தோசை சுப்பாக இருக்காது.

- கலைச்செல்வி.










# சக்தி டிரேடிங் கம்பெனி

6. மாமரத்துப்பாளையம், ஈரோடு - 638 004.
போன் : 042002-460, 461

[illegible]

■ மஞ்சள் தூள் ■ மிளகாய் தூள் ■ மல்லித்தூள் ■ சுக்கு மல்லி காபி ■ மிளகு தூள் ■ சாம்பார் பொடி ■ ரசப்பொடி ■ கறி மசாலபொடி ■ இட்லிப்பொடி ■ பருப்புப்பொடி ■ பூண்டுப் பொடி ■ புளியோதரை பொடி ■ பிரியாணி மசாலா ■ சிக்கன் மசாலா ■ கரம் மசாலா ■ சில்லி சிக்கன் ■ மீன் மசாலா ■ புளிக்குழம்புப் பொடி ■ வற்றல் ■ வடாகம் மற்றும் அப்பள வகைகள்

மற்றும் விற்பனை நிலையங்கள் :
ஈரோடு : • 16, சொக்காளம்மன் கோயில் தெரு,
ஈரோடு - 638 001. போன் : 71310
கோவை : • 826, ரங்கே கவுடர் வீதி கோயம்புத்தூர் - 641 001.



இருமுறை
தமிழக அரசின்
விருது பெற்ற
நிறுவனம்

டீலர்களின் விசாரணைகள் வரவேற்கப்படுகின்றன.

SASI / 142 / 92



''சார் அம்மாக்கு ரொம்ப முடியலை போல. மதுரைல நல்ல நர்ஸிங்ஹோமுக்கு வண்டியை விடறேன்...''

சாருவுக்கு ஜலதோஷம் பிடித்தால் கூட இதே டயலாக்குகளைத்தான் பேசுவாள் என்பது அந்த டிரைவருக்கு எப்படித் தெரியும்?

கார் ஒரு புதிய கட்டிடத்தின் முன் வந்து நின்றது.

''நீங்க அம்மாவை ஜாக்ரதையா கூட்டிட்டுப் போங்க. நான் லக்கேஜை கொண்டாரேன்...'' அந்த டி ரை வ ர் பணத்தை வாங்கிக் கொண்டு உடனே போய் விடவில்லை. ''மனசை திடமா வெச்சுங்கங்க சார், வந்த எடத்துல எதுனா ஆச்சுன்னா கஷ்டந்தான். ஆனா எல்லாம் நம்மளைக் கேட்டுக்கிட்டா நடக்கறது? தைரியமா இருங்க, பாடிய, ஊருக்குக் கொண்டு போகணும்னா இங்கே போன் பண்ணுங்க...'' என்று ஆறுதல் கூறி ஒரு விசிட்டிங் கார்டை கொடுத்து விட்டுப் போனார்.

அவர் ஈர மனது கண்டு மனம் உருகியது. ஆனால் என்னால்தான் துரதிர்ஷ்டவசமாக அவருக்கு உதவ முடியவில்லை.

சாருவைப் பரிசோதித்து விவரங்களைக் கேட்ட டாக்டர், ''நீங்கள்ளாம் படிச்சவங்க. நீங்களே இப்படி பண்ணலாமா?'' என்றார்.

''என்ன டாக்டர்?''

''என்ன 'என்ன டாக்டர்'? கையில காசு இருந்தா கம்மா இருக்க முடியாம ஊட்டி, கொடைக்கானல்னு ஏதாவது தண்ணி இல்லா காட்டுக்குப் போக வேண்டியது. அங்க கண்டதைத் தின்னு, கண்ட தண்ணியைக் குடிக்க, ஏதாவது வியாதியை வரவழைச்சுக்க வேண்டியது. அப்புறம் எங்க உயிரை எடுக்க வேண்டியது...'' இரைந்தவர், ''பெட்டர் டு அட்மிட் ஹர் ஹியர். நாளைக்கு எல்லா டெஸ்டும் எடுத்துப் பார்த்துடலாம்...'' என்று ஆணையிட்டு விட்டார். அங்கே தங்க எனக்கு அனுமதி மறுக்கப்பட்டதால் பக்கத்தில் ஒரு ஹோட்டலில் தங்கினேன்.

மறுநாள் காலை என்னைப் பார்த்தவுடன் டாக்டர், ''அப்பாடா! வந்தீங்களா! மொதல்லே ஒங்க வொய்ஃபை டிஸ்சார்ஜ் பண்ணிக் கூட்டிட்டுப் போங்க, மைதிலி பில் ரெடி பண்ணு...'' என்றார்.

''இன்னிக்கு எல்லா டெஸ்டும் பண்றதா சொன்னீங்களே டாக்டர்.''

''டெஸ்டும் வேண்டாம், மாட்சும் வேண்டாம், ஷி ஈஸ் பர்ஃபெக்ட்லி ஆல் ரைட். தயவு செஞ்சு சீக்கிரம் கூட்டிட்டுப் போயிடுங்க...'' என்று கைகூப்பினார்.

''ஏன் டாக்டர் என்ன ஆச்சு...?''

''என்ன ஆச்சு? என்னோட வாங்க...''

**டா**க்டர் விடுவிடுவென்று நடக்க அவர் பின்னாலேயே ஓடினேன். ''பாருங்க சார் ஒங்க வொய்ஃப் செய்திருப்பதை'' என்று அவர் சுட்டிக்காட்டிய இடத்தில் ஒரு பெண்மணியின் காலுக்குப் பெரிய பேண்டேஜ் போடப்பட்டு தூக்கிக் கட்டப்பட்டிருந்தது. என்னைக் கண்டதும் அவள், ''நீ! அந்தம்மாவோட புருஷன்னு சொல்லிக்கிட்டு வந்து நிக்கறியே வெக்கமா இல்லை? இப்போ என் கால் ஒடிஞ்சு போச்சு. எ ன் ன ா ல ரெண்டு மாசம் வேலைக்கு வர முடியாது. நீயா சம்பளம் கொடுப்பே...'' என்று என்னவோ திட்ட ஆரம்பித்தாள். நான் பு ரி ய ா ம ல் முழிப்பதைப் ப ா ர் த் து டாக்டர், ''சில பேஷண்ட்ஸ் வயலண்டா பிஹேவ் பண்ணுவாங்க. ஏன் சில பேர் ஊசியை, செலைன் வாட்டர் பாட்டிலை யெல்லாம் உடைத்திருக்கிறார்கள். ஐ அக்ரீ, பட் யுவர் வொய்ஃப் ஈஸ் டூ மச்! நேத்து செலைன் ஏத்த வந்த இந்த நர்ஸை உங்க வொய்ஃப் தள்ளினதுல இவங்களுக்குக் கால் எலும்பே உடைஞ்சு போயிடுத்து. நீங்களே சொல்லுங்க இவங்களுக்கு ரெண்டு மாதச் சம்பளம் உங்களாலே கொடுக்க முடியுமா...?''

சாருவுக்கு ஊசி போட வேண்டுமென்றாலே க்ளோரோஃபார்ம் கொடுப்பது பழக்கம் என்பதைச் சொல்லாமல் விட்டதற்குத் தண்டனையாக அந்த நர்ஸுக்கு ஒரு மாதச் சம்பளம், சாரு உடைத்த செலைன் வாட்டருக்கு நஷ்டஈடு எல்லாவற்றையும் கொடுத்து விட்டு பஸ் ஸ்டாண்டுக்கு வந்தோம்.

### தோசைக்கேற்ற காரச்சட்னி

காய்ந்த மிளகாய் 7, பூண்டு 10 பல்லு, 1 வெங்காயம், சிறிதளவு புளி, உப்பு சேர்த்து அரைக்க வேண்டும். இந்த சட்னியுடன் நல்லெண்ணெய் ஊற்றி கலக்கி, கறிவேப்பிலை, கடுகு, தாளிக்க வேண்டும். தோசையை நெய்யில் வார்த்து, சுடச் சுட, நல்லெண்ணெய் சட்னியுடன் தொட்டுக் கொள்ள சுவையாக இருக்கும்.



ரயிலின் அன் ரிசர்வ்ட் நெரிசலை விட பஸ் மேல், அட்லீஸ்ட் ஒரு சீட்டாவது உத்தரவாதமே என்று நினைத்தேன். எத்தனை பெரிய மதியீனம்! கல்யாண சீஸன். போதாததற்கு அரசாங்கமே அறிவித்திருந்த பந்த் நாளை மறுநாள். அந்த பஸ்ஸில் டிரைவர் ஒருவருக்குத்தான் தனியாக ஒரு முழு சீட் கிடைத்தது. இரண்டு பேர் உட்காரக்கூடிய சீட்டில் நான்காவது ஆசாமியாக உட்கார்ந்து வந்த அந்தப் போஸைத்



தான் இப்போது தினமும் யோகாசனமாக செய்து வருகிறேன். டிரைவர் வேறு எதைப் பற்றியும் கவலைப்படாமல் ஒரு பெரிய அழிவிலிருந்து பிரயாணிகளை உடனடியாகக் காப்பாற்றி ஆக வேண்டும் என்பது போல ஓட்டிக் கொண் டிருந்தார்.

''என்ன சாரு கொடைக்கானல் டிரிப்பெல்லாம் எப்படி?'' - பக்கத்து வீட்டு மாமி, நாங்கள் உள்ளே நுழைந்தவுடன் நுழைந்தாள். தனக்கு நினைவு தெரிந்த நாளாக தினத் தந்தி படிக்கும் மாமிக்கு செய்திகளைச் சுடச்சுட தெரிந்து கொள்ள வேண்டும்.

''கொடைக்கானல்ல நான் ராஜெவி ஸ்ரீயைப் பார்த்தேன்'' - என்ன இருந்தாலும் சாரு கெட்டிக்காரி. எதை யாரிடம், எப்படிச் சொல்ல வேண்டும் என்று தெரியும்.

''மெட்ராஸில் தண்ணி கஷ்டம்னு சொல்றவங்களை ஒரு தடவை கொடைக்கானல் போயிட்டு வரச் சொல்லுங்க. அங்க ஒரு வாய் தண்ணி குடுச்சுட்டு நான் பட்ட பாடு...'' தன் துன்பங்களைக் கூட பெருமையாக மாற்றிக் கொள்ளத் தெரிந்த சாருவுக்குக் கவலையில்லை அடுத்த முறை வெளியூர் போகும் வரை சொல்லிக் கொள்ள விஷயம் இருக்கிறது. நான் இனிமேல்தான் கணக்கெழுத வேண்டும்.

**BPL**

# புதிய பிபிஎல்-அஜீத் 1404 ப்ளாக் & ஒயிட் போர்டபிள் டிவி

இந்தியாவிலேயே அதிக விற்பனை காணும் ஒரே ப்ளாக் அண்டு ஒயிட் டிவி அஜீத் 410. இதனை தயாரிப்பவர்கள் வழங்கும் மற்றுமொரு அரிய படைப்பு பிபிஎல் அஜீத் 1404. சர்வதேச தரத்தோடு கூடிய 36 செ.மீ. டெலிவிஷனின் அற்புதத்தை கண்டு களியுங்கள். மோனிட்டர் ஸ்டைல் தோற்றம், டர்ரட் ட்யூனர் ... போன்றவை விசேஷ அம்சங்கள்.

* SMPS - கலர் டிவியில் கிடைக்கும் முக்கிய அம்சம். - வோல்டேஜ் ஸ்டெபிலைஸர் இதற்கு தேவையில்லாததால், பாதுகாப்போடு உங்களுக்கு கிடைப்பது சேமிப்பும் கூட 110Vக்கு வோல்டேஜ் குறைந்த போது கூட, துல்லியமான படக்காட்சி கிடைக்கும். குறைந்த பட்ச 65Vவிலும் உங்களுக்கு தெளிவான ஆனால் சற்று அளவு குறைந்த படக்காட்சி கிடைக்கும். * 12V DC யில் செயல்புரிகிறது.
* வண்ணமான மெலமைட் கேபினெட்
* விசிஆர் இணைப்பு
* இணையற்ற படக்காட்சி.

SMPS

மேற்கூறிய சிறப்பு அம்சங்களைக் கொண்டு கிடைக்கக் கூடிய பிபிஎல் அஜீத் உங்களோடு இணைந்து வாழ் நாள் முழுவதும் உழைக்கக்கூடியது.



**ஏற்ற தாழ்வான மின்சாரத்திலிருந்து முழுமையான பாதுகாப்பு.**



மனதிற்கினிய ஒலி
**பிபிஎல்-அஜீத்தின்**
ஒளி

KAMERAD NEWS/BPL 186 92 TAM

★ குளிர்க்காற்று சருமத்தில் உள்ள எண்ணெய்ப் பசையை அகற்றி விடும். 'வறவற' என்று உலர்ந்து விடும் சருமம். இதற்கு, குளிப்பதற்கு அரைமணி முன்னர், கொட்டைப்பாக்களவு வெண்ணெய் எடுத்துக் கொண்டு முகத்தில் அழுந்தத் தேய்க்கவும். சமமாகத் தேய்த்த பின் 5 நிமிடங்கள் ஆவி பிடிக்க வேண்டும். சருமத் துளைகள் திறந்து வெண்ணெய் உள்ளே சென்று மிருதுவாக்கும். வேறு எந்தவித Cold cream (கோல்டு க்ரீம்), லோஷன்கள் எதுவுமே தேவையில்லை. 'Winter-rash' வராது.

★ குளிர்காலத்தில் பஸ்ஸிலோ, இரயிலிலோ பிரயாணம் செய்கையில் எதிர்க்காற்று வீசினால் உதடுகள் தான் முதலில் வெடிக்கும். உதட்டைச் சுற்றி சிவப்பாக வெடிக்கும். இதைத் தடுக்க, பிராயணம் செல்லும்போது, கொஞ்சம் தேங்காய் எண்ணெய் எடுத்து, உதடுமேல் சமமாகத் தடவினால் எந்தக் காற்றாலும் ஒன்றும் செய்ய முடியாது.

★ குளிர்காலத்தில் 'கரகர' என்று கொறிக்க வேண்டும் போல் இருக்கும். ''ஃபைவ் ஸ்டார் மிக்ஸர்'' செய்யலாமே.

அவல் - 1 கப்
வேர்க்கடலை (வறுத்தது) - 1 கப்
உப்பு ரஸ்க் - 1 கப்
முந்திரிப்பருப்பு - 1/4 கப்
அரிசி பொரி - 1 கப்

அவலை எண்ணெயில் பொரிக்கவும். வேர்க்கடலை, முந்திரி, அரிசி பொரி சேர்க்கவும்; 'ரஸ்க்'கை ஒன்றிரண்டாய் உடைத்துச் சேர்க்கவும். உப்பு, காரப் பொடி, கறி வேப்பிலை, மஞ்சள் பொடி சேர்த்துச் சாப்பிட சுவையாக இருக்கும். 'ரஸ்க்' கிடைக்காவிட்டால் உப்பு பிஸ்கெட் சேர்த்தும் செய்யலாம்..

★ சேற்றுப் புண்களைப் போக்க ஒரு சுலபமான வழி. ஐந்து கொம்பு மஞ்சளை அம்மியில் மைபோல் அரைத்து, சேற்றுப் புண் மேல் பத்துப் போட வேண்டும். இரவு முழுதும் விட்டு வைத்துக் காலையில் கழுவி விடலாம். மூன்று நாள் தொடர்ந்து செய்தால் சேற்றுப் புண்ணிடமிருந்து பூரண விடுதலை. முதல் நாளிலிருந்தே எரிச்சல் முழுமையாக மறைந்துவிடும். [illegible] செலவில்லாத அனுபவ வைத்தியம்.

- ராஜஸ்ரீ.

# குளிர்காலத்திற்குச் சில யோசனைகள்

# பழம் தரும் பண்டைய சமையல்

## திருமதி பேபி சுப்பிரமணியம் :

திருச்சி நல்லமாங்குடியை சேர்ந்த எங்கள் வீட்டுப் பெரியவர்கள் செய்வது இது - பால்கொழுக்கட்டை. தீபாவளிக்கு என் தாய் கண்டிப்பாக இதைச் செய்வார்கள். இரவில் பலகாரம் (விரத நாட்களில்) செய்யும் போது அப்போ அரைத்தவுடன் வார்க்கும் கல்லுத் தோசைக்கு இந்தப் பால் கொழுக்கட்டை சரியான ஜோடியாகும்.

### பால் கொழுக்கட்டை

**தேவையான பொருட்கள் :**

அரிசி - அரை படி,
வெல்லம் - அரை கிலோ,
தேங்காய்ப் பால் - இரண்டு தேங்காயிலிருந்து பால் எடுக்கவும்,



பால் - ஒரு டம்ளர்,
ஏலக்காய் - எட்டு,
நெய் - இரண்டு ஸ்பூன்,
முந்திரி - 10 கிராம்.

**செய்முறை :**

முதலில் அரிசியைக் களைந்து மாவு அரைத்து கொழுக்கட்டைக்குக் கிளறுவது போல கிளறி வைக்கவும். கிளறும் போது எண்ணெய் ஒரு ஸ்பூன் ஒரு சிட்டிகை உப்பு சேர்க்க வேண்டும். சிறு உருண்டைகளாக சீடை போல உருட்டி ஆவியில் வைத்து வேகவைக்க வேண்டும். தேங்காய்ப் பாலுடன் வெல்லம் சேர்த்து அடுப்பில் வைத்துக் கிளறவும். கெட்டியானதும் வேகவைத்த உருண்டைகளைக் கொஞ்சம் கொஞ்சமாகப் போட்டு நெய்விட்டுக் கிளறவும். முழுவதும் போட்டுக் கொதித்ததும் இறக்கி வைத்து ஏலக்காய்ப் பொடியைத் தூவ வேண்டும். மிகவும் சுவையானது. ஆரோக்கியமானது. தேவையானால் மாவு கிளறும் போது வெல்லம் சிறிது சேர்க்கலாம். நெய்யில் முந்திரிப் பருப்பை வறுத்துப் போடவும்.

## திருமதி லலிதா சுந்தரம் :



என் தாயார், மாமியார் மதுரையைச் சேர்ந்தவர்கள். தீபாவளிக்கு எத்தனை வித இனிப்புக்கள் செய்தாலும் உக்காரை செய்தால்தான் தீபாவளி நிறைவடையும் என்ற எண்ணம் எங்கள் பக்கம் உண்டு.

"அந்தக் காலத்திலே..." என்று பேசுவது அனைவருக்குமே சுகம் (கேட்பவர்களுக்கு எப்படியோ!) ஆனால் அந்தக் காலத்தில் வழிவழியாகப் பெண்கள் சமைத்து வந்த சமையல் என்ன இருந்தாலும் ருசிதான். இப்போதைய பெண்களுக்கு அவை அதிகம் தெரிவதில்லை. இங்கே பண்டிகைச் சமையலுக்கும் சேர்த்துப் பத்துப் பேர் சொல்கிறார்கள். மீதி, வரும் இதழ்களில்...

### உக்காரை



தேவையான பொருட்கள் :
பாசிப் பருப்பு - 150 கிராம்,
கடலைப் பருப்பு - 100 கிராம்,
வெல்லம் - 500 கிராம்,
நெய் - 1 கப்,
முந்திரி பருப்பு - 20 கிராம்,
உப்பு ஒரு சிட்டிகை,
பச்சை கற்பூரம் சிறிது,
தேங்காய் - 1 மூடி,
ஏலக்காய் - 8,
கேசரிப் பவுடர் - சிறிது.

செய்முறை :

பருப்புக்களை ஊறவைத்துக் களைந்து அரைத்து நெய்யில் போட்டுக் கிளறி வைக்கவும். முந்திரிப் பருப்பு, தேங்காயை வறுத்து எடுத்து வைக்கவும். வெல்லத்தை அரைக் கரண்டி நீர் விட்டுப் பாகு வைத்து பருப்பு உதிரியைப் பாகில் சேர்த்து வறுத்த தேங்காய், முந்திரி பருப்பைச் சேர்க்கவும். ஏலப் பொடி, கேசரிப் பவுடரையும், பச்சைக் கற்பூரத்தையும் கலந்து எடுத்து வைக்கவும். வெல்லப் பாகு அதிகம் காய்ந்தால் கட்டியாகி விடும். அடுப்பை நிதானமாக எரிய விட்டு வாசனை வந்தவுடன் இறக்கி வைத்து விட வேண்டும்.



✱ பத்மா

## திருமதி பத்மா வீரராகவன் :

நாங்கள் ஐயங்கார் வகுப்பைச் சேர்ந்தவர்கள். உடனே புளியோதரை நினைவு வந்திருக்குமே! எங்கள் ஊர் உப்பிலியப்பன் கோவில், பெருமாள் கோவில் பிரசாதமான புளியோதரை செய்வது எங்கள் வழக்கம்.

### புளியோதரை :

தேவையான பொருட்கள் :
புளி - 1 நார்த்தங்காய் அளவு,
மிளகாய் வற்றல் - 10,
கொப்பரை - 1 மூடி,
வெல்லம் - 1 கட்டி,
எள் - 1 ஆழாக்கு,
கடலைப் பருப்பு - 1 டேபிள் ஸ்பூன்,.
உளுத்தம் பருப்பு - 1 டேபிள் ஸ்பூன்,
கடுகு - 1 டீஸ்பூன்,
பெருங்காயம், உப்பு - தேவையான அளவு,
மஞ்சள் பொடி - 1 ஸ்பூன்,
நல்லெண்ணெய் - 200 கிராம்,
தனியா - 1 டேபிள் ஸ்பூன்,
மிளகு - 10,
சீரகம் - 1/2 ஸ்பூன்,
வெந்தயம் - 1/2 ஸ்பூன்,
கறிவேப்பிலை - 1 கொத்து.

செய்முறை :

புளியை மண்ணில்லாமல் கெட்டியாகக் கரைத்துக் கொள்ளவும். வாணலியில் எண்ணெய் ஊற்றி கடுகு, பெருங்காயம், மிளகாய் வத்தல் தாளித்துப் புளியைச் சேர்த்து உப்புப் போட்டு நன்கு கொதித்ததும் கொத்ஸு போல் இறக்கவும்.

வேறு உலர்ந்த வாணலியில் மிளகு, சீரகம், வெந்தயம், தனியா இவைகளை எண்ணெய் விடாமல் வறுத்துப் பொடி செய்து வைக்கவும். எள்ளையும் பொரித்துப் பொடி செய்யவும். வாணலியில் ஐம்பது கிராம் எண்ணெயை ஊற்றிக் கடுகு, உளுத்தம் பருப்பு, கடலைப் பருப்பு, பெருங்காயப் பொடி போட்டு புளி கொத்ஸையும் போட்டுத் தயார் செய்து வைத்துள்ள பொடிகளைப் போட்டு ஒரு கொதி வந்தபின் கருள எடுத்து வைத்துக் கொண்டு ஆற வைக்கவும்.

சாதத்தை உதிராக மல்லிகைப் பூப்போல வடித்து, தாம்பாளத்தில் பரத்தி மஞ்சள் பொடி ஒரு ஸ்பூன் போட்டு ஒரு மேசைக்கரண்டி எண்ணெயை விட்டுக் கருவேப்பிலை சேர்த்து சாதக் கரண்டியின் அடியால் கிளறி ஆற வைத்துத் தேவையான புளிக் காய்ச்சலைச் சேர்த்து, எள் பொடி போட்டு, தனியாப் பொடியைத் தூவி மேலும் கொஞ்சம் நல்லெண்ணெய் ஊற்றி ஒன்றோடொன்று ஒட்டாமல் உதிரக் கலந்து ஆறவைக்கவும். நிலக்கடலையை வறுத்துக் கலந்த சாதத்துடன் சேர்க்கவும். தொட்டுக் கொள்ள அப்பளம், வற்றல் பொருத்தமாக இருக்கும். சிறிது பொட்டுக் கடலை வறுத்தும் சேர்க்கலாம்.





## திருமதி சரளா வெங்கடேஸ்வரன் :

கேரளாவிலுள்ள பெருங்குளம் கிராமத்தைச் சேர்ந்தவள் நான். என் பாட்டி எந்த விசேஷமானாலும் இதைச் செய்வது வழக்கம்.

### எருவுளி

தேவையான பொருட்கள் :
வெள்ளைப் பூசணிக்காய் - 1/4 கிலோ,
புளி - நெல்லிக்காய் அளவு,
மஞ்சள் பொடி - 1 ஸ்பூன்,
உப்பு - தேவையான அளவு,
மிளகாய்ப் பொடி - 1/4 ஸ்பூன்,
எண்ணெய் - 2 ஸ்பூன்,
கடுகு - 1 ஸ்பூன்,
மிளகாய் வத்தல் - 2.

மசாலாவுக்கு
தேங்காய் - 1 மூடி,
மிளகாய் வத்தல் - 6,
கடலைப் பருப்பு - 1 ஸ்பூன்,
தனியா - 2 ஸ்பூன்,
வெந்தயம் - 1/4 ஸ்பூன்,
பெருங்காயம் - 1 சிட்டிகை,
புளிக்காத தயிர் - 1 கப்,
கருவேப்பிலை - 1 கொத்து.

செய்முறை :
பூசணிக்காயை அரை அங்குல கனத்தில் நீளமாக நறுக்கவும். புளியை மண் போக கரைத்துக் கொள்ளவும். ஒரு அகன்ற பாத்திரத்தில் புளி ஜலத்துடன் காயையும், மஞ்சள் பொடி, மிளகாய்ப் பொடி, உப்பு, பெருங்காயம் சேர்த்து வேகவிடவும். புளி ஜலம் வற்றி, பூசணிக்காய் வெந்த பிறகு, ஒரு வாணலியில் எண்ணெயை ஊற்றி மசாலா சாமான்களைப் பொன் நிறமாக வறுத்துத் தேங்காய்த் துருவலுடன் சேர்த்து நைஸாக அரைத்துக் கொள்ளவும். கெட்டித் தயிர் அல்லது மோரில் அரைத்த விழுதைக் கலந்து குழம்பில் ஊற்றி நன்றாகப் பொங்கி வரும் போது கீழே இறக்கி விடவும். கடுகு, மிளகாய் வத்தல் தாளித்துக் கறிவேப்பிலை



சேர்க்கவும். குழம்பு கொதிக்கு முன் பொங்கி வரும் போது இறக்கி விட வேண்டும். கொதித்து விட்டால் திரித் திரியாக ஆகி விடும். இது மிகவும் சுவையான குழம்பாகும்.

## திருமதி : ராஜம் பஞ்சாபகேசன் :

நாங்கள் தஞ்சாவூரைச் சேர்ந்தவர்கள். கோகுலாஷ்டமி சமயத்தில் செய்யும் பலகாரங்களுள் இது முக்கியமானது. மிகவும் சுவையானது. தீபாவளிக்கும் பலர் செய்கிறார்கள்.

### கர்ச்சிக்கா

தேவையான பொருட்கள் :
கொப்பரை - 1/4 கிலோ,
பொட்டுக் கடலை - 1/4 கிலோ,
சர்க்கரை - 1/4 கிலோ,
ஏலக்காய் - 2 ரு.
(பூரணம் செய்யத் தேவையானவை)
மேல் மாவுக்கு - 1 கிலோ பச்சரிசி.

செய்முறை :
அரிசியைக் களைந்து உலர்த்தி மாவு அரைத்துக் கொள்ளவும். சம பங்கு நீர் வைத்துப் பொங்கும் நீரைக் கீழே இறக்கி வைத்து மாவைக் கொட்டிக் கிளறிக் கட்டியில்லாமல் பிசையவும். கிளறும் போது ஒரு ஸ்பூன் எண்ணெயும், ஒரு சிட்டிகை உப்பும் சேர்க்கவும். கொழுக்கட்டைக்குச் செய்வது போல கிண்ணங்கள் செய்து பூரணம் வைத்து மூடி. லேசாக சோமாசி போல மடித்து விட்டு எண்ணெயில் போட்டுப் பொரித்தெடுத்தால் குழந்தைகள் மிகவும் விரும்பிச் சாப்பிடுவர்.

பூரணம் : கொப்பரை, பொட்டுக் கடலை இரண்டையும் வறுத்து, ஏலக்காய் சேர்த்துப் பொடி செய்து கொண்டு சர்க்கரையையும் கடைசியாகப் போட்டு மிக்ஸியில் இரண்டு



# இயற்கை அளிக்கும் சிறந்த போஷாக்கு கூடுதல் திறனுடன்



சினிமா நட்சத்திரம் : ரூபிணி

**இயற்கை தந்திடும் மூலிகைகள்**

சீயக்காயின் குணநலன், அதன் தீங்கின்றி சுத்தப்படுத்தும் திறன்...அது இப்பொழுது அற்புத, 14 மூலிகைகளுடன் உங்கள் கேசத்தின் சுத்தத்திற்கும் பொலிவிற்கும் தரும் வரப்பிரசாதம்– ப்ரிங்கால் ஹெர்பல் சீயக்காய் பௌடர்.

**அதி அற்புத செயல்திறன்**

கேசத்தை சுத்தப்படுத்துவதுடன் போஷாக்கும் அளிக்கிறது-மற்றும் பொடுகை அண்ட விடாமல், கூந்தலை சிக்கல் இன்றி நறுமணத்துடன் பளபளக்கச் செய்கிறது. எந்த வகையான பிசுக்கும் தங்கவிடாமல் தெளிவாகக் கரைத்து விடுகிறது. இத்தனை சிறப்பும், சிறிதளவு ப்ரிங்கால் பவுடர் அதன் நுரைவளம் கொண்டு அளிக்கிறது.

**இயற்கை நற்பயன்**

ரசாயன கலவை கொண்ட செயற்கை கூந்தல சுத்திகரிப்பு சாதனங்கள, நாளடைவில் உங்கள் கூந்தலின் இயற்கை வனப்புகளைத்தாக்கி கூந்தலின் அடர்த்தி மற்றும் அழகு மங்கிடச் செய்கிறது...
இயற்கைத்தந்த மூலிகைகள் கூந்தலை பாதுகாத்து மேலும் பொலிவிடச் செய்கிறது.

*கூந்தலுக்கு அதிக பொலிவு*

புதிய

# ப்ரிங்கால்

ஹெர்பல் சீயக்காய் பௌடர்




5 கிராம் சாஷே மற்றும் 40 கிராம் பாக்கெட்டுகளில் கிடைக்கிறது.

கற்று சுற்றவும். பூரணம் தயார்.



## திருமதி ராதா சௌந்தர் :

நாங்கள் தேவகோட்டை செட்டியார் இனத்தைச் சேர்ந்தவர்கள். எங்கள் சமையலில் சிறப்பான, விசேஷமான அயிட்டம் இந்த வாழைப் பூ வடையாகும்.

### வாழைப்பூ வடை

தேவையான பொருட்கள் :
வாழைப் பூ - பெரியதாக 1,
கடலைப் பருப்பு - 1/4 ஆழாக்கு,
துவரம் பருப்பு - 1/4 ஆழாக்கு,
தேங்காய்த் துருவல் - ஒரு கப்,
பெரிய வெங்காயம் - 3,
பச்சை மிளகாய் - 4,
வெள்ளைப் பூண்டு பல்லு - 10,
பட்டை, லவங்கம், சோம்பு, கசகசா தூள் செய்தது - 1 மேஜைக்கரண்டி,
உப்பு - 2 மேஜைக்கரண்டி,
எண்ணெய் - 1/4 கிலோ,
கருவேப்பிலை - ஒரு கொத்து.

செய்முறை :
வாழைப் பூவைப் பிரித்து எடுத்து நடுவிலுள்ள காம்பை நீக்கியபின் குக்கரில் உப்புப் போட்டு வேகவைக்கவும். வெந்ததும் மிக்ஸியில் அல்லது ஆட்டுக் கல்லில் போட்டு அரைத்து வைக்கவும். பூவுடன் மசாலாப் பொடி சேர்த்து அரைக்கவும். ஊறவைத்த பருப்புகள் இரண்டையும் ஒன்று இரண்டாக அரைத்து எடுக்கவும். தண்ணீர் கலக்கவே கூடாது. பிறகு பொடிப் பொடியாக நறுக்கிய வெங்காயம், பச்சை மிளகாய், பூண்டு, தேங்காய்த் துருவல், கருவேப்பிலை எல்லாவற்றையும் சேர்த்து, உப்பையும் போட்டு வடை மாவு போலத் தயார் செய்யவும். அடுப்பில் எண்ணெய் வைத்துக் காய்ந்ததும் சிறிய, கெட்டியான வடைகளாகத் தட்டிப் போடவும். திதானமாகத் தீயை எரிய விட்டு வடையையும் திதானமாகப் புரட்டி விட்டு வேகவிடவும். இந்தக் கலவைக்கு இருபது வடைகள் வரும். பண்டிகைக் கால வடை என்பதோடு அனைவரும் விரும்புவதும் கூட.



## திருமதி ராஜேஸ்வரி குமார் :

என் பிறந்த வீடு, புகுந்த வீடு இரண்டுமே கும்பகோணம்தான். எங்கள் பண்டிகை, விசேஷ தினப் பலகாரங்களில் எனக்கு மிகவும் பிடித்தது தேங்காய்ப் பால் பாயசம். தலை ஆடிக்கு வரும் மாப்பிள்ளைக்கு இந்தப் பாயசத்தை வெள்ளி டம்ளரில் அளிப்பது வழக்கம்.

### தேங்காய்ப் பால் பாயசம்

* கோமதி

தேவையான பொருட்கள் :
தேங்காய் - 2 பெரியதாக,
அரிசி - இரண்டு ஸ்பூன்,
வெல்லம் - 250 கிராம்,
ஏலக்காய் - 8,
பச்சைக் கற்பூரம் - 1 சிட்டிகை.

செய்முறை :
தேங்காயைத் துருவி அரிசியுடன் சேர்த்து மிக்ஸியில் அரைத்துப் பாலைப் பிழியவும். மறுபடியும் இரண்டு டம்ளர் நீர் விட்டு நன்கு அரைத்துப் பாலைப் பிழியவும். வடிகட்டி வைத்துக் கொள்ளவும். அடுப்பில் பால் பாத்திரத்தை வைத்து வெல்லத்தைப் போடவும். வெல்லம் கரைந்து கொதி வரும் சமயம் இறக்கிப் பச்சை கற்பூரம் போடவும். பிரமாதமான தேகத்துக்கு வலுவூட்டும் பாயசம் இது.

## திருமதி கோமதி ராமநாதன் :

என் அன்னையின் பிறந்த ஊரான செறுகளத்தூரில் இந்தப் பாயசம் மிகவும் சிறப்பாகச் செய்வது வழக்கம்.



### பூரி பாயசம் :

தேவையான பொருட்கள் :

கோதுமை மாவு - 3/4 கப்,
பால் - 2 கப்,

# உங்கள் பால்காரர் இரவு 10 மணிக்கு பால் கொண்டு தருவாரா?

என் பால்காரர் தருவார்

உங்கள் மகன் இரவு வெகுநேரம் படிக்க விரும்புகிறான். அவனுக்கு காப்பி வேண்டும். பாட்டியோ இரவு சாப்பாட்டுக்குப் பதிலாக பால் வேண்டும் என்கிறார். அந்த நேரத்தில் எங்கு சென்று பால் வாங்கு வீர்கள்? அமுல் மில்க் பவுடர் கைவசம் வீட்டில் வைத்திருங்கள். கவலையே இருக்காது. பால் தாமதமாக வராது. தீர்ந்து போகாது. திரிந்தும் போகாது.

அமுல் மில்க் பவுடர் கொண்டு தூய்மையான, ஆடை நிறைந்த பாலை நொடியில் தயாரித்து விடலாம். அப்படியே அருந்தலாம். தேனீர், காப்பி, தயிர், மோர், பாயசம், கஸ்டர்ட், கேக், ரஸகுல்லா... எது வேண்டுமோ தயாரிக்கலாம்.

## அமுல் மில்க் பவுடர்

**வீட்டினுள் இயங்கும் ஒரு பால்பண்ணை.**



Marketed by: Gujarat Co-operative Milk Marketing Federation Ltd., Anand 388 001



டால்டா - 1 கப்,
பச்சைக் கற்பூரம் - 1 சிட்டிகை,
ஏலப்பொடி, முந்திரி
தேவைக்கேற்ப,
சர்க்கரை - 1½கப்.

செய்முறை :

கோதுமை மாவைக் கொஞ்சமாக ஜலம் விட்டுப் பிசைந்து இரண்டு தேக் கரண்டி டால்டாவை விட்டுத் தேய்த்துப் பிசைந்து கொள்ளவும். ஊறவேண்டிய அவசியமில்லை. பிசைந்த மாவைப் பூரிகளாக இட்டுப் பொரித்துக் கொள்ளவும். கரகரப்பாக எடுக்கவும். இந்தப் பூரிகளை உரலில் போட்டு ஒன்றிரண்டாக (மிகத் தூளாகாமல்) இடித்துக் கொள்ளவும். டால்டாவில் முந்திரியை வறுக்கவும். ஒரு உருளியில் பாலும் ஜலமுமாக ஒன்றரை கப் வைத்து நன்கு கொதித்தவுடன் பூரித் துண்டங்களைப் போடவும். நன்கு வெந்ததும் சர்க்கரையைப் போட்டுக் கரைந்தவுடன் பாலை விட்டு நன்கு சேர்ந்த பிறகு இறக்கவும். ஏலப் பொடி, குங்குமப்பூ, பச்சைக் கற்பூரம், வறுத்த முந்திரி இவைகளைப் போடவும். சூடாகவோ, குளிர் சாதனப் பெட்டியில் வைத்தோ சாப்பிடலாம். குழந்தைகள் குதூகலத்துடன் சாப்பிடும் பாயசம் இது.

## திருமதி திலகம் மணி :

நாங்கள் . குப்பணாபுரம், (திருநெல்வேலி) என்ற ஊரைச் சேர்ந்தவர்கள். எங்கள் ஊர் விசேஷ தினங்களில் சிறப்பாகச் செய்வது பணியாரம். சுலபமானதும், சுவையானதும் கூட.

### குழிப் பணியாரம்

தேவையான பொருட்கள் :
ரவை - 1 கப்,
சர்க்கரை - 1 கப்,
மைதா - 1 கப்,
ஏலக்காய் - 4.

செய்முறை :

அப்பத்துக்குக் கரைப்பது போல ரவை, மைதா, சர்க்கரை மூன்றையும்



கரைத்து ஏலப் பொடி சேர்த்து நான்கு மணி நேரம் ஊறவிடவும். குழிப் பணியாரத் தட்டில் அரை பாகம் எண்ணெய் ஊற்றிக் காய்ந்ததும் சிறு கரண்டியளவு மாவை முழுக் குழியும் வருமாறு நிரப்பவும். முறுக்குக் கம்பியால் லாவகமாகத் திருப்பி விட்டுப் பொன் வறுவலாக வெந்ததும் எடுத்த விடவும்.

மிக அருமையான திருநெல்வேலிப் பலகாரம் இது.

## ரூபா ஜானகி ராமன் :

எங்கள் புகுந்த ஊரான மாயவரத்தில் செய்யும் பலகாரங்களில் மிக முக்கியமானது. தீரணத்துக்கு உதவக்கூடியது இந்த உருண்டை. குழந்தைகளுக்கு மிகவும் பிடிக்கும்.

### பொரிவிளங்கா உருண்டை :

தேவையான பொருட்கள் :
கோதுமை - 200 கிராம்,
புழுங்கலரிசி - 200 கிராம்,
கடலைப் பருப்பு - 1/4 கிலோ,
பயத்தம் பருப்பு - 1/4 கிலோ,
வெல்லம் - 1 கிலோ,
தேங்காய் - 1 மூடி,
ஏலக்காய் - 2 ரூபாய்,
வேர்க்கடலை - 100 கிராம்,
சுக்கு - ஒரு துண்டு.

செய்முறை :

அரிசியைக் களைந்து உலர்த்திப் பொரித்து வைக்கவும். சுக்கு, ஏலக்காயைத் தட்டி வைத்துக் கொள்ளவும். தேங்காயைச் சிறு துண்டங்களாகக் கீறி நறுக்கி வைத்துக் கொள்ளவும். மற்ற சாமான்களை வறுத்து நைஸாக அரைக்கவும். எல்லாவற்றையும் கலந்து மொத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும். வெல்லத்தை அகன்ற பாத்திரத்தில் ஒரு கரண்டி ஜலம் வைத்து அதில் போட்டு முற்றிய பாகு வைத்து இறக்கி வைத்துக் கொள்ள வேண்டும். ஒரு அகலமான தாம்பாளத்தில் மாவைக் கொஞ்சம் போட்டு, பாகை ஒரு கரண்டியால் ஊற்றிக் கலந்து உருண்டைகளாகப் பிடித்து வைக்கவும்.

தலைக் கார்த்திகைக்கு சீர் வைக்கும் போது வெறும் பொரி மட்டும் கொடுப்பது நல்லதல்ல என்பதால் இந்தப் பொரி விளங்கா உருண்டைகளைக் கொடுப்பது எங்கள் ஊர் வழக்கமாகும்.

தொகுப்பு : பானுமதி
இராமசந்திரன்

குளிர்காலத்தில் குதிகால் பிந்த வெடி வருவது சகஜம். மிதச்சூடு உள்ள வெந்நீரில் உப்பைப் போடுங்கள். வெந்நீரை அகலமான பாத்திரம் அல்லது பிளாஸ்டிக் வாளியில் போட்டு காலை வையுங்கள். "அப்பாடி" என்பீர்கள். வலி நிவாரணி. - ரோஜி



இரவு பகலாக இயற்கை படைக்கிறது கண்ணன் தேவன் டீ...



பறித்த பசுமையுடன் பேக் செய்கிறோம்...

... பாலி பேக்குகளிலே! அதுவும்
கண்ணன் தேவன்
தோட்டத்திலேயே! பறித்த பசுமை
மாறாமல் பறந்து வருகுது
உங்களிடம் 15 நாட்களுக்குள்!




**கண்ணன் தேவன் டீ**

இயற்கை செய்திட்ட கலவை
டாட்டா செய்திட்ட பொதிவு.

டாடா டீ லிமிடெட்

KD 101 92 TAM



பொதுவாக தீபாவளி லேகியம் செய்ய வேண்டுமானால், அதற்கான சாமான்கள் வாங்க நாட்டு மருந்துக் கடையைத் தேடி ஓட வேண்டாம். நம் வீட்டிலுள்ள இஞ்சி, மிளகு, சீரகம் இவற்றைக் கொண்டே இந்த லேகியத்தைத் தயார் செய்யலாம்.

மிளகு 50 கிராம், சீரகம் 50 கிராம், இஞ்சி 25 கிராம் இவற்றைச் சிறிது நேரம் ஊற வைத்து விழுதாக அரைத்துக் கொள்ளவும். கால் கிலோ வெல்லத்தைச் சிறிது தண்ணீர் விட்டுக் கலக்கி, மண் போக வடிகட்டி, பின் அரைத்த விழுதுடன், கலந்து அடுப்பில் வைத்துக் கிளறவும். நன்றாகக் கொதித்து இறுகிக் கெட்டியானவுடன் கால் கப் நெய் விட்டுக் கிளறி, சிறிது ஆறியதும் 3 ஸ்பூன் தேன் விட்டுக் கிளறி, நன்றாக ஆறியதும், உலர்ந்த பாட்டிலில் எடுத்து வைத்துக் கொள்ளவும். தீபாவளிக்குப் பிறகு வயிற்று உப்புசம், மற்றும் அஜீரணம், வயிற்றுவலி இவற்றிற்கு இந்த லேகியம் நல்ல பலன் அளிக்கும். சாதாரண நாட்களிலும் இந்த லேகியம் செய்து வைத்துக் கொண்டு தினம் ஒரு ஸ்பூன் சாப்பிட வயிற்று உபாதைகள் நீங்கும்.

– பாலா இராஜேந்திரன்

# போராடிப் பெற்ற பட்டம் தீபாவளிப் பரிசானது!



பல்கலைக் கழகத்தின் பட்டமளிப்பு விழா நடக்கப்போகும் செப்டம்பர் மாதம் தன் விடா முயற்சியின் பயனால் (முருங்கை மரத்தில் ஏறிய வேதாளத்துடன் போராடிய விக்ரமாதித்தனைப் போல) பட்டம் பெறப் போகிறார் திருமதி கோமதி ராமசுவாமி. பேரன், பேத்திகள் எடுத்த வயதில் தான் படித்துப் பட்டம் பெற்றுள்ளதை தீபாவளிப் பரிசு என்கிறார் -

"என் அப்பாவுக்கு அடிக்கடி மாற்றலாகும் உத்தியோகம். அதனால் இரண்டாவது மொழியாக சமஸ்கிருதத்தை எடுத்துக் கொண்டு படிக்க ஆரம்பித்தேன். என் தந்தைக்கும் சமஸ்கிருதத்தில் மிகுந்த ஈடுபாடு. அதற்கென என் ஐந்தாவது வயதிலேயே வீட்டிலும் டியூஷன் வைத்தார். இன்டர்மீடியட் முடித்தேன். அதுகூட என் தந்தையின் பூரண ஆதரவினால்தான். பெண்களுக்குப் பெண்களேதான் எதிரி. என் தாய் பழமையில் ஊறியவள். பெண்ணுக்குப் படிப்பெதற்கு? அவளைப் படிக்க வைத்தால் அதற்கு மேலே படித்த பையனைத்தேடி (?) அதற்குத் தகுந்த சீர் செய்து.... என்று அடுக்கிக் கொண்டே போனாள். ஏன் ஆண் பெண் இருவரும் சமமாகப் படித்தவர்களாக இருக்கக் கூடாது? 'மேல்' என்ற சொல்லுக்கு எனக்கு இன்று வரை காரணம் புரியவில்லை. என் தந்தை காந்தியவாதி. பெண்களை மதிப்பவர். அதனால் அம்மாவை எதிர்த்துக் கொண்டு என்னை இன்டர்மீடியட் படிக்க வைத்தார். பிறகு திருமணம் நடந்தது. என் கணவர் ஒரு இன்ஜினியர்.

இப்போது இருப்பது போல அஞ்சல் வழிக் கல்வியோ, மாலைக் கல்லூரிகளோ அப்போது இல்லையே! கையில் கிடைத்ததையெல்லாம் படித்து என் படிப்பாசைக்குத் தீனி போடுவேன். என் சம்சாரமும் வளர்ந்தது. ஆறு குழந்தைகள் பிறந்தன. அவர்களை கவனித்துப் பெரியவர்களைக் கவனித்துப் பிள்ளைகளின் படிப்புக்கு உதவி, பெண்களின் திருமணம், பிரசவம் எல்லாம் முடிந்ததும் குடும்ப பாரம் சற்று குறைந்தது.

படிப்பின் மீது ஒரு அலாதி காதல் இருந்து கொண்டே இருந்தது. நீறு பூத்த நெருப்பாக நெஞ்சுக்குள்ளே கனன்று கொண்டிருந்தது. 1960 ஆம் ஆண்டு டில்லி யூனிவர்சிட்டி மூலம் பி.ஏ. படித்தேன். ஆங்கிலத்தின் மீதும் எனக்கு ஆசையுண்டு.. தோசை வார்த்துக் கொண்டே தேர்வுக்குப் படிப்பேன். இவ்வளவு ஆசையுடன் படித்த



சமயம் தேர்வு எழுதும் நாள் வந்தது. என் மாமியார் இறந்து விட்டார். வீடு நிறைய உறவி னர்கள். சமையலுக்கு ஆள் போட் டிருந்தோம். தேர்வை எழுத மிகவும் விரும்பினேன். சில உற வினர்கள் இந்த நிலையில் தேர் வெழுதுவானேன்? அடுத்த வருடம் எழுத லாமே என்று முணுமுணுத்தனர். யார் கண்டார்கள்? அடுத்த வருடம் என்ன சோதனை வருமோ? என்று நினைத்துப் பிடிவாதமாக அந்த மூன்று நாட்களும் தேர்வை எழுதிவிட்டு வந்ததை என் மனம் மறக்கவே இல்லை. பி.ஏ. முடித்தும் என் மனம் நிறைவடையவில்லை.



ஒரு நாள் இன்டர்மீடியட்டில் என்னு டன் படித்த கமலா என்ற சிநேகிதி நவ ராத்திரி சமயம் தாம்பூலம் வாங்க வந்தி ருந்தாள். ''பார்த்தாயா கோமதி, நாம் எப் படியெல்லாம் படித்துச் சாதிக்க நினைத் தோம்? இப்போ குழந்தையும் கரண்டி யும்தான் சாசுவதம் என்றாகிவிட்டது. ம். இனி அடுத்த ஜென்மத்தில்தான் படிப்பு'' என்று அங்கலாய்த்தாள். அடுப்பில் உள்ள பலகாரத்தை என் கை கிண்டியது போல என் படிப்பாசையை அவள் வார்த்தைகள் கிளறிவிட்டன. ''ஏன் கமலா, இப்போது நினைத்தாலும் படிக்கலாமே!'' என்றேன். கிண்டலாகச் சிரித்து விட்டுப் போய் விட்டாள். நானோ சீரியஸாகப் படிக்க நினைத்தேன். என் கணவரிடம் சொன்ன போது, ''சின்னப் பசங்க மத்தியில் நீ இந்த வயசுல போய் எப்படி உட்கார்ந்து படிப் பாய்!'' என்றார்.

படிக்க நினைத்த சமயம் நான் என் மூத்த மருமகளைத்தான் அழைத்து அபிப் பிராயம் கேட்டேன். ''காலை 10 மணியிலி ருந்து 5 மணி வரை வீட்டில் இருக்க மாட் டேன். உன் எண்ணத்தைச் சொல்'' என் றேன். என் ஆர்வத்தைக் கண்ட அவள் எனக்கு முழு ஆதரவு தந்ததோடு குடும் பத்தைத் திறம்பட கவனித்துக் கொண் டாள். மருமகள் படிக்கச் சென்றால் அனு மதிக்கும் மாமியார்களைப் பார்த்துதான் வழக்கம். எனக்கோ தலைகீழ் அனுபவம் என்று சிரிக்கிறார் இவர்.

எம்.ஏ. படித்துக் கொண்டிருந்த சமயம் அமெரிக்காவில் இருந்த பையனுக்கு இங்கு பெண் பார்க்கும் படலமும், குறுகிய விடு முறையில் வந்த அவனுக்குத் திருமணத்தை முடிக்கவும் நினைத்திருந்தோம். காலை யில் எம்.ஏ. தேர்வு, மாலையில் மணப் பெண் தேர்வு. இரண்டும் நல்லபடியா கவே முடிந்தது. பிறகு எம்.ஃபில் ஒரு வரு டம். அதனுடன் என் ஆசை அடங்க வில்லை. பி.எச்.டி. செய்ய நினைத் தேன். ஏனென்றால் ஆராய்ச்சிப் படிப்பில்தான் நம் அசல் வேதத்தை உண்மையான உபநிஷதங்களைப் படிக்க முடியும். கல்லூரிகளில் பிரம்ம சூத்திரம், பாஷ்யம் இவை களை ஸ்திரீகள் படிக்க அப்போது அனுமதி இல்லை. இப்போது, சில விதிகளைத் தளர்த்தியிருக்கிறார்கள்.

வேதங்களைப் பெண்கள் படிக்கக் கூடாது என்பதோடு 'ஓம்' எனும் மந்திரத் தையும் சொல்வது தவறு என்பார்கள்.

ஏன் என்ற கேள்வியை, அதற்கான காரணங்களைத்தான் நானும் கல்லூரியில் கேட்டேன். சரியாகப் பதில் சொல்லத் தெரியவில்லை யாருக்கும். நான் சாயி பாபா அவர்களின் பக்தை. தினமும் 'ஓங்'காரம் சொல்வது வழக்கம். சாதா ரணமாக ஓங்காரம் அடி வயிற்றிலிருந்து சொல்வதால் கர்ப்பப்பை கோளாறு வரும் என்று சொல்லி கூடாது என்றனர். நிச்சயம் அப்படி இல்லை. எங்கே பெண்கள் வேத, உபநிஷதங்களைப் படித்துத் தெரிந்து கொண்டால் (வீட்டிலே யார் சமைப்பது? மற்ற குடும்பப் பொறுப்பைப் பார்த்துக் கொள்வது?) ஆண்களை மதிக்காமல் இருந்து அலட்சியப்படுத்தி அவர்களுக்கு அடங்கி இருக்க மாட்டாமோ என்ற ஆணாதிக்க எண்ணத்தினால்தான் அப்படிச் சொல்லியிருப்பார்கள் என்று நினைக் கிறேன். காரணம் உண்மையான வேதத்தில் எந்த இடத்திலும் ஸ்திரீகள் படிக்கக் கூடாது என்று வரவே இல்லை....!!

காராசேவு தேய்க்க 'ஜாரிணி' இல்லாவிட்டால் மறுகாதீர்கள். காரட் சீவியில் மாவை அழுத்தி விடுங்கள். கரகரப்பாக இருப்பதுடன் 'மிக்ஸியில்' கலக்க எளிதாகவும் இருக்கும்.
- ரோஜி



தீபாவளிக்காக

# காயத்ரி

பிரின்டெட் பட்டுப் புடவைகள்

சில்க் தயாரிப்பில்
70 ஆண்டுகால பாரம்பரியம்

# Gayatri

PURE SILK SAREES

*AVAILABLE AT LEADING STORES*



*Created and Marketed by:*
Pathi Silk House BANGALORE



மேலும் நான் சிறப்புப் பாடமாக எடுத்துப் படித்த அத்வைதத்தில் சட்டை மாற்றிக் கொள்வது போலத்தான் சரீரம் மாறுகிறது. ஆத்மா ஒன்றுதான் அதற்கு ஆண், பெண் என்ற பேதமில்லை என்பதைப் புரிந்து கொண்டேன். பெண்களுக்கு உரிமை கொடுக்காதது ஆண்கள் தான் என்பதையும் புரிந்து கொண்டேன்.

ஆராய்ச்சியில் ஈடுபட்டபோது ஏற்பட்ட அனுபவங்கள் ஏராளம்.

முதலில் ஆராய்ச்சிக்கான சப்ஜெக்டைத் தேர்ந்தெடுத்து புரொபஸரிடம் கை யெழுத்து வாங்கி ரிஜிஸ்டர் செய்து கொண்டேன். பிறகு தேவையான விஷயங்களைச் சேகரிக்க ஆரம்பித்தேன். நமது வேதங்களின் ஓலைச் சுவடிகளின் மைக்ரோ பிலிம்களை பரோடா, பூனா போன்ற இடங்களிலிருந்து வரவழைத்தேன். மகாபாரதம், இராமாயணம் எல்லாம் நமக்குப் பலபேர் பலவிதமாக எழுதியிருந்தாலும், அவரவர் எழுதும்போது சொந்தச் சரக்கையும் சேர்த்திருப்பார்களே! 'சுத்தங்கர்' என்ப

''பாரதத்தைத் தொகுத்துத் தந்தி

அதன் அடிப்படையில்தான் தொலைக்காட்சி மகாபாரதம் காட்டப்பட்டது.

மீந்து போன சர்க்கரைப் பாகை ஃப்ரிஜ்ஜில் வைத்துத் தேய்த்தால் "குழைந்த சர்க்கரைப் பாகு" கிடைக்கும். எப்போது வேண்டுமானாலும் உபயோகித்துக் கொள்ளலாம்.

- ரோஜி



திடீரென்று ஒருநாள் வைஸ் சான்சலரிடமிருந்து என் அறுபது வயது காரணமாக ஆராய்ச்சிப் படிப்புக்கு அனுமதி மறுக்கப்பட்டதாகக் கடிதம் வந்தது. (ஆண்களுக்கு 35 வயதும் பெண்களுக்கு 40 வயதும் வரம்பாம்). 1) அப்ளிகேஷனில் ஒரு இடத்திலும் வயது வரம்பு இல்லை. 2) எனக்கு முன்பே பலர் என் வயதில் ஆராய்ச்சி செய்துள்ளனர். 3) படிப்பை முடித்ததும் எனக்கு வேலை தேவையில்லை. ஆர்வத்தால்தான் படிக்க நினைக்கிறேன் என்று எழுதிப் போட்டேன். திரும்பவும் அனுமதி மறுக்கப்பட்ட அதே கடிதம்தான் வந்தது. ''வெண்ணை திரண்டு வருகையில் தாழி உடைந்தது போல்'' என் மனம் மிகுந்த வேதனையடைந்தது. பலமுறை அலைந்தேன். பயனில்லை.

அப்போதுதான் நரம்பியல் நிபுணர் டாக்டர் ராமமூர்த்தி அவர்களுக்கு சமஸ்கிருதத்தில் உள்ள ஈடுபாட்டையும் அதைப் படிப்பவர்களிடம் உள்ள அபிமானத்தையும் பற்றிக் கேள்விப்பட்டேன். நேரில் சென்று என் குறையை முறையிட்டேன். ''நீங்கள் காரணம் எழுதியுமா அனுமதி மறுத்தார்கள்'' என்று ஆச்சரியப்பட்டார். சயின்ஸ் சப்ஜெக்டாக இருந்தாலும், பரிசோதனை சாலையில் இடமில்லை. வசதியில்லை, உனக்குப் பதில் இளையவர்க்குக் கொடுப்போம் என்றெல்லாம் சொல்லலாம். சமஸ்கிருதத்துக்கு இப்படிச் சொல்லி விட்டார்களே என்று குமுறினேன். ''நீங்கள் போங்கள் நான் கவனித்துக் கொள்கிறேன்'' என்று அனுப்பி வைத்தார். மறுபடியும் வைஸ் சான்சலரிடமிருந்து அழைப்பு வந்தது. டாக்டர் ராமமூர்த்தியைத் தெரியும் என்று சொல்லவில்லையே என்று கேட்டபடி அனுமதிக் கடிதம் அளித்தார். நம் எதிரில் கவனிப்பதாகச் சொல்லி விட்டுத் தலை மறைந்ததும் மறந்துவிடும் நபர்களையே பார்த்துப் பழகிவிட்ட எனக்கு டாக்டர் ராமமூர்த்தி செய்த உதவி காலத்தால் அழியாதது.

ஆராய்ச்சிப் படிப்பை முடித்து தீஸிஸ் எழுதியதும், முன்னுரையில் டாக்டர் ராமமூர்த்தி அவர்களுக்கும், என் குடும்பத்தினருக்கும் நன்றி தெரிவித்து எழுதினேன். ஐந்து வருடம் ஆராய்ச்சி நடத்திக் கொண்டிருந்தபோது என் இன்னொரு மருமகள் சவிதா மிகவும் உதவியாக இருந்தாள். ஓலைச் சுவடியிலிருந்து எடுத்த மைக்ரோ பிலிமை புரொஜெக்டர் மூலம் சுவற்றில் படம் தெரிய வைத்து, நான் குறிப்பெடுத்துக் கொள்ள உதவுவாள். தீஸிஸ் எழுதிக் கொடுத்து நேரடி இன்டர்வியூவும் முடிந்து விட்டது. அவர்கள் ரிப்போர்ட்டும் வந்துவிட்டது. இனி பட்டம் வாங்குவதுதான் பாக்கி! என்கிறார் இத்தனை போராட்டத்துடன் தன் கனவு நனவான சந்தோஷம் முகத்தில் ஜொலிக்க.

''இத்தனை வயதுக்கு மேல் படித்தது பற்றிப் பலரும் பலவிதமாக விமரிசித்திருப்பார்களே'' என்று கேட்கிறோம்.



''நிஜம்தான். எனக்குக் கோபம் வரவில்லை. தெரிந்த லட்சணம் என்றுவிட்டு விட்டேன். இந்த வயதில் எதற்குப் படிப்பு என்றனர். வீட்டைக் கவனிக்காமல் கைப்பையை எடுத்துக் கொண்டு ஜோராகக் கிளம்பி விட்டாள் என்பார்கள். நான் மனம் தளர வில்லை. ஆன்மா சட்டை என்ற சரீரத்தைப் போட்டுக் கொள்ளும் தத்துவம் புரிந்து கொண்டதால் இவைகளைச் சட்டை செய்யவில்லை. உடலுக்குத்தான் வயது. மனதுக்கு அல்ல. உடல்நிலை ஆரோக்கியமாக இருந்தால் நிச்சயம் சாதிக்கலாம். படித்துக் கொண்டே இருந்தால் மூளைக்கு வேலை இருந்து கொண்டே இருக்கும். மூளையை 'அலர்ட்' ஆக வைத்துக் கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் நம்மை மாமியார் அந்த நாளில் படுத்தினார்களே! நாத்தனார் அதைச் சொன்னார்களே' என்று நம்மீதே கழிவிரக்கம் கொண்டு நம்மை வதைத்துக் கொள்ளும்படி ஆகிவிடும். நல்ல படிப்பை, விஷயங்களை மூளைக்குக் கொடுத்துக் கொண்டேயிருந்தால் மூளைக்கு வயதாகாது. இன்னும் கேட்டால் என்னுடைய memory power இப்போதுதான் அதிகமாகி உள்ளது. நல்ல உணவுக் கட்டுப்பாடு, உடற்பயிற்சி யோடு இருந்தால் நன்கு சாதிக்க லாம்.

இந்த படிப்புகளுக்கு இடையே மாலைக்கல்லூரியில் சேர்ந்து மொழியியல் (Linguistics) டிப்ளமோ பெற்றேன். திரும்பி வர இரவு எட்டு மணி கூட ஆகும். சிறு பெண்ணாக இருந் தால் வம்பு பேசுவார்கள். வயது எனக்கு ஒரு பிளஸ் பாயிண்டாகத்தான் இருந்தது. எல்லோருக்கும் ஏதோவொன்றில் ஆர்வம். என் மருமகள் ஆயில் பெயிண்டிங் தஞ்சை ஓவியம் இவற்றில் ஈடுபாட்டுடன் இருக்கிறாள். எனக்கோ படிப்பில் ஆர்வம். வயதைக் காரணம் காட்டி ஆர்வத்தை முடக்கி வைப்பது தவறு. வாய்ப்பினைப் பயன்படுத்தி சாதனை புரிய வேண்டும்'' என்று முடிக்கிறார்.

தற்போது மீனாட்சி கல்லூரியில் மாலைக் கல்லூரியில் வகுப்புகள் நடத்துகிறார். தன் பொழுதைப் பயனுள்ளதாக்கி வைத்திருக்கும் இவரது அனுபவங்கள் இளைய தலைமுறையினருக்கு வழிகாட்டியாக விளங்கும் என்று கூறி வாழ்த்துக் கூற வயதில்லாத காரணத்தால் வணங்கி விடை பெறுகிறோம்.

பேட்டி : ஆதித்யா

---

# இம்மாத இல்லத்தரசி

## சமையல் கூப்பன்

பொருள் : உருண்டை                கடைசித் தேதி : 15.10.92

என்ற தலைப்பில் சமையல் குறிப்பை இத்துடன் அனுப்பியுள்ளேன். இச்சமையல் குறிப்பு இதுவரை எந்தப் பத்திரிகையிலும் எந்தப் புத்தகத்திலும் வெளியானதல்ல என்று உறுதி கூறுகிறேன்.

கையொப்பம்

# உ.பி. ஹேண்ட் லூம்ஸின்
# பிரமிப்பூட்டும் கொண்டாட்டங்கள்



டான்சாய், ஜமாவிர், பெனாரஸி சில்க், ஷிஃபான் மற்றும் பருத்தி பிரிண்டட் சேலைகளின் பற்பல விதமான தனிப்பட்ட வகைகளை வந்து பார்த்துத் தெரிந்தெடுங்கள்.

வசீகரமான பெட் ஷீட்டுகள் படுக்கை விரிப்புகள், துவாலை, தரை விரிப்புகள், ஃபர்னிஷிங் மற்றும் திரைச் சீலைகள்.






## உ.பி. ஹேண்ட்லூம்ஸ்

(ஒரு உ.பி. அரசு நிறுவனம்)

ஹாத்கர்கா பவன், ஜி.டி. ரோடு, கான்பூர்.

உயிரோட்டமுள்ள ஓர் அற்புதப் பாரம்பரியம்

naa/UPH/92

எமது பிரதான ஷோரூம்கள் :

• கான்பூர், பீ.பீ.என் மார்க்கெட் லக்னோ மேஃபேர் பில்டிங் ஹஸரத்கஞ்ச் • வாரணசி, ஹோட்டல் இண்டர்நேஷனல் லாஹுரோபிர் • மீரட், கண்டாகர் • அலஹபாத் சிவில் லேன்ஸ், • ஆக்ரா, சஞ்சய் பிளேஸ் • புதுதில்லி, ஹவுஸ்காஸ், • சண்டிகட் செக்டர் 17 ஸி • ஜெய்பூர், ஜயந்தி பஜார், எம்.ஐ. ரோடு • பம்பாய், ரீகல் சினிமா எதிரில், கொலாப • பெங்களூர், கே.ஜி. ரோடு • சென்னை, அண்ணா சாலை • ஹைதராபாத், ஆபித் ரோடு • கல்கத்தா, லிண்ட்ஸே ஸ்டிரீட்.

மேலும் 200 ஷோரூம்கள் இந்தியாவெங்கிலும் அமைந்திருக்கின்றன.

Murugan

# காப்பர்-பாட்டம் எவர்சில்வர் பாத்திரங்கள்



* இயற்கை சுவை குறையாதது
* சமையலுக்கு எளிதானது
* அடிப்பிடிக்காதது
* உயர்தர சேலம் AISI 304 உருக்கு தகட்டினால் வடிவமைக்கப்பட்டது
* எரிபொருள் சிக்கனம்
* உத்திரவாதம் உடையது

* அனைத்து விற்பனையாளர்களிடமும் கிடைக்கும்
* தோசைக்கல் • அடுக்குசெட்
* சாஸ்பான் • டேக்சா • கோதாவரி குண்டு
* ஆப்பசட்டி • பால்புசட்டி





தயாரிப்பாளர்கள்:

**முருகன் மெட்டல் இண்டஸ்ட்ரீஸ்**

37, செட்டி புதுத் தெரு, கும்பகோணம், போன்: 20848

# பேன் தொல்லையா ?

மல்லிகை நறுமணம் கமழும் எண்ணெயில் தயாரிக்கப்பட்ட கென்ஸ் உபயோகித்து ஈறையும், பேனையும் அறவே ஒழியுங்கள். தலைமுடியை பாதுகாத்துக் கொள்ளுங்கள். எளிதில் உபயோகிக்கலாம். சக்தி வாய்ந்தது.

## கென்ஸ்

சிறந்த பேன் நாசினி. பேன்களை முற்றும் கொல்லும். ஈறுகளை அழிக்கும் மருந்தும் கலந்தது.

கேசத்திற்கு தேவையான அளவு எடுத்து தலையிலும், மயிர்கால்களிலும் நன்கு தடவவும். 20 நிமிடங்கள் கழித்து தலையை நன்கு அலசிக் குளிக்கவும். வாரம் ஒரு முறை உபயோகிப்பது நல்லது.






கென்ஸ் 55, 15 மி.லி. அளவுகளில் கிடைக்கும்.




தஞ்சாவூர் — 613 007

பள்ளி செல்லும் சிறுமிகளுக்கும், பெரியவர்களுக்கும் மிகவும் உகந்தது.

EXELADS/PP 763/91

## "தாங்க்யூ காளி, தாங்க்யூ அம்மா!"

# காளி

## காப்பர்-பாட்டம்

### ஸ்டெயின்லெஸ் ஸ்டீல்
### சமையல் பாத்திரம்.

- குறைந்த நேரம், எரிபொருள் சிக்கனம். அத்துடன் சுவை நிறைந்த சத்தான உணவு.
- உயர்தர கனமான சேலம் ஸ்டெயின்லெஸ் ஸ்டீலினால் ஆனது.
- எலெக்ட்ரோ டெபாஸிஷன் முறையை கையாண்டு உலகத்தரம் வாய்ந்த விஞ்ஞான தொழில்நுட்பத்துடன் தயாரிக்கப்பட்டது.
- சிறந்த தரமான பொருட்களுக்கான இந்திய அரசின் தேசிய விருதினைப் பெற்றது.

● ஸாஸ்பான் ● கடாய் ● தோசைக்கல் ● டோப்ஸ்
● ஸ்கில்லெட்ஸ் ● ஸ்டீம் குக்கர் (பேடட் 200)

ஐ.எஸ்.ஐ. முத்திரையுள்ள காளியின் உயர்தரத்தினால் சட்டுன்னு சமையல் ரெடியாச்சே. மலைபோல வந்த டென்ஷன் மறைந்தே போச்சே.

அம்மா கொடுத்த அட்வைஸ் படுஜோர்!




ஐ.எஸ்.ஐ.
முத்திரையுடன் கூடிய
ஒரே பிராண்ட்

**காளி — ஒரிஜினல் காப்பர்-பாட்டம்**






விற்பனை ஏஜெண்ட் : ஸ்ரீவித்யா ஏஜென்ஸீஸ், கும்பேஸ்வரர் சன்னதி, கும்பகோணம் 612 001. போன்: 20136.
சில்லறை விற்பனை நிலையம்: ஸ்ரீ எஸ்.வி.எம். ஸ்டோர்ஸ் (காளி பிராண்ட்), கும்பேஸ்வரர் சன்னதி, கும்பகோணம் 612 001. போன்: 20136.

Imageads

இம் மங்களச்
சின்னத்திலிருந்து எழும்
நறுமணத்தை
உங்களால் உணர
முடிகிறதா ?





ஐடெக்ஸ்
திவ்யா
குங்கும்




அரவிந்த லாபரடரீஸ், சென்னை 600 033.

# கம்பெனிகள் உங்களுடைய டெபாசிட்டுகளை ஏன் வரவேற்கின்றன?

2



1. கம்பெனிகள், வங்கிகளில் வாங்கும் கடன் தொகைக்கு 24% வரை வட்டி செலுத்துகின்றன. எனவே, 15% வட்டி விகிதத்தில் பொது மக்களிடமிருந்து டெபாசிட் வாங்குவது வங்கிக் கடனை விட மலிவானது.

2. கம்பெனிகள் டெபாசிட் வாங்க தங்கள் சொத்து எதையும் அடமானம் வைக்கத் தேவையில்லை. நல்ல நிதி நிலைமை, நல்ல நிர்வாகம், கனிவான சேவை - இவையே பொது மக்களிடமிருந்து டெபாசிட் வாங்கத் தேவை.

3. டெபாசிட் மார்க்கெட் மூலம் பொது மக்களுடன் நேரிடையான தொடர்பு ஏற்படுகிறது. பின்னர் பங்குகளை வெளியிடும் போது இவ்வுறவு இரு தரப்பாருக்கும் பயன் உள்ளதாக இருக்கும்.

4. கம்பெனிகள் டெபாசிட்டாக வாங்கும் தொகை, பங்குதாரர்களுக்குச் சொந்தமான தொகையில் 1/3 பங்கு கூடக் கிடையாது. எனவே சுமாரான கம்பெனிகளில் கூட பங்குதாரர்கள் தொகையைக் காட்டிலும், டெபாசிட் தொகை பாதுகாப்பானது.

5. கம்பெனிகள் தாங்கள் கொடுக்கும் டிவிடெண்ட் தொகையை செலவாகக் கோர முடியாது. இதனால் 10% டிவிடெண்ட் கொடுப்பதைக் காட்டிலும் 15%-16% வட்டி கொடுப்பது சிக்கனமானது.

6. டெபாசிட் மார்க்கெட் மூலம் இருதரப்பாருக்கும் திருப்தி- டெபாசிட் செய்பவர்களுக்கு கூடுதல் வட்டி கிடைக்கிறது. கம்பெனிகளுக்கு குறைந்த வட்டி விகிதத்தில் கடன் கிடைக்கிறது.

• *நல்ல கம்பெனிகளில் டெபாசிட் செய்ய இன்னமும் தயக்கம் தேவைதானா? நீங்களே தீர்மானியுங்கள்!*

**For unbiased and reliable information on investment matters read "INTEGRATED NEWS" regularly.**



**INTEGRATED ENTERPRISES (INDIA) LTD.**

A National Movement of Investors

*Absolute Integrity to Investors.*

Contact us at any of our branches.

சென்னை: 1. ஸ்ரீ ப்ளாட், 42, மோதிலால் தெரு, தி. நகர், (447830 / 445193) மற்றும் மயிலாப்பூர், அடையார், அண்ணாநகர், பாரிமுனை, நங்கநல்லூர்: கோயம்புத்தூர்: ஸ்ரீநிவாசா டிரேட் சென்டர், 159, (2வது மாடி), டி.பி. ரோடு, ஆர்.எஸ். புரம், (41944) மதுரை: 38, முதல் மாடி, வடக்கு வெளி வீதி திருச்சி: சித்ரா காம்ப்ளெக்ஸ், முதல் மாடி, சிந்தாமணி, (33670) மற்றும் கும்பகோணம், திருநெல்வேலி, காரைக்குடி மற்றும் பம்பாய், பெங்களூர், ஹைதராபாத், டெல்லி, கல்கத்தா, பூனா.

**Special Mobilisation Drive**

எந்த வகை முதலீடாக இருந்தாலும், அதோடு இந்த 'கூப்பனை' இணைத்து, உங்களுக்கான சிறப்பு ஊக்கத் தொகையைப் பெற்றுக் கொள்ளுங்கள்.
மேலும் இந்த விளம்பரத் தொடரின் 4 பகுதிகளையும் சேகரித்து ஒரு சிறப்பு அன்பளிப்பைக் கேட்டு வாங்குங்கள்.

AAA/IE 9293T

## சிறைக் கம்பிகளுக்குப் பின்னால்...

சற்றே விசித்திரமான இந்தத் தலைப் பின் கீழ் சில விபரீதமான பெண்களைப் பற்றி அறியப் போகிறோம். இந்த விபரீதம் இவர்களுக்கு எப்படி நேர்ந்தது? ஏன் இவர்கள் இப்படி ஆனார்கள்? பெண் குற்றவாளிகள் என்ற இக் கும்பல் தினம் தினம் வளர்ந்து கொண்டே வரு வது துணுக்குற வேண்டிய தகவல். கவ லைப்பட வேண்டிய சமாசாரம். பெண் குற்றவாளிகள் என்றவுடன் நம் மனத் திரையில் முதலில் தோன்றுவது ஒரு விலைமாதுதான். ஆனால் விலைமாதர் எவ்வளவு தூரம் குற்றவாளிகள் என்பது விவாதத்திற்குரிய விஷயம். இவர்கள் அல்லாது குற்றவாளிகளான பெண் களைப் பற்றி நாம் அறிந்து கொள்ளப் போகிறோம்.

தேவி மிகவும் இனிமையான பெண். மென் மலராய், காற்றில் மிதக்கும் சுகந்த மாய் எல்லோருக்கும் பிரியமான வளாய் இருந்தவள். இதெல்லாம் அம்மா வுக்கு உடல்நலம் சரியாக இருந்த வரை. அம்மா திடீரென்று சுகவீனம் கண்டாள். சகலகலாவல்லியான அம்மா முடங்கி மூலைக்குப் போனாள். தேவியைக் கவனிக்க முடியாதவள் ஆனாள். அப் போதுதான் அப்பாவுக்கு உத்யோகத்தில் உயர்வு. ஒருபுறம் அப்பா வெகு வேகமாக முன்னேறிய போது அம்மா உருண்டு, உருண்டு கீழே வந்தாள். அப்பா அதை மௌனமாக ஏற்றுக் கொண்டார். வெற்றி யையும் தோல்வியையும் ஒரே சமயத்தில் இரு தோளிலும் ஏற்றி நடந்தார். அதனால் தேவிக்கு அந்தத் தோள்களில் இடமில் லாது போயிற்று.

அன்பு இருந்தாலும் அரவணைப்பு குறைந்து போனது. அம்மாவுக்கு அதிக நேரம் செலவிடப்படுவது தேவிக்குச் சிரம மானது. அவள் பாட்டியிடம் அனுப்பப் பட்டாள், அன்பும் அரவணைப்பும் மீண் டும் கிடைக்கும் என்ற நம்பிக்கையில். அவை என்னவோ மாறாமல் கிடைத்தன. ஆனால், தேவி மாறி விட்டாள். புதிய ஊர், புதிய பள்ளிக்கூடம், புதிய நண்பர்கள், இவற்றில் எது தவறானதோ தேவி கலபமாக தவறிப் போனாள். பழக்கங்கள் மாறின. பணப்புழக்கம் அதிகமானது. காலம் தாழ்ந்து வந்த போது பொய் சொன்னாள். பணம் அதிகம் தேவைப் பட்ட போது திருடினாள். குற்றங்கள் படிப் படியாக உயர்ந்து கொண்டே போயின.... தேவி மூதேவியானாள்.

# பெண்மை மறந்த பெண்கள்

இன்னொரு பெண் மஞ்சு!

அவள் அழகான ஆயுள் கைதி! இருபத்தைந்து வய தான இளம்பெண் ஏன் சிறை யில்?

''மஞ்சு ஏன் இங்கே வந் தாய்?''

''கொலை செய்து விட் டேன்'' - வெகு சாதாரண மாக வெடிகுண்டை வீசி னாள்.

''எப்படி யாரை எதற்கு?''

மஞ்சு சிரித்தாள்.

''என் அழகே எனக்கு எதிரியானது. என் அழகுதான் அவனை என்னிடம் ஈர்த்தது. அதுதான் அவனை தவறு செய்ய வைத்தது. என்னை நன்றாக உபயோகித்து விட்டு பிறகு வேறொருத்தியை

# புதுமைத் திட்டம் நெ.2

பொதுமக்களின் அமோக ஆதரவாலும் பெரும்பாலோர் இத்திட்டத்தில் பங்கு பெற விரும்புவதாலும் மிகக்குறுகிய காலத்திற்கு நீட்டிக்கப்பட்டுள்ளது.

லில்லி உள்பாவாடைகள் தயாரிக்கும் கரூர் PRC சார்மெண்ட்ஸாரின் தொடர்ந்து 5 ஆண்டுகளுக்குப் பயன்தரும்.

# புதுமைத் திட்டம் நெ.2

நீங்கள் செய்ய வேண்டியது இதுதான்.

- ரூ.200/-ஐ DD அல்லது M.O. மூலம் PRC கார்மெண்ட்ஸ் என்ற எங்கள் நிறுவனத்திற்கு செலுத்துங்கள்.
- நீங்கள் செலுத்திய ரூ.200/-ஐ $5^1/_2$ ஆண்டுகளுக்குப் பிறகு திரும்பப் பெற்றுக் கொள்ளும் வகையில் "கரூர் கிளை **'கரூர் வைஸ்யா பாங்க்'**-ன் **"காயத்ரி கேஷ் சர்டிபிகேட்"** (GCC) ஒன்றை உடனடியாக உங்கள் பெயருக்கு நீங்கள் பெற்றுக் கொள்கிறீர்கள். இதனால் நீங்கள் பெறுவது உங்கள் தொகைக்கு முழு பாதுகாப்பு.
- நீங்கள் பணம் செலுத்திய தேதியிலிருந்து **ஓராண்டு கழித்து 5 ஆண்டுகளுக்கு ஒவ்வொரு ஆண்டின் முடிவிலும் ரூ.84/- மதிப்புள்ள இரண்டு லில்லி பாவாடைகள் உங்களுக்கு எங்களது செலவிலேயே** அனுப்பப்படும்.
- 5ம் ஆண்டின் முடிவில் எங்களது பரிசாக ரூ.100/-ம் வழங்கப்படும்.
- இப்பொழுது பாருங்கள் நீங்கள் செலுத்திய ரூ.200/- $5^1/_2$ ஆண்டுகளில் ரூ.720/- மதிப்புடையனவாக உங்களுக்கு முற்றிலும் பயன்தரத் தக்கவையாக மாறியுள்ளதை.

பங்கு கொள்வீர்! பயன்பெறுவீர்

பணம் அனுப்ப வேண்டிய முகவரி

**PRC கார்மெண்ட்ஸ்**

**26, பிரதட்சணம் ரோடு, A-பிளாட்,**

**கரூர்–639 002, ஃபோன் 21946**

இது "பாரதப் பிரதமரின்" படித்த இளைஞர்களுக்கான சுயவேலைவாய்ப்புத் திட்டத்தின் கீழ் 1984 முதல் கரூர் கிளை கனரா வங்கியின் பொருளாதார உதவியுடன் சிறப்பாகச் செயல்பட்டு வரும் ஒரு நிறுவனமாகும்.

குறிப்பு: 1 நீங்கள் பணம் செலுத்தும் பொழுது உங்கள் சரியான முகவரியும் போஸ்டல் கோட் எண்ணையும் தெளிவாகக் குறிப்பிடவும்.

2. ஸ்பெஷல் சைஸ் (ஃப்ரீ சைஸ்) வேண்டுவோர் அதற்குண்டான விலை வித்தியாசத்தை பின்னர் செலுத்திப் பெற்றுக் கொள்ளலாம்.

3. உங்களுக்கு உடனடியாக இரண்டு லில்லி பாவாடைகள் தேவையென்றால் Normal சைஸ்-க்கு ரூ.84/- அல்லது ஸ்பெஷல் சைஸ்-க்கு ரூ.100/- செலுத்திப் பெற்றுக் கொள்ளலாம்.

4. "இரட்டைப் பயன்தரும் திட்டம் "Scheme No:1 தற்பொழுதும் நடைமுறையில் உள்ளது.

தேடிப் போனான். நான் வெகுண்டேன். தன்னிலை மறந்தேன். கோபம், அதிக கோபம் தீப்பற்றியது போல் இருந்தது. நேராக சென்று அவனைச் சீவி விட்டேன்.'' கஷண நேரம் ரௌத்திரம் மஞ்சுவைக் கொலைகாரியாக்கி விட்டது.

''மஞ்சு, ஏன் ஏன் இப்படிக் கோபப் பட்டாய்?''

''எனக்கு எப்போதுமே கோபம் அதிகம். அவன் விஷயத்தில் அது கட்டுக் கடங்காமல் போனது. காதல் தோல்வி என்பது தாங்க முடியாத வேதனை. மூன்று வருடங்கள் என்னைக் காதலிப்பதாக ஏமாற்றிக் கல்யாணம் செய்து கொள்கி றேன் என்று வாக்குறுதி அளித்து விட்டு வேறொருத்தியைக் கல்யாணம் செய்து கொள்வது என்ன நியாயம்?''

''அதற்காகக் கொலை செய்வதா?''

''நீ காதலித்து ஏமாந்திருந்தால் என் கோபம் புரியும்.''

''காதலில் ஏமாந்த எல்லோரும் கத்தி தூக்கினால் உலகமே பிணக்காடுதான்'' இதைச் சொன்னதும் மஞ்சு மௌனமா னாள். ஒரு வினாடி கோபம் பெண்ணைப் பேயாக்கி விட்ட பரிதாபம் நம்மை கலக்குகிறது.

கோமளாவும் இதே வகையான குற்றம் செய்து மஞ்சுவுடன் சிறையில் இருப்பவள் தான்.

''என்ன ஆச்சு கோமளா?'' இதைக் கேட்ட போது கோமளா அழுத்தந் திருத்த மாக ''என் காதலனை வெட்டி விட்டேன்'' என்றாள்.

''கல்யாணமும் ஆன பிறகு என்னைக் காதலிப்பதாக ஏமாற்றிக் கொண்டிருந் தான். எனக்குத் திருமண நாள் நிச்சயிக்கும் சமயத்தில்தான் அவனுடைய முதல் மனைவி, குழந்தைகள் பற்றித் தகவல் தெரிந்தது. விதியை நொந்து கொண்டு அவன் நினைவை ஒதுக்கி விட்டு நல் வாழ்க்கை துவங்கிய சமயத்தில் அவன் மீண்டும் வந்தான். நான் காய்கறி நறுக்கிக் கொண்டிருந்தேன். அவனைப் பார்த்து ரத்தம் கொதித்தது. நறுக்கி விட்டேன்.''

ஒருவேளை கோமளா வேறு வேலை செய்து கொண்டிருந்த போது அவன் வந்தி ருந்தால் அவள் கொல்லாமல் இருந்திருப் பாளோ என்று தோன்றுகிறது. உண்மையி லேயே நம் எண்ணம் சரிதான். மஞ்சு







அளவுக்குக் கோமளாவிடம் கொலை செய்யும் வெறி இல்லை. ஒரு வினாடி ஏற்பட்ட கோபம், ரௌத்திரம் இவர்களைக் கண் மறைத்து குற்றவாளிகளாக்கி விட்டது.

ஆனால் ஜெயம்மா கதை வேறு. கல்யாணம் ஆன நாளிலிருந்து ஜெயம்மா மாமியாரின் கொடுமையில் சிக்கித் தவித்தவள். சொல்ல முடியாத துன்பம் அனுபவித்தவள். வேலை, வேலை, வேலை முடியாத வேலை. சற்று அசந்து தூங்கி விட்டால் சூடான வெந்நீர் முகத்தை ஸ்பரிசிக்கும். அடிபட்டு கன்றிப் போன உடல், அவமானப்பட்டு இறுகிப் போன மனம். தன் மாமியாரின் முன் அடங்கிக் கிடந்த அவள், மாமியார் இறந்த பிறகு தலைவிரித்து ஆடினாள். மருமகள் வந்த பிறகு காளியானாள். தான் கஷ்டப்பட்டது போல் இரு பங்கு துன்பம் தன் மருமகள் பட வேண்டும் என்று வெறி கொண்டாள். நெருப்பு உள்ளுக்குள் புகைந்து புகைந்து எரிந்தது. கனன்றது. புது மருமகள் தோசை வார்க்கும் போது ஒரு தோசை கோணியது. ஜெயம்மா மருமகளின் உள்ளங்கையை தோசைக் கல்லிலிட்டுத் தேய்த்தாள். மருமகளின் வலி பார்த்துச் சிரித்தாள். வாக்குறுதி கொடுத்தபடி சம்பந்தி மோதிரம் போடாத போது மருமகளின் விரலை அரிவாள் மணையிலிட்டு நறுக்கினாள். காதுகளால் கேட்டாலே வலிக்குமளவு கொடுமைகள் சித்திரவதைகள். ஜெயம்மா பெண்மை இழந்து பேய்த்தனமாக நடக்க முற்பட்ட போது மருமகள் சாம்பலானாள். இதுவும் ஒரு கோபத்தில் செய்த தவறுதான் என்றாலும் ஜெயம்மா ஆங்கிலத்தில் Sadist என்று சொல்லப்படும் குரூரத்தன்மை உடையவள். ஒருவித வக்கிரம். ஒரு காலகட்டத்தில் ஒரு தலைமுறை பெண்களிடம் இது போன்ற மனப்பான்மை இருந்தது மறுக்க முடியாத உண்மை. cirme motivation குடும்பப் பெண்கள்' என்று முத்திரை குத்திய மாமியார்களைக் கொண்டிருந்தது ஒரு பரிதாபமான நிலை.

ரூபி அவள் கணவனுடனும் குழந்தைகளுடனும் இனிய இல்லறம் நடத்தி வந்தாள். அதிக ஆசை ரூபியின் கணவனைக் கெடுத்தது. சகவாசம் சரியில்லை. ரூபியின் வார்த்தைகளுக்கு மதிப்பில்லை. தினமும் குருக்ஷேத்திரம். எதிர்க்க சக்தியற்று அவள் திருட்டுத்தனங்களுக்கு அவள் துணை போனாள். கன்னம் வைத்து கொள்ளை அடித்துக் குடும்பம் நடத்தினார்கள். ஒரு முறை கொள்ளையடிக்கும் போது குறுக்கே வந்த பெண்மணியைக் கொலை செய்து விட்டார்கள். மற்றவர்கள் மறைந்து விட ரூபி மாட்டிக் கொண்டு சிறைக்கு வந்தாள். இந்தப் பரிதாபத்திற்குப் பரிகாரம்தான் இல்லை. பத்து வருடங்களுக்கு மேலாக ரூபி சிறையில் இருக்கிறாள். இவள் வருங்காலம்?

மேலோட்டமாக பார்க்கும் போது இவர்கள் எல்லோரும் குற்றவாளிகளே. சற்று நிதானித்துப் பார்த்தோமானால் பெண்கள் குற்றவாளிகளாக மாறுவதற்கு மிகச் சில காரணங்களே உள்ளன. பிறக்கும் போதே ஒருசிலர் குற்றவாளிகளாக பிறக்கின்றார்கள். ஒரு குடும்பமே குற்றவாளிகளால் ஆனதாக இருக்கும் பட்சத்தில் அதில் பிறந்த ஒரு பெண் குழந்தை குற்றவாளியாக இருப்பதில் ஆச்சரியம் ஏதும் இல்லை. ஒருசில வறண்ட மாவட்டங்களில் சில கிராமங்களில் கொள்ளை அடிப்பது தொழிலாகக் கொண்ட சமூகங்களே உள்ளன. இம்மாதிரி கிராமங்களிலிருந்து கும்பல் கும்பலாக நகரத்திற்கு வந்து, வீட்டு வேலைக்காரியாக சேர்ந்து படிப்படியாக வீட்டுக்காரர்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமாகி வீட்டையே கொள்ளையடித்துக் கொண்டு போவது மிகப் பிரபலம். பத்து அல்லது பன்னிரண்டு வயதான பெண் குழந்தைகள் நாலு பேருடன் பஸ்ஸில் ஏறி கண்ணிமைக்கும் நேரத்திற்குள் பர்ஸைத் திருடி பல கைகள் மாற்றிச்

தீபாவளிக்கு அல்வா (கோதுமை) நிச்சயம் இடம்பெறும். உங்கள் வீட்டில் பாலைப் பிழிந்த பிறகு ரப்பர் போன்ற பகுதியை எறியாதீர்கள். ஆவியில் வையுங்கள். கடலை மாவு, காரப் பொடி, வெங்காயம் (நறுக்கியது) உப்புப் போட்டுப் பிசிறி பகோடா மாதிரி எண்ணெயில் பொரியுங்கள். பிரமாதமான 'சீஸ்' பகோடா கரகரவென்று இருக்கும்.

- ரோஜி





## தீபாவளித் திருநாளின் முக்கியத்துவமும், உங்களுக்கு ஒரு வேண்டுகோளும்

வரும் தீபாவளித் திருநாளை வெகு விமரிசையாக கொண்டாட, இப் பத்திரிகை/இச் செய்தித்தாள் படிக்கும் அன்பு உள்ளங்களுக்கு சிவானந்த ஆசிரமக் குழந்தைகளும், முதியோர்களும் தங்களின் வாழ்த்துக்களை மனமுவந்து தெரிவிக்கிறார்கள். பண்டிகை நாட்களில் நிதி உள்ளவர்கள், தத்தம் நிலைமையினை அனுசரித்து விழாக்களை கொண்டாடுகிறார்கள். இந்தத் திருநாளில் பல்லாயிரக்கணக்கான இளம் நெஞ்சங்கள், ஆதரவற்றோர், பார்வையிழந்தோர், மனவளர்ச்சி குன்றிய குழந்தைகள், சிறைக் கைதிகள், முதியோர், வசதியில்லாதார், உடல் ஊனமுற்றோர் பண்டிகையை பொருள் இல்லாமல் கொண்டாட இயலாதவராக இருக்கிறார்கள். இப்படிப்பட்டவர்களுக்கு தாங்கள் மனமுவந்து பொருளாகவோ, நிதியாகவோ, துணியாகவோ, பட்டாசு களாகவோ கொடுத்து உதவி செய்து ஆத்ம திருப்தி அடையலாம். எந்த ஒரு பண்டிகையிலும் நம்முடைய பொருளில் சிறிதேனும் பிறருக்கு ஈந்தால், அந்தப் பண்டிகையின் மகிழ்ச்சியினையும் பிறருக்கு உதவினோம் என்ற ஆத்ம திருப்தியும் கிடைக்கப் பெற்று பேரானந்தம் அடையலாம். தாங்கள் அருகிலுள்ள சேவை ஸ்தாபனத்திற்கு சென்று உங்கள் மகிழ்ச்சியினை பகிர்ந்து கொள்ளுங்கள்.

சிவானந்த ஆசிரமத்தில் உள்ள சுமார் 250 ஆதரவற்ற குழந்தைகளும், முதியோர்களும், இத் தீபாவளித் திருநாளை மகிழ்ச்சியுடன் கொண்டாட பொது மக்கள் மனமுவந்து உதவுமாறு வேண்டுகிறோம். இதனைப் படிக்கும் தாங்கள் தங்களுடைய காணிக்கையாக ஒவ்வொருவரும் குறைந்தபட்சம் தலா ஒரு ரூபாய் இவ்வறப்பணிக்கு அர்ப்பணம் செய்தால், இத் திருப்பணி தங்கள் ஆசியுடன் பரிபூர்ணமாக நிறைவேறும் என்பதல்லாமல் இந் நாட்டில் உள்ள அனைத்து ஆதரவற்றோரும் பயன் பெறுவர்.

பொது மக்கள் அளிக்க விரும்பும் நன்கொடை பணம், பொருள் எதுவாக இருந்தாலும், அக் குழந்தைகளின் நலனை முன்னிட்டு ஏற்றுக் கொள்ளப்படும். வருமான வரிவிலக்கும் அளிக்கப்படும். பொது மக்கள் தங்களால் இயன்ற உதவியை பணமாக அல்லது பொருட்களாக,

நிர்வாகி, ''சிவானந்த சரஸ்வதி சேவாஸ்ரமம்''
நெ. 20, கம்பர் தெரு, கிழக்கு தாம்பரம்,
சென்னை - 600 059.
தொலைபேசி எண் : 401078, 402354

என்ற விலாசத்திற்கு அனுப்பி வைக்கும்படி கேட்டுக் கொள்கிறோம்.

செய்து விடும் சாமர்த்தியம் பிறவி யிலேயே உள்ளது.



இதுபோன்ற சூழ்நிலையில் உள்ள ஒரு பெண் கொள்ளை யடிப்பது தவறு என்று நினைப்ப தில்லை. அவளைப் பொறுத்த வரை திருடுவது குடும்பத் தொழில். இதில் வெட்கமோ வேதனையோ குற்ற உணர்வோ கிடையாது. 'என் தாய் தந்தை அவர்களுடைய தாய் தந்தை என்று தலை முறை தலைமுறையாக நடக்கும் தொழில் இது. இதில் தவறு எதுவும் இல்லை என்று நம்மை வாயடைக்கிறாள் ஒரு பெண்.

காடாறு மாதம் நாடாறு மாதம் என் பது போல் ஜெயிலில் மூணு மாதம் வெளியில்



**மைசூர் பாகு கெட்டியாகி விட்டால் "கத்தியல் இனாம்" என்ற போர்டு மாட்டாமல் மிக்ஸியில் போட்டுப் பொடிக்கவும். பூவாகிப் போன மைசூர் பாகுத் தூளோடு, முந்திரிப் பருப்பை வறுத்து (சக்திக்கேற்ற அளவில்) ஏலக்காய்த் தூளோடு மிக்ஸியில் பொடிக்கவும். "திரிசமன் லட்டு" வாயில் கரைந்து உங்கள் திறமைக்குச் சவால் கொடுக்கும்.**

**- ரோஜா**

ஒரு மாதம் என்று நாட்களைக் கடத்துபவள் சரசா. ''ஏன் சரசா இப்படிச் செய்கிறாய்?'' என்று நாம் கேட்டால் சரசா வின் ஒரே பதில் ''எனக்குப் பசி.''

''எனக்கும்தான் பசிக்கிறது. அதற்காக நான் திருடவா போனேன்?''

''என்ன அசட்டுத்தனமாகக் கேட்கி றாய்?'' என்பது போல் பார்த்து விட்டு சரசா தொடர்ந்தாள். ''உன் பசி வேறு என் பசி வேறு. உனக்கு வீட்டுக்கு உள்ளே எல்லாம் இருக்கு. பசித்தால் எடுத்துக் கொள்வாய். எனக்கு என் தாயின் வயிற்றிலிருந்தே பசி. என் நினைவெல்லாம் என் வயிறு ஒன்று தான். உனக்கெல்லாம் மனதில் குரங்கு. எனக்கு வயிற்றில் குரங்கு. பசித்தால் ஆடும். அப்போது நியாய அநியா யம் மறந்து போகும்.''

அவள் வார்த்தைகளில் உண்மை இருந்தாலும், அவ ளுடைய செயல்களை அது நியா யப்படுத்தவில்லை. இதுபோன்ற ஒரு பெண்ணிற்கு உணவும் உடையும் கொடுத்து வேலையும் கொடுத்தால் கண் டிப்பாகத் திருந்துவாள். குற்றப்பிரிவு மற் றும் சிறைச்சாலை அதிகாரிகளின் கூற் றின்படி இம்மாதிரி பெண்கள் மறு வாழ்வை விரும்பி ஏற்கிறார்கள். பல்வேறு மறுவாழ்வு மையங்கள் மற்றும் பெண்கள் சேவா சதன்கள் இதற்காக பாடுபடு கின்றன. பல் வே று கைத்தொழில்கள் கற்றுத் தருகின்றன. பயிற்சி அளித்து வேலை வாய்ப்பும் அளிக்கின்றனர்.

ஓரிரு மையங்கள் சிறைச்சாலை அதி காரிகளிடம் தொடர்பு கொண்டு கைதி களின் விடுதலை தேதிகளை தெரிந்து கொண்டு அவர்களை நேராக தங்கள் மையத்திற்கு அழைத்துச் சென்று விடுகி றார்கள். சூழ்நிலை குற்றவாளிகள் மற்றும் சந்தர்ப்பவசத்தால் குற்றவாளிகள் ஆனவர் கள் இதனால் வெகுவாக திருந்துகிறார்கள் என்பது மகிழ்ச்சிக்குரிய செய்தி. ஆனால் ஒரு சிறையதிகாரி சொல்வது - பத்து பேர் மறுவாழ்வு பெறும் அதே நேரத்தில் இருபது பேர் குற்றவாளிகளாக மாறும் பரிதாபம் இங்கிருக்கிறது. கடந்த நான் கைந்து வருடங்களாக 13 வயதிலிருந்து 20வது வயது வரை குற்றம் செய்பவர்கள் அதிகரித்து வருகின்றனர். குழந்தைகள் நகை திருடல், வீட்டு வேலைக்காரியாக சேர்ந்து திருடல் போன்ற குற்றங்களுக்கு வீட்டு எஜமானிகளும் பொறுப்பாளிகளாகி றார்கள். ஏழ்மையும் அதிக ஆசையும் தவறு செய்யத் தூண்டினால் எஜமானிகளின் அஜாக்கிரதையும் திருட்டைச் சுலபமாக்கு கிறது. காவல் துறையினர் வீட்டுப் பெண் மணிகளுக்கு விடுக்கும் வேண்டுகோள் - தயவுசெய்து உங்கள் அலட்சியத்தாலும் அஜாக்கிரதையாலும் குற்றங்களைப் பெருக விடாதீர்கள்' என்பதுதான்.

சந்தர்ப்பச் சூழ்நிலை, பசி, பஞ்சம் இவை தவிர வலிய குற்றம் செய்யத் துணியும் பெண்களும் உண்டு. இதில் படித்த பெரிய இடத்துப் பெண்களும் அடக்கம். நீபா நகரின் பிரபல பெண்கள்

கல்லூரியில் மிகச் சிறந்த மாணவிகளில் ஒருத்தி. பிரசித்தி பெற்ற ஆங்கில நாவலாசிரியரின் பரம விசிறி. அவர் கதைகளில் வரும் கதா நாயகிகளின் புத்திசாலித்தனம் அவளை வெகுவாகக் கவர்ந்தது. ஒரு ஆணை ஏமாற்றும் ஜாலக்காரி என்று பெயர் பெறுவதில் ஆர்வம் காட்டினாள். சிறிது சிறிதாக ஆரம்பித்த ஏமாற்று வேலை களும் திருட்டுக்களும் ஒரு வங்கியைக் கொள்ளை யடிக்கும் அளவுக்கு வளர்ந்து தீபாவை சிறையில் தள்ளின. இன்று அவள் மறு வாழ்வை எதிர்நோக்கிக் காத்திருக்கிறாள். பணம், படிப்பு, அறிவு எல்லாம் இருந்தும் வேண்டுமென்றே இவ்வாறு ஒரு வாழ்க்கையைத் தேர்ந்தெடுத்த தீபா மற்ற எல்லோரையும் விட பயங்கரமானவள். திருத்தப் பட வேண்டியவள்.

சிறு வயதிலேயே தாய் தந்தையர் சரியாக வழிநடத்தியிருந்தால் தீபா தவறியிருக்க மாட்டாள். வாழ்க்கையைச் சரியான நோக்குடன் அணுக நம் குழந்தைகளுக்கு நாம்தான் சொல்லித் தர வேண்டும். நாம் இதில் தவறும் பட்சத்தில் நம் குழந்தைகளும் தவறுவது சாத்தியமாகிறது. குற்றம் புரிவது ஒரு மனநிலை என்று நாம் தர்க்க ரீதியாக வக்காலத்து வாங்கினாலும் குற்றங்கள் நியாயங்கள் ஆவதில்லை. அந்த ஒரு மனநிலையைத் தவிர்ப்பது நம் கடமை. பெற்றோர்களின் அஜாக்கிரதையால் தேவிகளும், மஞ்சுக்களும், தீபாக்களும் உருவாகின்றனர். இதைத் தவிர்த்து ஒரு நல்ல சமுதாயத்தை உருவாக்க நாம் பாடுபடுவோம்.

– ஜானகி விஸ்வனாத்

நன்றி : கர்நாடகக் காவல் துறை.
(குற்றப் பிரிவு மற்றும் சிறைச்சாலை அதிகாரிகள்)

பர்பி முறுகினால் கவலைப்படாதீர்கள். வறுத்த ரவையை மிக்ஸியில் மாவாக்குங்கள். முறுகிய தேங்காய் பர்பியை மிக்ஸியில் போட்டுச் சிறிதுநேரம் சுற்றவிட்டுப் பின் லட்டு பிடியுங்கள். பிரமாதமான பர்பி லட்டு தயார்!

- ஜோதி



தீபாவளி இதோ வந்து விட்டது.

விழாக்கால வைபவம், பட்டாசு, மத்தாப்பு கொளுத்தி பூரிக்கும் உல்லாசம்.



கூடவே மில்க்மெய்டால் செய்த இனிப்புகள்.

தீபாவளி நன்னாளில் தீபங்கள் ஏற்றி, பட்டாசு கொளுத்தி குதூகலமும் கும்மாளமுமாய் கொண்டாட்டம் போடுவதே என் குடும்பத்தினர் விரும்பி செய்வதாகும். அன்றைக்கு விசேஷமாய், என் குடும்பத்தினர் வெகுவாய் ருசித்து சுவைத்திடும் இனிப்புப் பண்டங்களை மில்க்மெய்டால் தயாரிக்கிறேன். ஆமாம், நிச்சயமாக வேறெந்த சுவையும் மில்க் மெய்டின் நா சிலிர்க்க வைக்கும் சுவைக்கு ஈடு செய்ய முடியாது. எங்களது தீபாவளி கொண்டாட்டங்கள், மில்க்மெய்டினால் செய்த இனிப்பு வகைகள் இல்லாமல் நிறைவு பெறுவதில்லை.

## தேங்காய் லட்டு



சுமார் 20 லட்டுகளுக்கு
சமைக்க ஆகும் நேரம் :
10-15 நிமிடங்கள்

தேவை

முற்றிய தேங்காய் பவுடர்–250 கிராம் (3 ½ – 4 உ. கப்)
மில்க்மெய்ட் -1 டின்

செய்முறை

1. 50 கிராம் தேங்காய் பவுடரை தனியாக எடுத்து வைக்கவும்.
2. மீதியுள்ள தேங்காய் பவுடரை மில்க்மெய்டுடன் சேர்த்து இளஞ்சூட்டில் வாணலியின் ஓரங்களில் பிடிக்காத வரை வேகவிடவும். (சுமார் 5 நிமிடங்களுக்கு).
3. ஆறியபின், கைகளில் நெய் தடவிக்கொண்டு, பின்னர் சிறிய உருண்டைகளாகப் பிடிக்கவும். எடுத்து வைத்த தேங்காய் பவுடரில் இவற்றை உருட்டி எடுத்து பரிமாறவும்.

## கீர்



சுமார் 8 பேருக்கு
சமைக்க ஆகும் நேரம் :
20-25 நிமிடங்கள்

தேவை

அரிசி - 100 கிராம்
உடைத்த பருப்பு/ஏலக்காய்
பால் - 1 லிட்டர்
பவுடர் (விரும்பினால்)
மில்க்மெய்ட் - 1 டின்

செய்முறை

1. அரிசியைக் கழுவி, குக்கரில், பாலில் 15 நிமிடம் வேக விடவும் (அல்லது இளஞ்சூட்டில் குழையும் வரை வேகட்டும்).
2. மில்க்மெய்ட் ஊற்றி மேலும் 5-7 நிமிடங்களுக்கு வேகட்டும். கீர் உங்களுக்கு மிகவும் பிடித்த பதத்தை அடையும் வரை தொடர்ந்து கிளறிவிடவும்.
3. அடுப்பிலிருந்து இறக்கவும்.
4. பருப்பு, ஏலப்பொடி தூவி பரிமாறுங்கள்.

*உல்லாச வைபவம் மில்க்மெய்ட் தரும் பெருமிதம்*




## கேசரி



8 பேருக்கு
சமைக்க ஆகும் நேரம்:
15 நிமிடங்கள்

தேவை

ரவா - 1 கப்
மில்க்மெய்ட் - ½ டின்.
நெய் - 150 கிராம் (¾ கப்)
தண்ணீர் - 2 கப்
கேசரி பவுடர் - ¼ டீஸ்பூன்
முந்திரிப் பருப்பு - 8-10 (விரும்பினால்)
திராட்சை - 20 கிராம் (1½ டேபிள்ஸ்பூன்) விரும்பினால்

செய்முறை

1. வாணலியில் நெய்யை காய்ச்சவும்.
2. முந்திரிப் பருப்பையும், திராட்சையையும் பொன்னிறமாகும் வரை நெய்யில் வறுத்து தனியே எடுத்து வைக்கவும்.
3. நெய்யில் ரவாவை சேர்த்து வறுக்கவும்.
4. இதோடு கேசரி பவுடர் கரைக்கப்பட்ட 2 கப் தண்ணீரை சேர்க்கவும். தொடர்ந்து கிளறிவிடவும்.
5. தண்ணீர் உறிஞ்சப்பட்டவுடன் சூட்டைக் குறைத்து மில்க்மெய்டை சேர்க்கவும். நெய் துளிகள் வாணலியின் ஓரங்களில் படியும் வரை தொடர்ந்து கிளறிவிடவும்.
6. நெய் தடவிய தட்டில் ஊற்றவும். விரும்பினால் முந்திரிப் பருப்பையும் திராட்சையையும் தூவவும்.
7. சதுர வில்லைகளாகப் போடவும்.
8. சூடாகவோ, குளிரவைத்தோ பரிமாறவும்.








ஹிந்து கல்யாணங்களின் போது சப்தபதி எனும் சடங்கு நடத்தப்படுகிறது. கணவனும் மனைவியும் சேர்ந்து ஏழு அடிகளை எடுத்து வைத்து மந்திரம் சொல்லும் சடங்கு அது. கணவன் மனைவியைப் பார்த்து "இனி நீ என் தோழி. நாம் ஒருவரையொருவர் விட்டுப் பிரியக் கூடாது. நீயும் நானும் அன்புடன் வாழ்வோம். இல் வாழ்க்கையை அமைதியாக நடத்துவோம்!" என்று சொல்லுகிறான். ஆனால் தற்கால மணமக்களுக்கு சம்ஸ்கிருதம் தெரியாது. சாஸ்திரிகள் ஏதோ முணு முணுக்கிறார் என்று நினைத்துக் கொண்டு கணவனும் மனைவியும் மௌனமாக அக்னியைச் சுற்றி வந்து விட்டு உட்கார்ந்து கொள்கிறார்கள். பதிவுத் திருமணங்களிலும், சீர்திருத்தக் கல்யாணங்களிலும் இந்த அம்சமே கிடையாது. ஆயினும் கணவன் திருமணத்துக்குப் பின் தன் மனைவியைத் தனக்குச் சமமான, தோழியாக நடத்த வேண்டும் என்கிற கருத்தைப் புரோகிதரானாலும் சரி, வாழ்த்திப் பேச வரும் அரசியல் வாதியானாலும் சரி, வலியுறுத்தவே செய்கிறார்கள்.

தோழமை என்பது பரஸ்பர மரியாதையின் பேரிலேயே எழும்ப முடியும். மரியாதையில்லாமல் மண வாழ்க்கை சிறக்காது. ஆனாதிக்கச் சமூகத்தில் திருமணச் சடங்குகளின் போது கணவனிடம் மனைவியை மரியாதையுடன் நடத்துவதாக உறுதி மொழி பெறப்படுவதில்லை. சட்ட நூல்களிலும் அது போல விதியில்லை. ஆனால் அனுபவஸ்தர்கள் கணவனும் மனைவியும் ஒருவரையொருவர் மதித்து, மரியாதையுடன் நடந்து கொண்டால்தான் சந்தோஷமாக இருக்க முடியுமென்று கண்டுபிடித்திருக்கிறார்கள்.

மரியாதை என்றால் என்ன? மேலதிகாரி வரும் போது எழுந்து நிற்பது, பெரியவர்களைக் கண்டால் வணங்குவது போன்றவற்றுக்கும் மரியாதை என்றுதான் பெயர். மனைவி வந்தால் எழுந்து நிற்க வேண்டுமா என்று சில வக்கிரங்கள் கேலியாகக் கேட்கலாம். கணவன்-மனைவியிடையேயான மரியாதை என்பது பயத்தினாலோ, தாழ்வு மனப்பான்மையினாலோ தோன்றுகிற உணர்வு அல்ல. சந்தோஷமாகக் குடித்தனம் நடத்தி வருகிற தம்பதிகளின் உள்ளார்ந்த உணர்வு தான் மரியாதை. பல்லாண்டுகள் சந்தோஷமாகக் குடித்தனம் நடத்தி வரும் முதிய தம்பதிகளைப் பேட்டி காணுங்கள்.



# மனைவிக்கு



''அவள் என்னைக் கேட்கா மல் ஒரு காரியம் செய்ய மாட் டாள்,''

''நான் இல்லேன்னா அவ ருக்குக் கையும் ஓடாது, காலும் ஓடாது. என்னை விட்டுக் கொடுத்தே பேச மாட்டார், பிறத்தியார் எதிரில் கடிந்து பேச மாட்டார்,''

''அவள் சொன்னால் சரியாகத்தா னிருக்கும்,''

''ராத்திரி எவ்வளவு நேரமானாலும் வீட்டுக்கு வந்து விடுவார்,''

''அவளுடைய காரியமெல்லாமே மிக வும் நறுவிசாக இருக்கும்'' என்பவ போன்ற வார்த்தைகளே நிறைய வந்து விழும். அதுதான் பரஸ்பர மரியாதை. சந் தோஷமான இல்வாழ்க்கையின் ரகசியம்.

மரியாதை என்பதும் புகழ் உணர்வு என்பதும் வெவ்வேறு. இரண்டும் ஒன்றல்ல. ஒரு அழ கான பெண்ணைப் பார்க்கிற போது ஏற்படுவது புகழுணர்வு. அவளிடம் காதல் தோன்றுவதற்கு அதுவே காரணம். குழந்தைக்குத் தன் பெற்றோரிடம் ஏற்படுகிற புகழுணர்வு, அவர்களிடம் மரியாதையையும், அவர் களை முன்னோடிகளாக, வழி காட்டி களாக ஏற்றுக் கொள்ளும் மனப்பான்மை யையும் ஏற்படுத்துகிறது. தொண்டனுக்குத் தலைவரிடம் தோன்றும் புகழுணர்வும் இத்தகையதே.

காதல் வயப்படும் போது தோன்றும் புகழுணர்வு செழித்து வளர்கிறது. எனக்குக் கணவனாக (அல்லது மனைவியாக) எல்லாத் தகுதிகளையும் பெற்றவர் (அல் லது பெற்றவள்) என்ற ''மாய'' உணர்வு அதை வளர்க்க உதவுவதாகவு மிருக்கலாம். அதன் காரணமாகவே அந்தப் புகழுணர்வு நீடிப்ப தில்லை. கலியாணமான பிறகு லட்சியச் சித்திரத் தில் குறைகள் தென் படத் தொடங்குகின் றன. அது வரை காதல் போதையில் மூடியிருந்த கண்கள் திறந்து கொள் கின்றன. ஆளுமை வேறு பாடுகள், அணுகுமுறை வேறுபாடுகள், செயல் முறை வேறுபாடுகள் என ஒவ்வொன்றாகத் தலை காட்டுகின்றன.

கணவனும் மனை வியும் ஒருவரையொரு வர் திருத்தியமைத்துத் தத்தம் லட்சிய சித்திர நிலைக்கு மீட்டு வர முயற்சி செய்கிறார்கள். அப்போது உரசல்கள் தோன்றும். அதை விட வேறுபட இணங்குவது (agree to disagree) என்ற அணுகுமுறையே சிறந் தது. ஒருவர் மற்றவ




# மரியாதை



ருடைய ஆளுமையையோ, தனித் தன்மையையோ மாற்ற முயலாமல் இருப்பதை இருக்கிற படியே விட்டு, விட்டுக் கொடுத்து, சமரசம் செய்து கொண்டால் மண வாழ்க்கை வளமாயும் இனிமையாகவும் இருக்கும் என்பது நிரூபிக்கப் பட்டுள்ளது. அப்போது ஒருவருக்கொருவரிடம் ''மரியாதை'' தோன்றி வளரும். சமமானவர்களிடையே நிலவும் உணர்வு தான் மரியாதை. இருப்பதாக நிரூபிக்கப் பட்ட, உண்மையான, குணாதிசயங்களின் பேரில்தான் மரியாதை ஏற்படும்.

விஜிக்கு சினிமா பார்ப்பது மிகவும் பிடிக்கும். அவளுடைய கணவனான அம்பிக்கோ புஸ்தகம் படிப்பதும் கிரிக்கெட் பார்ப்பதும் பிடிக்கும். அவரவர் விருப்பம் அவரவருக்கு என்று சொல்லி விட்டுப் பேசாமலிருக்கலாம். ஆனால் அம்பி ''இதென்ன மட்டமான ரசனை? இந்தச் சினிமாவை மனுஷன் பார்ப்பானா?'' என்று சிடுசிடுக்கிறார். ''இதென்ன எழவு? நாள் பூராவும் லொட்டு லொட்டுனு தட்டிண்டிருக்காங்க, கிரிக்கெட்டெல்லாம் ஒரு விளையாட்டா?'' என்று விஜி கடுப்படிக்கிறாள். இது ஒருவரையொருவர் மட்டம் தட்டிக் கொள்வதாகும். மரியாதை இல்லை, வெறுப்பு தோன்றி விட்டது என்பதைக் காட்டுகிற முக்கியமான அறிகுறியாகவும், ஆயுதமாகவும் இவ்வாறு மட்டம் தட்டுவது அமைகிறது. வெறுப்பு என்பது மிக மோசமான உணர்வு. எதிராளியிடம் மதிக்கக் கூடிய பண்பு எதுவுமில்லை என்கிற போது தான் வெறுப்பு ஏற்படும். பைசா பிரயோசனமில்லாத நபர் என்கிற எண்ணம் ஏற்படும் போது வெறுப்பு வரும்.

கணவனோ, மனைவியோ ஒருவரையொருவர் பல விதங்களில் தாக்கிக் கொள்ள முடியும். ''உன் நன்மைக்குத்தான் சொல்லுகிறேன்'' என்று ஆரம்பிக்கிற பல சம்பாஷணைகளில் விரோதமும், கோபமும் கலக்கிற போது ''நன்மை'' எதுவும் ஏற்படாது. ''என்னங்க, இப்படி மசமசன்னு உட்கார்ந்திருக்காமல், கொஞ்சம் சுறுசுறுப்பாக ஓடியாடி, ஆபீஸிலே நல்ல பேர் வாங்கிப் பதவி உயர்வுக்கு வழி பண்ணுங்க'' என்று மனைவி தொண தொணக்கிறாள். ''என்னங்க, பெரிய வாத்தியார் வேலை, இதை விட்டுட்டு ஏதாவது கம்பெனியிலே சேர்ந்து முன்னுக்கு வரக் கூடாதா?'' என்று இன்னொரு மனைவி சிடுசிடுக்கிறாள். உள்ளதே போதும், என்ற ஆரோக்கியமான மன நிலையோ, ஆசிரியப் பணி உன்னதமானது என்ற தியாக உணர்வோ உள்ள கணவன் மன சஞ்சலமடைந்து தான் ஒரு உருப்படாத பேர் வழியோ என்று எண்ணத் தொடங்கி மனம் குன்றிப் போகிறான்.

நான்கு பேர் சேர்ந்து பேசிக் கொண்டிருக்கும் போது மனைவி ஏதாவது சொல்ல முனைந்தால் ''சித்த சும்மா இரேன்!'' என்று வெட்டி விடுகிற கணவர்களும் உண்டு. அடுத்த வீட்டுக் காரியுடன் பேசிக் கொண்டிருக்கிற மனைவியைப் பார்த்து, ''ஏனிப்படி நேரத்தை வீணாக்கிக் கொண்டிருக்கிறாய்? உருப்படியாக ஏதாவது காரியம் செய்யக் கூடாதா?'' என்று கேட்கிற கணவர்களும் உண்டு.

## உங்கள் கண்மணியின் கனவை
## கனவாகவே இருக்க விடாதீர்கள்

## குழந்தைகள் பரிசு வளரும் நிதி உதவி
## கொண்டு கனவை நனவாக்குங்கள்.



உங்கள் கண்மணிக்கு ஒரு பரிசை அளியுங்கள் அவனுடன் கூடவே வளரும் அப்பரிசு. யூனிட் ட்ரஸ்டின் குழந்தைகள் பரிசு வளரும் நிதியில் முதலீடு செய்யுங்கள். உங்கள் கண்மணி 21 வயதாகும் போது நீங்கள் முதலீடு செய்யும் அப்பணம் அவனுக்கு தேவைக்கேற்ப உதவும்.

ஒரு மொத்த தொகையை ஒரே தடவையாக பரிசளிக்கலாம். அல்லது சிறு சிறு தொகையாக வருடா வருடம் செலுத்தலாம். எப்படியாயினும் உங்கள் கண்மணி 21 வயதாகும் போது அவன் லட்சாதிபதியாவதை உறுதி செய்யலாம் (அவனுக்கு தேவையானால் 18 வயதாகும் போது பணத்தை எடுக்கும் அனுகூலமும் உண்டு.)

யூனிட் ட்ரஸ்டின் குழந்தைகள் பரிசு வளரும் நிதி. உங்களது சிறிது ஆலோசனை உங்கள் கண்மணியின் சிறந்த எதிர்காலத்தின் உத்தரவாதம்.

விண்ணப்ப பாரங்கள் யூனிட் ட்ரஸ்ட் கிளைகள், எல்லா பாங்குகள் மற்றும் கலெக்டிங் சென்டர்களில் அங்கீகரிக்கப்படும்.

விண்ணப்ப பாரம் மற்றும் ப்ரோஷருக்கு ஏதேனும் யூனிட் ட்ரஸ்ட் கிளை முக்கிய பிரதிநிதி அல்லது ஏஜென்டை அணுகவும்.

குழந்தைகள் பரிசு வளரும் நிதி

~~13%~~ **14%** டிவிடெண்ட்

& 3 வருடத்திற்கொருமுறை போனஸ்



**யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா**

21 மில்லியனிலும் அதிகம் யூனிட்தாரர்களின் சேவையில்.

எல்லா செக்யூரிட்டீஸ் இன்வெஸ்ட்மெண்ட்களும் மார்க்கெட் ரிஸ்க் கொண்டவை ஆகும். முதலீடு செய்வதற்கு முன் முதலீட்டு ஆலோசகர் அல்லது முகவரை கலந்தாலோசிக்கவும்.

**Branch Offices:** • Madras Ph: 517101, 517178 • Coimbatore Ph: 210399 • Madurai Ph: 34597 • Trichy Ph: 27774



ஒருவர் மற்றவருடைய சுய மதிப்பையும் தன்மானத்தையும் போஷித்து வளர்க்கிற தம்பதிகளே சந்தோஷமாக இருக்கிறார்கள். நகைச்சுவையுடன் கூடிய கேலிகள் இருக்கும். ஆனால் அவர்கள் ஒருவரையொருவர் மட்டம் தட்டிக் கொள்ள மாட்டார்கள். ஒரு அறுவை சிகிச்சை மருத்துவரின் மனைவி தனது கணவன் வீட்டு வேலைகளில் உதவி செய்வதில்லை என்பதைக் குறிப்பிடும் போது ''பறங்கிக் காயை நறுக்கிக் கொடுக்கச் சொன்னால் ஆப்பரேஷன் தியேட்டருக்குக் கொண்டு வா என்பார்'' என்று சொல்லுகிறாள். அப்போது கணவர் சிரிக்கிறாரே தவிர கோபப் படுவதில்லை.

சினிமாவே பிடிக்காத கணவன் மனைவியிடம் ''நான் உன்னோடு சினிமாவுக்கு வருகிறேன். ஆனால் அங்கே நான் தூங்கினால் எழுப்பக் கூடாது'' என்று சொல்கிற போது மனைவி கோபப் பட மாட்டாள். தன்னை மதித்து, தனக்காக ஒரு சித்திரவதையைத் தாங்கிக் கொள்ள முன் வரும் தியாகியாகவே மதிப்பாள்.

விருப்பங்கள் வேறு பட முடியும் என்பதை அங்கீகரிப்பதே கணவனும் மனைவியும் ஒருவரையொருவர் மதித்து மரியாதை செலுத்துவதற்கான அடையாளம், தனது விருப்பம், தனது போக்கு, தனது செயல்பாடு, தனது அணுகுமுறை, தனது கருத்து, தனது மனப்பான்மை மட்டுமே உயர்ந்தது என்ற எண்ணம் மரியாதையை ஏற்படுத்தாது. மற்றவரின் தனித்துவம், ஆளுமை, விருப்பங்கள் ஆகியவை புரிபட நாளாகும். புதுக்கல்யாண மோகத்தில் அவை தென்படாது. அவை புரிந்த பிறகுதான் மரியாதை தோன்றும். முதிர்ச்சியின் அடையாளமே மரியாதை. கலியாணமாகி முதல் சில ஆண்டுகளுக்கு எலியும் பூனையுமாக இருந்த கணவனும் மனைவியும் பின்னர் ஒத்துப் போய் சந்தோஷமாக இருப்பதைக் காணலாம்.

ஆனால் அவரவர் போக்குப் படி விட்டு விடுவது என்பதும் மரியாதையின் அர்த்தமல்ல. ஒருவரை ஒருவர் நன்கு புரிந்து கொண்டு, வேற்றுமையில் ஒற்றுமை கண்டு, ஒருவரையொருவர் நெருங்கி வர உதவுவதே மரியாதை. கணவன் சினிமாவை ரசிக்கத் தொடங்கலாம். மனைவி கிரிக்கெட்டில் அக்கறை கொள்ளலாம். இவ்வாறு ஒருவர் மற்றவரிடமிருந்து புதிய அம்சங்களைக் கற்றுக் கொள்ளக் கூட முடியும். மற்றவர் கருத்தைக் கவனத்துடன் கேட்டால், ஒரு விஷயத்துக்கு வேறு பரிமாணங்களும் இருப்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

வயதில் அல்லது கலாசாரப் பின்னணியில் பெரும் வித்தியாசமான ஒரு ஆணும் பெண்ணும் கலியாணம் செய்து கொண்டு நெடுங்காலம் சந்தோஷமாக் வாழ்ந்த உதாரணங்கள் பல உண்டு. அவர்களுடைய சந்தோஷத்தின் அடிப்படை குணத்தைக் குறையாகக் கருதாமல் அந்தக் குணத்தின் தன்மையைப் புரிந்து கொண்டு, அதில் உள்ள கவர்ச்சிகளைக் கண்டறிவதே உண்மையான இல்வாழ்க்கை.

– கே. என். ராமசந்திரன்



அதிகமான கால்ஷியம் சத்து உடம்பிற்குச் சேருவதால் பெண்களுக்கு மாதவிடாய்த் தொந்திரவு மிகக் குறைவாக இருக்கும் என்று அமெரிக்க ஆராய்ச்சியாளர் ஜேம்ஸ் பென்லாண்ட் கூறுகிறார். இவர் 600 மிலி. கிராம் கால்ஷியம் சத்துள்ள உணவு உட்கொள்பவர்களையும், 1300 மிலி. கிராம் உட்கொண்டவர்களையும் ஆராய்ந்து அதில் பத்துக்கு எட்டுப் பேருக்கு மாதவிடாய் சமயத்தில் அதிகச் சிரமமில்லாமல் (வலி முதலியன) இருந்ததைக் கண்டார். குறைவாகக் கால்ஷியம் உட்கொண்டவர்களில் பத்திற்கு ஒன்பது பேர் மாதவிடாய் சமயங்களில் சிரமங்களைச் சந்தித்ததாக ஆராய்ச்சியில் கூறியிருக்கிறார்.

- இந்திரா

# புதிய ஹமாம்...
# எனக்கும் இதுதான் பிரியம்!




அதில் ஆச்சரியமொன்றுமில்லை!
புதிய ஹமாமின் சிறப்பே அலாதி.
புதிய ஹமாமின் உயர்ந்த ஃபார்முலாவினால்
கூடுதல் வளமான நுரை. மேனியிலே
பட்டுபோன்ற மென்மையும், மனதிலே
புத்துணர்ச்சி பொங்கிடும் அனுபவமும் தந்திடும்.
இதுவே புதிய ஹமாமின் சிறப்பாகும். புதிய
ஹமாம் வீட்டில் அனைவரின் மனதையும்
வென்று நிற்கிறது.

புதிய ஹமாம்.
குடும்பத்தினர் அனைவரும் விரும்பவது தேர்ந்தும் இன்றும்.

## கூடுதல் நுரை.

## கூடுதல் மென்மை.

டாடா தயாரிப்பு

# ஹெல்மெட் இல்லாது ஹெட்!

இரு சக்கர வாகனங்கள் ஓட்டுநர்கள், ஹெல்மெட் அணியாத போது, தாமாகவே, சாவை அணைத்துக் கொள்கிறார்கள் என்று அண்மையில் பெங்களூரிலுள்ள தேசிய மன ஆரோக்கியம், நரம்பியல் ஆராய்ச்சி நிலையம் (National Institute of Mental Health and Neuro Sciences - NIMHANS) ஒரு எச்சரிக்கை விடுத்துள்ளது.

ஹெல்மெட் அணிவது கட்டாயமில்லை. அணிவது, அணியாமலிருப்பது அவரவர் விருப்பம் என்று கர்நாடக அரசு அறிவித்துள்ளதைத் தொடர்ந்து, 1992 ஆம் ஆண்டில் ஒவ்வொரு மாதமும் சுமார் அறுபதுக்கும் மேற்பட்ட இரு சக்கர வாகன ஓட்டிகள் சாவைத் தழுவுவார்கள் என்று கூறப்படுகிறது.

இக் கட்டுரையில் கொடுக்கப்பட்டுள்ள புள்ளி விவரங்கள் கர்நாடகாவில் எடுக்கப்பட்டாலும், ஆய்வுகளில் பெறப்பட்ட முடிவுகள் எல்லா மாகாணங்களுக்கும் பொருந்தும். NIMHANS ஆராய்ச்சி நிலையம், 1991 செப்டம்பரிலிருந்து 1992 பிப்ரவரி வரை, விபத்துக்களில் சிக்கித் தலையில் காயம் பட்டு, பெங்களூரில் உள்ள ஒன்பது பெரிய ஆஸ்பத்திரிகளில் அட்மிட் ஆகிய 3000 நபர்களைப் பற்றி நடத்திய ஆய்வின் இறுதியில், ''ஹெல்மெட் அணியாமல் இரு சக்கர வாகனங்களை ஓட்டுபவர்களின் இறப்பு விகிதம் இருமடங்கு'' என்று கூறியுள்ளது.



இந்த ஆய்வின் மற்ற முடிவுகள் :

1. ஒவ்வொரு மாதமும் பெங்களூரிலுள்ள பெரிய ஆஸ்பத்திரிகளில் தலையில் காயம் ஏற்படும் போக்குவரத்து விபத்துக்களில் 300 நபர்களை அட்மிட் செய்கிறார்கள். இதில் 30லிருந்து 40 சதவீதம் இருசக்கர வாகன ஓட்டிகள் என்றும், இதில் 18% வாகன ஓட்டுனர்கள் என்றும் 16% வாகனங்களின் பின் பக்கம் உட்கார்ந்து செல்பவர்கள் என்றும் கூறப்படுகிறது.

2. தலையில் காயம் பட்டவர்களில் சராசரி 8.2 சதவீதத்தினர் இறந்தார்கள்.

3. காயம்பட்ட குழந்தைகளின் 2.3 சதவீதத்தினருக்கு, மிகக் கடுமையான காயம் ஏற்படுகிறது.

# ஆஸ்திக பெருமக்களுக்கு ஓர் பணிவான வேண்டுகோள்

ஸ்ரீ காயத்ரி டிரஸ்ட் ஒரு சமூக பொதுச்சேவை நிறுவனம். ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சார்ய சுவாமிகள், ஸ்ரீரங்கம் ஸ்ரீமத் ஆண்டவன் சுவாமிகள் ஸ்ரீ அஹோபில மடம் ஜீயர் சுவாமிகள் ஆகிய சமயப் பெரியோர்களின் அருளாசிகளுடன் காயத்ரி டிரஸ்ட் பொதுமக்களுக்கு பல சேவைகளை செய்து வருகிறது.

## ஸ்ரீ காயத்ரி ஞானவாபி

குரோம்பேட்டை லட்சுமிபுரம் திருவள்ளுவர் தெருவில், இறந்தவர்களுக்கு 13 நாட்கள் வைதீக காரியங்களை மிகக் குறைந்த கட்டணத்தில் நடத்துவதற்கு வேண்டிய வசதிகளை இங்கு ஏற்படுத்தியுள்ளது ஸ்ரீ காயத்ரி ட்ரஸ்ட். திருநீர்மலை பஞ்சாயத்து யூனியனின் அனுமதியுடன் ரூ 36,000 செலவில் கான்கிரீட்டினால் உடல் எரியூட்டும் மேடையையும் இந்த அமைப்பு கட்டியுள்ளது. ரூ. 1.5 லட்சம் செலவில் கருமாதி மண்டபமும் கட்டப்பட்டு வருகிறது. ஏழைகளுக்கு கட்டணம் கிடையாது.

அநாதைப் பிணங்களையும் எடுத்துவந்து எரியூட்டும் பணியையும் இந்த அமைப்பு செய்கிறது. பூத உடலை ஆஸ்பத்திரியிலிருந்து வீடு|மயானத்திற்கு எடுத்துச் செல்வதற்கான வண்டியையும் ஸ்ரீ காயத்ரி ட்ரஸ்ட் குறைந்த கட்டணத்தில் பொதுமக்களுக்கு அளிக்கிறது.

இது தவிர ஏழை மாணவர்களுக்கு ஆண்டுதோறும் புத்தகங்கள் வழங்குதல், படிப்புக் கட்டணம் செலுத்துதல், பள்ளிகளுக்குத் தேவைப்படும் மேஜை நாற்காலிகள் வாங்கிக் கொடுத்தல் ஆகியவையும் இவ்வமைப்பின் நற்பணிகளாகும்.

ஸ்ரீ காயத்ரி ட்ரஸ்டின் நற்பணிகள் மேலும் விரிவுபடுத்தத் திட்டமிடப்பட்டுள்ளது. இதற்கு ஆஸ்திக அன்பர்கள் தாராளமாக நன்கொடைகள் அளிக்குமாறு வேண்டிக் கொள்ளப் படுகிறார்கள். தாங்கள் வழங்கும் நன்கொடைகளுக்கு வருமானவரி பிரிவு **80G** ன் படி வரிவிலக்கு உண்டு.

நன்கொடைகளை கீழ்க்கண்ட விலாசத்திற்கு, ஸ்ரீ காயத்ரி டிரஸ்ட் (SHREE GAYETHRI TRUST) என்ற பெயரில் பெறப்பட்ட வங்கி டிராப்ட் மூலமாகவோ, காசோலையாகவோ அனுப்புமாறு பணிவுடன் கேட்டுக் கொள்கிறோம்.

**G. ராகவன்** தலைமை தர்மகர்த்தா

**ஸ்ரீ காயத்ரி டிரஸ்ட்**

பிளாட் எண் 45, லக்ஷ்மி நகர், குரோம்பேட்டை, சென்னை 600 044.

தொலைபேசி: 403757 (Res) Gnanavapi Off: 405884.



விபத்துக்களில் காயம் பட்டவர்களில் பெரும்பான்மையோர் தாங்கள் ஹெல்மெட் அணிந்திருக்க வேண்டும் என்றும், அப்படிச் செய்யாதது பற்றி வருத்தம் தெரிவித்தனர் என்றும் அறியப்படுகிறது. ஹெல்மெட் அணிவது கட்டாயமில்லை என்று அறிவிக்கப்பட்ட பிறகு, போக்குவரத்து விபத்துக்களில் தலையில் அடிபடுபவர்களின் எண்ணிக்கை அதிகரித்துள்ளது என்றும் அதே சமயம் ஹெல்மெட் அணிபவர்களின் எண்ணிக்கை 50%லிருந்து 20% ஆகக் குறைந்திருக்கிறது என்றும் கூறப்படுகிறது. தலையில் அடிபட்டவர்களில் 10 சதவீதத்தினர் சைக்கிள் ஓட்டியவர்கள். விபத்துக்குள்ளானவர்களில் பலர் ஹெல்மெட்டை ஸ்ட்ராப் போட்டுக் கட்டிக் கொண்டிருக்கவில்லை என்றும் அதனால் விபத்து ஏற்பட்டவுடன், ஹெல்மெட் கீழே விழுந்து விடுவதால் தலைக்குப் பலத்த அடி ஏற்படுகிறது என்றும் தெரிய வருகிறது.

இரு சக்கர வாகன விபத்துக்களில் பலியாகுபவர்கள் சுமார் 25லிருந்து 45 வயதுக்குட்பட்டவர்கள். இவர்களின் இறப்பு, இவர்களுடைய குடும்பத்தினருக்கும், சமுதாயத்திற்கும் பெரிய இழப்பு. ஏனெனில் இவர்களில் சிலர் மாணவ மாணவியர், குடும்பத் தலைவர், மற்றும், எஞ்சினியர்கள், டாக்டர்கள் போன்றவர்கள். எனவே ஹெல்மெட் அணிவதனால் உண்டாகும் நன்மைகளைப் பற்றிய ஒரு விழிப்புணர்வு ஏற்படுத்துவது மிக முக்கியமானது.

ஹெல்மெட் அணிவதால் குறிப்பிடும்படியான நன்மை இருக்கிறது என்பதற்கு நிம்ஹான்ஸ் ஆராய்ச்சி நிறுவனத்தின் ஆய்வின் முடிவுகளே சாட்சி. மோட்டார் சைக்கிள் ஓட்டுவர்களில், ஒவ்வொரு ஐந்து அல்லது ஆறு பேருக்கு ஒருவர் விபத்தில் காயமடைகிறார். 1961ம் ஆண்டிலிருந்து 1978ம் ஆண்டு வரை மும்மடங்கான கார்கள், ஜீப்புகள், பஸ்கள் பதிவு செய்யப்பட்டுள்ளன என்றும், ஆனால், இரண்டு சக்கர, மூன்று சக்கர வாகனங்களின் எண்ணிக்கை 13 மடங்கு ஆகியுள்ளது என்றும் அறியப்பட்டுள்ளது. மோட்டார் சைக்கிள் மற்றும் ஸ்கூட்டர்களில் பயணம் செய்பவர்கள், கார், ஜீப் போன்ற பெரிய வாகனங்களை ஓட்டுபவர்கள் அல்லது அவற்றில் பிரயாணம் செய்பவர்களை விட அதிக ஆபத்துக்குள்ளாகிறார்கள். வாகனம் சமநிலையில் இருக்க வேண்டுமானால் குறைந்தபட்சம், மூன்று பாயிண்ட்டுகள் தேவை. ஆனால் இரு சக்கர வாகனங்கள் இரண்டே பாயிண்ட்டுகளில் நிற்கின்றன. எனவே இரு சக்கர வாகனங்களை ஓட்டுபவர்கள் ஓட்டுவதில் சிறந்த திறமை பெற்றவர்களாக இருந்தால் மட்டுமே, வாகனத்தை பாலன்ஸ் செய்ய முடியும். மேலும் இரு சக்கர வாகனங்களை ஓட்டுபவர்களுக்கும், அதில் பின்னால் உட்கார்ந்து செல்பவருக்கும் எந்தப் பாதுகாப்பும் இல்லை. ஆனால் கார் போன்ற வாகனங்கள் பாதுகாப்பளிக்கின்றன. இரு சக்கர வாகனங்களை சாலைகளில் எளிதாக இனம் கண்டுகொள்ள முடியாது. எனவே, இவைகள் மிக எளிதில் விபத்துக்குள்ளாகின்றன.

மோட்டார் சைக்கிள் ஓட்டுனரின் உடலின் மற்ற பாகங்களை விட தலைதான் மிகவும் பாதிக்கப்படக்கூடியது. ஹெல்மெட் அணிந்தால் உயிருக்கு ஏற்படும் ஆபத்து கணிசமாகக் குறைகிறது. விபத்தில் சிக்கிக் கொள்ளும், ஹெல்மெட் அணியாத ஓட்டுவர்களில் 50 சதவீதத்திலிருந்து 80 சதவீதத்தினருக்கு, தலையில்தான் காயங்கள் ஏற்படுகின்றன. ஹெல்மெட் அணியாத ஓட்டுனருக்கு, ஹெல்மெட் அணிந்தவரை விட, மூன்று மடங்கு அதிகமாக தலையில் காயம் படுகிறது. இரு சக்கர வாகனங்களின் எண்ணிக்கை, அதிகரிக்க, அதிகரிக்க, விபத்துக்களும் அதிகரித்துக் கொண்டே போகின்றன.





மோட்டார் சைக்கிள் விபத்தில் தலைக்கு ஏற்படும் அடி, சாவு அடியாகவே இருக்க முடியும். தலை, கெட்டியான தரையில், ஒரு மணிக்கு 25 கிலோ மீட்டர் வேகத்தில் மோதும் போது, 5000 நியூடன்ஸ் (அதாவது ஐந்து டன்கள்) சக்தியுள்ள உச்ச மோதல் ஏற்படுகிறது. அதிக பட்ச உயரத்திலிருந்து, ஒரு தர்ப்பூசணிப் பழத்தைப் போட்டு உடைப்பது போன்ற விளைவு, மோதலின் போது, தலைக்கு ஏற்படுகிறது. விபத்தில் சிக்கியவருக்கு மண்டையில் பிளவுகள் ஏற்படலாம். மூளையில் இரத்தம் உறைந்து விடலாம். மேலும் இறுதிவரை மிகவும் அவஸ்தைக்குள்ளாகும் நிலை ஏற்படலாம், அல்லது சாவு நேரிடலாம். இந்தச் சூழ்நிலையிலிருந்து தலையைப் பாதுகாக்கும் விதத்தில் ஹெல்மெட்டுகள் வடிவமைக்கப்பட்டுள்ளன. ஹெல்மெட்டுக்குள் பாலிஸ்டீரின் அல்லது தெர்மகோல் லைனிங் கொடுக்கப்பட்டிருப்பதால், விபத்து ஏற்படும் போது, தலையை மிக மெதுவாக ஒருநிலைக்குக் கொண்டு வருகிறது. எனவே, மண்டைக்கு ஏற்படும் அழுத்தம் குறையும் போது, மண்டை பிளப்பது அல்லது மூளைக்குக் காயம் ஏற்படும் வாய்ப்பு குறைகிறது. மேலும், தலை மிக மெதுவான வேகத்தில் ஒருநிலைக்குக் கொண்டு வரப்படுவதால், மூளையிலுள்ள திசுக்கள் சிதைவதில்லை.

ஹெல்மெட் அணிவதால் பல நன்மைகள் இருந்தாலும், மக்களிடையே, பல தவறான கருத்துக்கள் உள்ளன.

## இந்தத் தவறான கருத்துக்கள் யாவை?

1. குறைந்த வேகத்தில் செல்லும் போது ஹெல்மெட் தேவையில்லை - இது உண்மையல்ல. ஒரு மணிக்கு 17 கிலோ மீட்டர் வேகத்தில் படுகாயம் ஏற்பட்டு சாவும் நிகழலாம் என்று மிச்சிகன் சர்வகலா சாலையைச் சேர்ந்த டாக்டர் ஸ்னைடர் ஒரு ஆய்வின் இறுதியில் கருத்துத் தெரிவித்துள்ளார். மேலும், குறைந்த வேகத்தில் செல்லும் போதே ஹெல்மெட், மிகவும் உதவியாக இருக்கிறது என்றும் கூறுகிறார்.

2. ஹெல்மெட்டை முகவாய்க் கட்டையில் கட்டிக் கொள்ளப் பயன்படும் நாடாவினால் மூச்சுத் திணறல் ஏற்படுகிறது - இது உண்மையல்ல. நாடாவினால் மூச்சுத் திணறல் ஏற்படுவதாக உலகில் எங்கும் சான்று இல்லை.

3. ஹெல்மெட்டினால், கழுத்தில் காயம் ஏ ற் ப டு கி ற து உண்மையல்ல. விஞ்ஞானரீதியாக இதற்குச் சான்றே இல்லை. கனடாவைச் சேர்ந்த டாக்டர் நியூமன் எனும் ஹெல்மெட் வடிவமைப்பு நிபுணர், பல மோட்டார் சைக்கிள்கள் விபத்துக்களை ஆராய்ந்தார். யாருக்கும், ஹெல்மெட்டினால் கழுத்தில் காயம் ஏற்பட்டதாக ஆய்வில் அறியப்படவில்லை.

4. தலையில் துணியை டர்பன் மாதிரி கட்டிக் கொண்டால் தலையில் காயம் ஏற்படுவதைத் தடுக்க முடியும். இதுவும் உண்மையல்ல. இரு சக்கர வாகனங்களுக்கு உண்டாகும் விபத்தில் நபர் தூக்கியெறியப் படும் போது, துணியாலான டர்பன் தலைக்கு எந்தவிதத்திலும் பாதுகாப்பு அளிக்க முடியாது.

---

அடை தட்டி மிருந்து விட்டதென்றால் என்ன செய்யலாம்! மிக்ஸியில் போடுங்கள். புஷ்பம் மாதிரி தூள் கிடைக்கும். அலுமினிய இலுப்பச் சட்டியில் எண்ணெய் விட்டுக் கடுகு, உளுந்தம் பருப்பு தாளிக்குமுன், உருளை, காரட், வெங்காயம், பச்சை மிளகாய், கறிவேப்பிலையைப் பொடியாகச் செய்து வதக்கி அடைப் புஷ்பத்தை அள்ளிப் போட்டுக் கலந்து எடுங்கள். அருமையான 'வெஜிடபிள்' அடை உப்புமாவாக இருக்கும். முதல் நாள் அடை. மறுநாள் உப்புமா!

- ரோஜி






# நான் பிரெஸ்டீஜ் அல்டிமேட் வாங்கியதற்குக் காரணம் என்ன தெரியுமா ?

**என் மனைவியின் பாதுகாப்பு என்னை பொறுத்தவரை மிகவும் முக்கியமானது.**

"மனைவியை நான் ரொம்பவும் போற்றிப் பாதுகாப்பதாக சிலர் என்னைக் குறை கூறுகின்றனர். ஆம், இது உண்மைதான். அதனாலேயே நான் பிரெஸ்டீஜ் அல்டிமேட் வாங்கினேன்.

பிரெஸ்டீஜ் அல்டிமேட்டின் பிரத்தியேக பாதுகாப்பு அம்சங்கள் சிறப்பான முறையில் அமைக்கப்பட்டுள்ளன. எப்போதும் காணும் ஸேஃப்டி வால்வுகள் தவிர, இதில் பிரெஸ்டீஜின் நூதன கண்டுபிடிப்பான


ஜிஆர்எஸ்

காஸ்கெட் ரிலீஸ் ஸிஸ்டம் [ஜி ஆர் எஸ்] உள்ளது. வெயிட் வால்வில் அடைசல் இருந்தால் ஜி ஆர் எஸ் உடனே செயல்பட்டு அதிக பிரஷரை கீழ்நோக்கி பாதுகாப்பாக வெளியேற்றும்.

பிரெஸ்டீஜில் மட்டும் உள்ள மற்றொரு பிரத்தியேக அம்சம் - டபிள் லாக்கிங் ஸிஸ்டம். இதனால் பிரஷர் பாதுகாப்பான நிலைக்குக் குறையும் வரை குக்கரைத் திறக்க முடியாது.


டபிள் லாக்கிங் ஸிஸ்டம்

பாதுகாப்புக்கான புது யுத்திகள் பிரெஸ்டீஜில் வந்து கொண்டே இருக்கின்றன. என் மனைவியின் பாதுகாப்பைப் பற்றி என்னைப் போலவே பிரெஸ்டீஜுக்கும் ஆழ்ந்த அக்கறை இருப்பதை இது நிரூபிக்கவில்லையா?"

TTK தயாரிப்பு

**பிரெஸ்டீஜ்**
அல்டிமேட்

MAA COMMUNICATIONS 2073-92 TAM

# கிஸான் ஜாம்களிலிருந்து உங்களைத் தூண்டும் ஒரு சலுகை!




இப்போது ஒவ்வொரு 500 கி. பாட்டிலுக்கும் ரூ 3/- சேமிப்பு கிடைக்கிறது

விரைந்திடுங்கள்! இந்த சலுகை சரக்கு உள்ளவரையே

உங்கள் குடும்பத்துக்கு மிகவும் பிடித்தமான சுவைகளை கிஸான் வரிசையிலிருந்து தேர்ந்தெடுங்கள்: • மிக்ஸட் ஃப்ரூட்

• பைனாப்பிள் • கோவா ஜெல்லி • மேங்கோ

• ஆப்பிள் • ஆரஞ்சு மார்மலேட் • ஸ்ட்ராபெரி.

* தற்போதைய MRP. விலை - ரூ.25.75




கனிரசம் இது தனிரசம்



THE UB GROUP



Chaitra-K-327/92-Tam



5. குழந்தைகள் தலை கெட்டியாக இருப்பதால் அவர்கள் ஹெல்மெட் அணிய வேண்டியது அவசியமில்லை. இதுவும் உண்மையல்ல. விபத்தில் அடிபடும் போது, பெரியவர்களை விட, குழந்தைகள் அதிவேகமாகக் குணமடையலாம். ஆனாலும் நீண்ட கால விளைவுகளாக, கடுமையான தலைவலி, வலிப்பு போன்றவை குழந்தைகளுக்கு ஏற்படலாம். ஹெல்மெட் அணியும் குழந்தைகள் பாதுகாப்பாக இருக்கலாம்.

மோட்டார் சைக்கிள் மேல் மோதும் வாகனங்களை ஓட்டுனர்களில் 50 சதவீதத்தினர் மோட்டார் சைக்கிள் வருவதைக் கவனிக்காததாலும் அல்லது தாமதமாக, அதாவது விபத்து நேரிடுவதற்குச் சற்று முன்புதான் கவனிப்பதாலும் மோதல்கள் ஏற்படுகின்றன என்று இன்னொரு அமெரிக்க ஆய்வில் அறியப்பட்டுள்ளது. எனவே கவனத்தைக் கவரக்கூடிய வகையில், ஆழ்ந்த வர்ணம் பூசப்பட்ட மோட்டார் சைக்கிளையும், அதனை ஓட்டுனரும் அதே மாதிரியான பிரகாசமான வர்ண உடைகளையும் கவனத்தைக் கவரக்கூடிய வர்ணம் பூசிய ஹெல்மெட்டையும் உபயோகிப்பது மிகவும் பாதுகாப்பானது என்பது இதிலிருந்து புரிகிறது. மோட்டார் சைக்கிள் முகப்பு விளக்குகள் (ஹெட் லைட்ஸ்) எப்போதும் எரிய வேண்டும், பகல் நேரங்களில் கூட.

விபத்துக்களில் தலையின் பக்கங்களே அதிகக் காயமடையக்கூடியது என்றாலும், ஹெல்மெட்டின் உச்சிபாகமே, அதிகபட்ச பாதுகாப்பு தரக்கூடிய வகையில் வடிவமைக்கப்பட்டிருக்கிறது. இந்தியாவில் கிடைக்கும், மிக மலிவான ஹெல்மெட் கூட ஓரளவுக்குப் பாதுகாப்பு அளிக்கிறது. எனவே ஹெல்மெட்டின் கீழ் அளவும், தலையில் பக்கங்களை நன்றாகப் பாதுகாக்கும் முறையில் நீளமாக்கப்படுவது நல்லது.

டில்லியில், தலையில் காயம் பட்டவர்களைப் பற்றி நடத்திய ஆய்வில், வாகனங்களின் வேகம், மணிக்கு 15 கிலோ மீட்டராக இருந்தும், தலைக்குப் பலத்த காயமேற்பட்டதாகத் தெரிகிறது. இவர்களில், தலையில் துணியால் டர்பன் அணிந்தால் பாதுகாப்பு என்று நம்பும் சீக்கியர்களும் இருந்தார்கள் என்றும், ஆனால் ஆய்வில் இக் கருத்துக்கு ஆதாரம் இல்லை என்றும் தெரிகிறது.

## ஹெல்மெட் வாங்குகிறீர்களா?

பார்ப்பதற்கு அழகாக இருக்க வேண்டும் என்பதற்காக ஹெல்மெட் வாங்குகிறீர்களா? அல்லது பாதுகாப்பாக இருக்க வேண்டும் என்பதற்காக ஹெல்மெட் வாங்குகிறீர்களா?

இந்தியாவில் தயாரிக்கப்படும் ஹெல்மெட்டுகள், மிகச் சிறந்தவையாக இல்லாவிட்டாலும், விலை மலிவாக இருக்கும் ஹெல்மெட்டுகளும், ஓரளவுக்குப் பாதுகாப்பு அளிக்கின்றன என்கிறார் ஒரு டாக்டர்.

இந்தியாவில் தயாரிக்கப்படும் ஹெல்மெட்டுகள், மிக எடையுள்ளவையாக இருக்கின்றன. இதனால் ஹெல்மெட் அணிபவர்களுக்குத் தலையில் ஏதோ பெரிய பாறாங்கல்லைக் கட்டித் தூக்கி வைத்திருப்பது போன்ற உணர்வு ஏற்படுகிறது என்பது உண்மையே. மேலும் விலையும் அதிகம். தலைக்குப் பாதுகாப்பு அளிப்பது ஹெல்



மெட்டுக்கு உட்பக்கத்தில் லைனிங் கொடுக்கப்பட்டிருக்கும் தெர்மகோல் பாடிங். ஆனால் இந்தத் தெர்மகோல் லைனிங் மிக மெல்லியதாகவே கொடுக்கப்பட்டிருக்கிறபடியால், விபத்தில் மோதல்கள் ஏற்படும் போது, சரியான பாதுகாப்பு தருவதில்லை.

ஹெல்மெட்டுகளில் மூன்று விதங்கள் : 1. உட்பக்கத்தில் பாலிஸ்டிரின் அல்லது தெர்மகோல் லைனிங் கொடுக்கப்பட்டது. 2. தொங்கும் தொட்டில் அமைப்புள்ள ஆனால் உட்பக்கம் லைனிங் அமைப்பு இல்லாதது. 3. லைனிங் இல்லாத தொட்டில் அமைப்பு இல்லாத ஹெல்மெட்.

தெர்மகோல் லைனிங் கொடுக்கப்பட்டுள்ள ஹெல்மெட் மிக அவசியமானது. ஏனென்றால், இந்த லைனிங், விபத்தில் தலைக்கு அதிகக் காயம் படாதவாறு பாதுகாப்பு அளிக்கிறது.

## ஹெல்மெட்டைத் தேர்ந்தெடுப்பது எப்படி?

தலையில் சரியாகப் பொருந்தக்கூடிய, தலைமுழுவதையும், அதாவது தலையின் பக்கங்களையும் மூடும்படியான வகையில் வடிவமைக்கப்பட்ட ஹெல்மெட்டைத் தேர்ந்தெடுங்கள். முகம் முழுதும் மூடும் ஹெல்மெட் உத்தமமானது. மேலும் விசர் என்று கூறப்படும் நகரக்கூடிய அமைப்பு, கெட்டியாகப் பொருந்தப்பட்டுள்ள ஹெல்மெட் மிகவும் உத்தமமானது. ஆனால் அவ்வப்போது பொருந்திக் கொள்ளும் அமைப்பு (Snapon Visor) நல்லதல்ல. ஏனெனில் மோதலின் போது இவை பறந்து விடும்.

முகவாய்க் கட்டையைப் பாதுகாக்கும் வகையில் இருக்கும் அமைப்போடு கூடிய நாடாக்கள் பொருத்தப்பட்ட ஹெல்மெட் வேண்டாம். ஏனென்றால் இந்த மாதிரியான ஸ்ட்ராப்புகள் இருக்கும் ஹெல்மெட் சரியான முறையில் தலையில் இருக்கும்படி செய்வதில்லை. ஹெல்மெட்டை முகவாய்க் கட்டைப் பகுதியில் கட்டுவது Buckle அல்லது இரண்டு நாடாக்கள் (Two loop style) அமைப்புள்ளதாக இருக்க வேண்டும். இந்த அமைப்பு இருந்தால்தான், மோதல் ஏற்படும் போது, ஹெல்மெட் தலையை விட்டு நீங்காமல் இருக்கும். ஸ்ட்ராப்புகள் நன்றாக இறுக்கமாகக் கட்டப்பட வேண்டும். ஹெல்மெட்டுக்குள் ரிவெட்டுகள் (Rivet) போன்ற கெட்டியானவை இருக்கக் கூடாது. மேலும் ஹெல்மெட் பிரகாசமான வர்ணத்தில் அதாவது, ஆரஞ்சு, மஞ்சள் போன்ற வர்ணத்தில் இருக்க வேண்டும். மேலும், ஹெல்மெட் மீது, பிரதிபலிக்கக்கூடிய கோடுகள் இருக்க வேண்டும்.

தலையின் எடை 10 பவுண்டுகள். மணிக்கு 8 கிலோ மீட்டர் வேகத்தில் சென்று கொண்டிருக்கும் இரு சக்கர வாகனம் மோதி, திடீரென்று நின்று விடும் போது, தலையின் எடை 5 மடங்கு அதிகரிக்கிறது. மணிக்கு 32 கிலோ மீட்டர் வேகத்தில், வாகனம் திடீரென்று நின்று விடும் போது, தலையின் எடை 200 பவுண்டாக அதிகரிக்கிறது. இந்த வேகத்தில், நிறுத்தி வைக்கப்பட்டிருக்கும் காரின் பக்கத்தில், இருசக்கர வாகனம் சிக்கிக் கொண்டு நின்று விடும் போது, தலையை 200 பவுண்டுள்ள சுத்தியலால் அடிப்பது போன்ற உணர்வு ஏற்படும் என்று மலேசியாவில் வெளியாகும் பத்திரிகை கூறுகிறது.

## ஹெல்மெட்டைப் பாதுகாப்பது எப்படி?

1. ஹெல்மெட்டைப் பொருத்திக் கட்டிக் கொள்ளும்படியாக அமைக்கப்பட்டுள்ள ஸ்ட்ராப்பினால் ஹெல்மெட்டைத் தொங்க விடாதீர்கள். ஸ்ட்ராப்புகள், ஹெல்மெட்டைத் தொங்க விடுவதற்காக அமைக்கப்பட்டவை அல்ல.

2. உபயோகத்தில் இல்லாத சமயத்தில் ஹெல்மெட் கீழே விழாதவாறு பார்த்துக் கொள்ளவும். ஹெல்மெட்டின் ஒரு பகுதி உடைந்தாலும் உடனே வேறு வாங்கவும்.

3. சில ஹெல்மெட்டுகளில் முகத்தை மூடும் வகையில் கெட்டியான (கண்ணாடி போன்ற) அமைப்பு இருக்கும் - பார்ப்பதற்காக. இதற்கு விசர் (Visor) என்று பெயர். இதை அவ்வப்போது, அதிகம் சோடா இல்லாத சோப்பினால் கழுவி, மிருதுவான துணியால் துடைக்கவும்.

4. வியர்வையினால், ஹெல்மெட்டின் நாடாக்களிலுள்ள தையல்கள் பிசுபிசுத்து விடலாம். எனவே ஸ்ட்ராப்பை அடிக்கடி கண்காணிக்கவும்.

5. ஹெல்மெட்டை, வெட்டியோ, அதிலுள்ள ரப்பர் அமைப்பை நீக்கியோ, சரிசெய்ய முயலாதீர்கள்.

ஆதாரம் : டெக்கான் ஹெரால்டு

– ராஜி

அலுமினிய ஹாங்கரின் கொக்கியைக் கழற்றிவிட்டு, அதில் கண்ணாடி வளையல்களை மாட்டி, அப்படியே தொங்க விட்டால் உடையாது.

– பார்வதி



# காவியங்கள் ஒருபோதும் மாறுவதில்லை.




**ஸின்தால் சோப்** காலம் காலமாய் தலைசிறந்து நிற்கும் ஓர் அசல் இந்திய படைப்பு. என்றும் மாறாத அதே குணம், நறுமணம், எடை, உறை. ஏனெனில் எங்களுக்குத் தெரியும் . . . நீங்கள் வேறு எதையும் விரும்ப மாட்டீர்கள் என்று.

ஸின்தால் — 40 ஆண்டுகளாக உங்களுக்கு விருப்பமான டியோடரன்ட் சோப்.



'அநீதி இழைப்பவன் அநீதிக்கு
உட்படுபவனை விட
அதிகத் துயரமடைவான்.'

- பிளேட்டோ.

"என்ன சார், மருந்துக் கடை பக்கம்? உடம்பு சரியில்லையா" - என லவுட்ஸ்பீக்கராய் ஓர் குரல் கொடுக்க, அனைவரின் கண்களும் குரல் வந்த திக்கை நோக்கின. அக் குரலின் உரிமையாளர் ஐம்பது வயது மதிக்கத்தக்க தோய்த்தும் வெளுக்காத வெள்ளை உடை அணிந்த ஓர் ஊர் வம்பி.

"ஒண்ணா, இரண்டா, ஆஸ்த்துமா, நெஞ்சு வலி, பல் வலி, இரத்தக் கொதிப்பு. ஹ்ம். இன்னும் இரண்டே மாசத்துல மேல போயிடுவேன்" என ஊர் வம்பிற்குப் பதிலளித்த இந்த அறுபத்தி ஒன்பது வயதாகும் சிவசங்கரே இக் கதையின் கதாநாயக வில்லன்(!) மனிதக் கரையான். இவரைப் பார்ப்பவர் யாருமே இவரின் விரக்தியான, வேதனையான பேச்சில் மனம் கலங்கி விடுவர். அப்படியிருக்கும் போது இவரைக் கரையானுடன் ஒப்பிடலாமா என யாரும் தவறாக நினைத்து விடக் கூடாது. கரையானை தனியாக பார்க்கும் பொழுது அதனின் அரிக்கும் திறனை அறிந்து விட முடியுமா?

"ஐயோ, பாவம், இந் நேரத்தில் நீங்களே தனியா வர்றீங்களே..."

"எல்லாம் என் தலையெழுத்து. மாடா உழைச்சு என் குடும்பத்தைக் காப்பாத்தினேன். இலட்சம் இலட்சமா அவங்களுக்காக செலவழிச்சேன். என் உழைப்பைத் தின்னு வளர்ந்து இன்னிக்கு எல்லோரும் என்னைத் தெருவில விட்டுட்டாங்க. இவங்க எல்லாம் நல்லா இருப்பாங்களா?"

வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த கூட்டம், 'அடக் கடவுளே' என அங்கலாய்க்க எங்கோ ஒரு குரல், 'இதுதான்யா கலிகாலம்ங்கறது. இந்தக் காலத்தில் பொண்டாட்டியாவது பிள்ளையாவது. எல்லாம் காசுதான் பேசும்' என தத்துவம் கூறியது.

பலரின் அனுதாபத்தையும் பெற்ற மன நிறைவில் சிவசங்கர் நெஞ்சைப் பிடித்தபடி 'லொக் லொக்'கென்ற நாடக பாணி இருமலுடன் நகர்ந்தார். ஊர் வம்பி குரல் உயர்த்தியது. "மஹாவஞ்சகா இவன். இப்படி இரண்டு மாசத்தில செத்துடுவேன்னு இருபது வருஷமா சொல்றான். பொய்யால ஆன உடம்பு. இவன் பொண்டாட்டி தெய்வங்க. நானா இருந்தா இவனை வெட்டிப் போட்டிருப்பேன்."

கதையின் புதிய கோணம் கூடியிருந்தவர்களின் முகங்களில் ஆச்சர்யத்தைத் தோற்றுவித்தது. தன் வீட்டினை அடைந்த

# மனிதக் கரையான்



கரையான்... மன்னிக்கவும். சிவ சங்கர் வீட்டு வாசலில் கையில் உணவுடன் காத்திருந்த சிறுவனை எட்டி உதைத்தார். ''ஏண்டா நாயே, ஏன் டிபன் கொண்டு வர பத்து நிமிஷம் லேட். அந்தப் பொம்பளைக்கு நேரத்தோட அனுப்ப முடியலையா. மாசம் சொளையா பணம் கொடுக்கறேன்'' என தன் கயருபத்தை வெளிப்படுத்தினார்.

''ஐயா, நான் அப்பவே வந்துட்டேன். நீங்கதான் வெளியில போய் விட்டீங்க.''

''எதிர்த்தா பேசறே, உன்னை...'' என சிவசங்கர் பையனைத் துரத்த சிட்டாய் பறந்த சிறுவன்,

''ஓஸ்‌ே, ஓஸ்‌ே. உன்கிட்ட எவன் வேலை செய்வான். பைத்தியக்காரன். ஏதோ அந்த அம்மா முகத்துக்காக வர்றேன். நல்லா பட்டினி கிட. நீ காசு கொடுக்கிற லட்சணம் எங்களுக்குத் தெரியாதா?''

இடியாய் முழங்க சிவசங்கர் வீட்டினுள் ஓடி ஒளிந்தார்.

ஓ. இவருக்கு அனைத்தும் இவரது மனைவியிடமிருந்து வருகின்றதா? யார் அந்தக் கலியுக நளாயினி, காலமெல்லாம் எப்படி இவரைப் பொறுத்தாள் என த் தெரிய வேண்டுமே.

''தெரிந்து என்ன ஆகப் போகின்றது. மிகைப்படுத்தி கூறுகிறேன் என்பார்கள். ஒரு குடிகாரனை, ஒரு திருடனை, ஒரு பைத்தியக்காரனை உலகுக்கு எளிதாக அடையாளம் காட்டி விடலாம். ஆனால் ஒரு பகுத்தறிவில்லாத வக்ர எண்ணமுடையவனை, மனிதாபிமானம் இல்லாதவனை, நான், தன் வயிறே ப்ரதானம் என வாழ்பவனை, ஒரு மனித விலங்கை அடையாளம் காட்டுவது கடினம். அவரவர் அனுபவித்தால்தான் உணர்ந்து கொள்ள முடியும். இது இவரின் மூளையின் ஊனம் எனச் சகித்து வாழ்கிறேன். என் தொழில், வருமானத்தைக் கொண்டு என் குழந்தைகளைக் கரையேற்றி விட்டேன். இதைப் பற்றிப் பேசி என்ன பயன்?''

என எளிமையாய் தன் சரிதத்தை அம்மையார் கூறினார். வாழ்க்கையின் கடுமைக்கு அடிமையாய் ஆனாலும் எனப் புரிந்தாலும் அவற்றை மீறி சாதனைகள் படைத்த குடத்துள் விளக்கு எனத் தோன்றியது. இதோ எனக்குக் கஷ்டம் என சிறிய விஷயங்களைப் பெரிதுபடுத்தி சோகக் கடலில் மூழ்கும் பெண்கள் பலரின் நடுவே ஒரு கலங்கரை விளக்கம் என உணர்த்தியது. ஆக இவரின் உழைப்பும், மனஉறுதியும், தன் வம்பிக்கையும் பல பெண்களுக்கு ஊக்க மளிக்கும் ஓர் உதாரணம் என உள்ளுணர்வு கூறியது.

''உங்களுக்கு அறுபது வயது இருக்கலாம். இன்னமும் உங்களை வேலை செய்து

வருத்திக் கொண்டிருக்கின்றீர்களே இது அவசியமா?''

''அவசியம்தான். இந்த வேலைதான் எனக்கு உயிர். ஒரு காலத்தில் எனக்கும் என் குழந்தைகளுக்கும் சோறு போட்டது. இப்போது என்னையும், என் கணவரையும் காப்பாற்ற உதவுகின்றது.''



மனைவியைக் காப்பது கணவனின் கடமை என்ற கலாசாரம் உடையது நம் நாடு. அப்படியும் இவர் கணவருக்கு எந்த உடல்நலக் குறையும் கிடையாது. இந்த அம்மையார் பல வருடங்களாக தனித்திருந்து வாழ்கிறார். இவற்றிற்கெல்லாம் என்ன காரணம்?

''எங்கப்பா ஒரு பெரிய டாக்டர். ஆனா என் சின்ன வயசிலேயே இறந்துட்டார். என் கூடே மூணு பேர் கொண்ட குடும்பம். மூத்த மகள் என்பதினால் எனக்குப் பத்தாவது படிக்கும்போதே கல்யாணம். கல்யாணம் ஆன ஒருசில நாட்களிலேயே ஓர் அரக்கனுக்கு வாழ்க்கைபட்டிருக்கிறோம்னு புரிஞ்சுக்கிட்டேன். எப்பவும் கோவம்.. நின்னா அடி, உட்கார்ந்தா அடி, கையில் எந் நேரமும் பிரம்புதான். தலையில வெந்நீரைக் கொட்டுவார். அலற அலறக் கிள்ளுவார். சுவற்றில மண்டைய முட்டிப் பிளப்பார். என்ன காரணம்னு தெரியலை. இப்படி அடிக்க வைக்கணும்னு அவர் கூடப் பிறந்தவர்கள் சொல்லியும் கொடுத்தனர். நெருப்பை அள்ளி மேலே கொட்டுவார்.''

கேட்பவரின் இரத்தம் உறைய ஆரம்பித்தது. ''என்ன செய்வது, எப்படித் தப்பிப்பதுன்னு தெரியலை. இந் நிலையில் என் மூத்த மகள் பிறந்தாள். தீபாவளிக்கு இரண்டு நாள் முன்னாடி பிறந்தா. என் கணவர் என் அறை வாசலில் ஓயாமல் சத்தமான வெடிகளை வெடித்தார். வெடி சத்த அதிர்ச்சியில் குழந்தை இறந்து விட வேண்டும் என ஆசைப்பட்டார். 'அவனுக்கு பெண் பிறந்து விட்டதென கோபம். அதான் இப்படிச் செய்கிறான்' என அவரின் செய்கையை நியாயப்படுத்தினர் அவரின் இரத்த பந்தங்கள். பிறந்த குழந்தைக்கு மிளகாய் ஊறுகாயை வாயில் தடவி அலறுவதை வேடிக்கை பார்த்தனர்.''

''இவற்றையெல்லாம் நீங்கள் எதிர்க்க முடியவில்லையா?''

''முதலில் பரிதவித்தேன். தெய்வம் கண் திறக்காதா என ஏங்குவேன். எப்போது என்ன நிகழுமோ என்ற திகிலாகவே வாழ்க்கை இருந்தது. துணிந்து பேச நாற்பது வருடங்களுக்கு முன் நாடும் முன்னேறவில்லை. இந் நிலையில் இரண்டாவது குழந்தை. என் குழந்தைகளும் இந்த நரகத்தில் தவித்த போது என் நெஞ்சு துடித்தது. பகலிலிருந்து மாலை வரையாக பகுதி நேர வேலைக்குச் சேர்ந்தேன். உணவுப் பிரச்னை தீர்ந்தது. மேலே படித்தேன். முழு நேர வேலை கிடைத்தது.''

''இதற்கு எந்தத் தடையும் இல்லாமல் இருந்ததா?''

''வருமானத்தில் பாதிக்கு மேல் என் கணவருக்குக் கப்பம் கட்ட வேண்டும். குடும்பப் பொறுப்பு முழுவதும் நான்தான். இருப்பினும் எத்தனையோ இடைஞ்சல்கள் இன்னல்கள். காலம் உருண்டது. கூடவே என் கணவரின் அக்கிரமங்களும் கூடின. மது, மாது எவற்றிற்கும் குறைவில்லை. அவர் குடும்பத்தைச் சார்ந்த பல இரத்த பந்தங்கள் சீரழிந்தன. என்னைத் தூற்றி வாழ்ந்தவர்கள் என் தயவை நாடி வாழ வேண்டி ஆனது.''

''பின்னே இறைவன் சும்மா விடுவானா. தெய்வம் நின்று கொல்லுமே.''

''நான் அப்படி நினைக்கவில்லை. ஏதோ தவறு செய்து விட்டார்கள். அது நம் தலைவிதி. அதற்காக பதிலுக்கு அவர்களும் துன்பப்பட வேண்டும் என இன்று வரை நினைத்ததில்லை. நான் எவ்வளவு உதவியும் விதியின் கொடுமையிலிருந்து அவர்களால் மீள முடியவில்லை.''

இத்தனை பக்குவம் இக் காலத்தில் நாம் காணக் கூடியதா? இது நடைமுறையில் சாத்தியமாகுமா. இப்படித் தியாகியாய் வாழ்வதும் தேவைதானா?

''தேவைதான். முனைந்து யுத்தமிடுவதில் என்ன பலன். பின் அவர்களுக்கும், நமக்கும் வித்தியாசமிராது. வாழ்வில் சற்று சகிப்புத்தன்மை இருக்குமானால் வெற்றி நமக்குத்தான். என் குழந்தைகளின் வளர்ச்சி

நெற்றியிலிடும் ஸ்டிக்கர் பொட்டுகளில் இப் போது கல், முத்து வைத்துள்ளது. இதனைக் காதில் தோடுகளாகவும், மூக்கில் மூக்குத்திகளாகவும் பயன்படுத்தலாம். வித்தியாசம் தெரியாது. எனக்குத் தெரிந்த நடனம் ஆடும் பெண் மணி இதனை உபயோகப்படுத்தி இருந்தார். பக்கத்தில் சென்று பார்த்து, விசாரித்து அறிந்த பின்னரே உண்மை தெரிந்தது. நீங்களும் இது போல் உபயோகித்துப் பார்க்கலாமே? சிக்கனமாகவும், ரீ இன் ஒன்னாகவும் பயன்படும்.

– சண்பகலக்ஷ்மி

# உறவின் இன்பம்

# பரிவில்... பகிர்தலில்

நெருக்கத்தின் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளுங்கள். அன்பு செலுத்துவதின் சந்தோஷத்தைப் பகிர்ந்து கொள்ளுங்கள். உங்கள் குடும்பத்தைத் திட்டமிடும் பொறுப்பைப் பகிர்ந்து கொள்ளுங்கள். ஷேர் - இந்தியாவின் மிகமெல்லிய ஆணுறை தனிச்சிறப்பு வாய்ந்த ஸ்பெர்மிஸைடல் லூப்ரிகன்ட் NOX-9 (NON-OXYNOL 9) கொண்டது. பட்டவுடன் கருத் தரிக்கச் செய்யும் அணுக்களைச் செயலிழக்கச் செய்துவிடும் லூப்ரிகன்ட் அது எனவே கர்ப்பம் தரிப்பதிலிருந்து இரட்டைப் பாதுகாப்பு.




**ஷேர்** இருமடங்கு பாதுகாப்பளிக்கும் ஆணுறைகள்.

R.K.SWAMY/BBDO HLL S 10149 TAM

# சுவையான உணவு தயாரிக்க உங்களுக்கு புது துணை

# கிளாசிக் நல்லெண்ணெய்






**உ**ங்கள் சமையல் படைப்புகளுக்கு தனிச் சுவையூட்டுகிறது - கிளாசிக் நல்லெண்ணெய்.

தரம் பிரித்து, நன்றாக சுத்தமாக்கப்பட்ட எள்ளி-லிருந்து தயாராகிறது - கிளாசிக் நல்லெண்ணெய்.

கடுமையான தரக்கட்டுப் பாட்டினால், பொன்நிறம், நல்ல மணம்கொண்டுள்ளது கிளாசிக் நல்லெண்ணெய்.

75 ஆண்டுகள் - பாரம்-பரியமாக நல்லெண்ணெய் தயாரிப்பவர்களின் படைப்பு கிளாசிக் நல்லெண்ணெய்.

---

**2 கிலோ, 1 கிலோ மற்றும் 500 கிராம் பாலி ஜாரில் கிடைக்கிறது**

---



**அறுசுவை உணவிற்கு உறுதுணை கிளாசிக் நல்லெண்ணெய்.**

தயாரிப்பாளர்கள்: K. வேலாயுதம் செட்டியார் சன்ஸ் & கோ., கோவில்பட்டி.
விற்பனை பிரதிநிதிகள்: இந்தியா கம்பெனி (பி) லிட்., 156, கிரீம்ஸ் சாலை, சென்னை - 600 006.

Anugrah 878/92 Tam



எனக்கு மிகப் பெரிய வெற்றி அல்லவா. நான் அன்று மனம் உடைந்து தற்கொலை செய்து கொண்டிருந்தால் இவர்கள் கதி என்னவாயிருக்கும் நினைத்துப் பாருங்கள். இல்லை, விவாகரத்து வாங்கியிருந்தாலும் அன்றைய மக்கள் என்னை அவதூறாக அபிஷேகம் செய்திருப்பார்கள். ஆக, நான் பொறுத்தேன், நல்ல காலத்திற்காக பொறுத்தேன்.''

எத்தனை மனஉறுதி இந்த அம்மையாருக்கு. இத்தனை திறமையான இவர் தன் கணவரை மனநல நிபுணரிடம் காட்ட முற்பட்டிருக்கலாமோ.

''பல நேரங்களில் இவரின் செய்கை விநோதமாய் இருக்கும். பல நண்பர்கள் முன்னிலையில் என்னைத் திட்டுவார். பதில் கூறாமல் நான் மௌனமாய் இருப்பதால் அவர் நண்பர்கள் 'உன் மனைவி இப்படி அமைதியாய் இருப்பது அதிசயம் தான்' என்றனர். அதற்கு அவர் 'இல்லை அவளுக்கு இரண்டு காதும் டமாரச் செவிடு' என்பார். காலை நான்கு மணியிலிருந்து நானும் என் குழந்தைகளும் அவரைக் கால் பிடித்து எழுப்ப வேண்டும். ஆனால் பதினோரு மணிக்குத்தான் எழுந்திருப்பார். எங்கள் தவறினால் அலுவலகம் செல்லவில்லை என்பார். மாதம் இருபது நாட்கள் வீட்டிலேயே இருப்பார். சூடம் ஏற்றித் தன்னையே சுற்றிக் கொள்வார். ஒருமுறை மனநல நிபுணரிடம் இவரைக் கூட்டிச் செல்ல முற்பட்டேன். அதனை அறிந்த இவர் ஒரு மந்திரவாதியை அழைத்து வந்து என்னைப் பைத்தியம் எனக் கூறி வேப்பிலை அடிக்க வைத்து... அப்பப்பா எத்தனை கொடிய நாட்கள்.''

அம்மையாரின் கண்கள் கலங்க மற்றவர்களின் இதயம் கனத்தது.

இந்த கற்பக விருட்சத்தின் அருமையை இந்தக் கரையான் இன்னமும் உணரவில்லையே. இத்தனை ஈனப்பிறப்பாய் இருத்தல் ஆகுமா. கொடிய விலங்குகள் கூட பசிக்காக மற்ற உயிர்களைக் கொன்றாலும் ஒரே அடியில் உடனே அழிக்கும். ஆனால் சிவசங்கரைப் போன்றவர்கள் அடுத்தவரைச் சிறிது சிறிதாய் அரித்து அழிக்கும் கரையான்கள். இவருக்கு இன்னமும் இந்த அம்மையாரின் உதவிகள் தொடர்வது தேவைதானா?

''தேவைதான். சரளமாய்ப் பொய் கூறித் திரியும் இவரை யார் அருகில் சேர்ப்பார்கள்? மேலும் இனிமேல் இவரிடம் நான் பகை கொண்டு என்ன செய்ய? இவருக்கு இறைவன் அளித்திருக்கும் தண்டனையே போதாதா? மற்றவர் வீட்டைப் போல் குடும்பம், குழந்தைகள் என்று இவரால் இருக்க முடியவில்லையே. அன்பில்லாத வாழ்க்கையும் ஒரு வாழ்க்கையா? ஆகவே நான் சற்றுத் தள்ளி இருந்து அவருக்குத் தேவையானவற்றைச் செய்கின்றேன். இது என் மன நிம்மதிக்காக, என் மனதிற்குச் சரியெனப் பட்டதைச் செய்கிறேன்.''

தெளிந்த நீராய் பேசினார். பொறுமையால் நம்மை பிரமிக்கச் செய்தார். வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம் என தன் வாழ்க்கையால் நிரூபிக்கிறார். இது சோதனையில் சாதனைதான். தோல்விக்குள் கண்ட வெற்றிதான். துன்பத்துள் கண்ட இன்பம்தான். அனைத்தையும் ஒத்துக் கொள்கிறோம். ஆனால் சிவசங்கர் போன்ற இன்னும் எத்தனை கரையான்கள் யாரை அரித்துக் கொண்டிருக்கின்றதோ நமக்குத் தெரியவில்லை. தீயவைகள் நல்லவையாக மாற அளிக்கப்படும் சந்தர்ப்பங்களில் மாறாவிடில் அவை மாற்றப்பட வேண்டும். அல்லது ஒதுக்கப்பட வேண்டும்.

– டாக்டர். கமலி ஸ்ரீபால்



25 புள்ளி, 12 வரிசை.

– சுமதி ஜீவநாதன், கோவை - 33.

**ப**ஸ் ஸ்டாண்டிலிருந்து அரைமணி நேர நடைதான். கையிலும் அதிக கனமில்லாத ஒரு ஸுட்கேஸ் மட்டுமே. பாதை மேடும் பள்ளமுமாக இருந்தாலும் அலுப்புத் தட்டவில்லை.

நடக்க நடக்க, தன் மனத்திலிருந்த கவலைகளும் கோபதாபங்களும் கழன்று விழுந்து காணாமற் போவதாக நினைத்தாள் பவானி. அத்தையின் வீட்டை அடைந்த போதோ இதயம் பரிபூரண அமைதி பெற்றிருந்தது..

தோட்டத்தின் சிறிய மரக்கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்த போது ஒரு நறுமணம் குப்பென்று நாசியில் புகுந்து கண நேரம் கிறங்க வைத்தது.... பாரிஜாத மரம் பூத்துக் குலுங்கித் தரையெல்லாம் ஆரஞ்சும் வெள்ளையுமாகப் பூக்கோலம் தெளித்திருந்தது.

வாசல் கதவு மூடியிருந்தது. அப்படியானால் அத்தை பின் பக்கம் கறிகாய்த் தோட்டத்தில் வேலையாயிருக்கிறாள் என்று அர்த்தம்... இல்லையென்றால் மர நிழலில் அமர்ந்து புத்தகம் படித்துக் கொண்டிருப்பாள்.....

பவானி பின் பக்கம் சென்றாள்.... தக்காளிச் செடிகளைச் சுற்றியிருந்த மண்ணைக் கொத்தி விட்டுக் கொண்டிருந்த அத்தை காலடிச் சத்தம் கேட்டு நிமிர்ந்து பார்த்தாள்.... ''பவானியா! வா வா!'' என்றாள், அதரங்களில் புன்னகை தவழ....

இதற்குமுன் எத்தனையோ முறைகள் வியந்தது போல் இப்போதும் வியந்தாள் பவானி... சாதாரண முகமும் மாநிறமும் வெள்ளை முடியுமான முதியவள் அத்தை. ஆனால் இவளுடைய முறுவலுக்கு மட்டும் இதென்ன சக்தி, மனதை வருடினாற் போன்ற கதகதப்பான அமைதியை அளிக்கிறதே!

''அத்தை! ஆபீஸில் ஒருவார லீவு வாங்கிக் கொண்டு வந்திருக்கேன்!'' என்றாள் பவானி.

''என்ன விசேஷம்?''

''ஒரு மாறுதலுக்காக... அங்கே அலுத்துப் போச்சு!''



''எது? ஆபீஸா? வீடா?''

''ஆபீஸ் இல்லை... வீடுதான். கொஞ்ச நாள் விடுதலை வேண்டும்!''

''யாரிடமிருந்து?''

''அப்பா அம்மாவிடமிருந்து....''

''என்ன பவானி இது! உன் அப்பா உனக்குக் கல்யாணம் நிச்சயம் பண்றார்னு கேள்விப்பட்டேனே!''

''கரெக்ட்... அதனால் தான் நான் இங்கே வந்திருக்கேன்..''

''ஏன்? கல்யாணம் வேண்டாமா?''

''வேண்டாம்!''

''நீ இங்கே வந்திருக்கிறது உன் அப்பா அம்மாவுக்குத் தெரியுமா?''

''துண்டுக் கடிதம் எழுதி வச்சிருக்கேன்.... நீங்களே பாருங்களேன். ஒரு ரெண்டு நாள். மிஞ்சி மிஞ்சிப் போனால் மூணு. இரண்டு பேரும் இங்கே வந்து நிற்பார்கள், எனக்குப் புத்திமதி சொல்ல.''

''நீ முதலில் உள்ளே வா... ஜில் லுன்னு மோர் தரேன்... நடந்து வந்த களைப்புத் தீரும்!''

''சரி அத்தை!''

கிணற்றடியில் கைகால்களைக் கழுவிக் கொண்டு பவானி அத்தையைப் பின் தொடர்ந்தாள். அத்தையின் பூஜையறையைத் தாண்டிச் சமையலறை பக்கம் நடந்த போது அவளுக்கு ஒரு சம்பாஷணை ஞாபகம் வந்தது.

''உங்கள் பூஜையறையில் சுவாமிப் படங்களுக்கு நடுவில் ஒரு புகைப்படம் இருக்கே, அது யாருடையது, அத்தை?''

''தெரியாதா பவானி? என் கணவருடையதுதான்!''

''அதை நீங்கள் பூஜிக்கணுமா?''

''அப்படித்தான் என் அப்பா அம்மா ஆசைப்பட்டார்கள். என் கணவருடைய ஞாபகார்த்தமாய் இது எப்போதும் பூஜையறையில் இருந்தால் என் மனசு சஞ்சலப்படாது, தனி வாழ்க்கை கஷ்டம் தராதுன்னு சொன்னார்கள்.''

''நிஜமாகவா?''

போட்டோவில் இருக்கிற பையனைப் பார்த்த பவானி, 'என்ன லட்சணம், மனசைக் கவருகிற மாதிரி என்ன ஒரு







நேர்ப்பார்வை! எத்தனை தடவை பார்த்தாலும் அலுக்கவே அலுக்காத முகம் இது.' என்று நினைத்துக் கொண்டாள்.

''சின்னப் பையன் மாதிரி இருக்கே?''

''இதில் இருக்கிறது பதினாறு வயசுப் பையன். ஆனால் என் கணவர் சாகும் போது அவருக்கு இருபது வயசு!''

இந்தச் சம்பாஷணையை நினைவு கூர்ந்த பவானி சற்றே குற்ற உணர்வோடு கலங்கினாள். இதோ, தன் மனத்துப் பாரங்களை இறக்க அவள் இங்கு வந்து விட்டாள். ஏனென்றால் இது அத்தையின் வீடு, அமைதியின் இருப்பிடம், உற்றார் உறவினர் யார் வேண்டுமானாலும் இங்கு வரலாம்; தங்கி, இளைப்பாறி, உடலும் உள்ளமும் புத்துயிர் பெற்றபின், விடை பெறலாம்.... அத்தையின் அன்பு எல்லோரையும் வரவேற்கும். அன்பைத் தவிர எதையுமே தரத் தெரியாதவள் அத்தை... அத்




தையா? இல்லை. நிஜத்தில் பவானிக்கு அவள் அத்தைப் பாட்டி. பவானியின் தந்தையின் அத்தை... ஆனால் எல்லோருமே அவளை அத்தை என்றுதான் அழைத்தார்கள். பவானியின் தந்தைக்கு அவள் ஒரே குழந்தை. அதனால் பவானிக்கு அத்தையிடம் சலுகையும் நெருக்கமும் அதிகம்.

அப்படியிருந்தும், இப்படித்தான் திடீரென்று அத்தையின் வீட்டுக்கு வந்து நிற்பது பவானியைச் சங்கடப்படுத்தியது... யாரிடம் தனக்கு நியாயம் கிடைக்கும், திருமணம் செய்து கொள்ளத்தான் விரும்பவில்லை என்பதை யார் வக்கிரமான கோணம் அர்த்தத்தில் பார்க்காமல் சுலபமாகப் புரிந்து கொள்வாள் என்று அவளுடைய உள் மனம் தீர்மானமாக நம்பியதோ, அந்த அத்தை பதினாறு வயதில் கணவனை இழந்து, வாழ்நாளெல்லாம் துறவறம் அனுஷ்டித்து, இன்னும் கணவனின் புகைப்படத்தைப் பூஜையறையில் வைத்து வணங்குகிறாள் என்பது எத்தகைய முரண்பாடு!

அடுத்த இரண்டு நாட்கள் நிம்மதியாகக் கழிந்தன. சமையலறையில் அத்தைக்குக் கூடமாட சிறு உதவிகள்... பாத்திரங்களை, வீட்டை, துணிகளை, சுத்தப்படுத்துவதில் முழு பொறுப்பு.. ஓய்வான நேரங்களில் தன் அலுவலக நண்பர்களைப் பற்றிச் சின்னஞ்சிறு விஷமமில்லாத கதைகள்... இவற்றைப் பவானி கூற, அத்தையின் கிழ முகம் தாமரையென மலர, இருவரும் வாய் விட்டுச் சிரித்தபோது இந்த நாட்கள், இந்த இதம், இரு மனங்களுக்கிடையே இந்தப் பாலம், முடிவின்றி நீடித்துக் கொண்டே போகலாகாதா என்று ஏங்கினாள் பவானி.

மூன்றாம் நாள் அவளுடைய பெற்றோர்கள் வந்தார்கள்.

''உன் துண்டுக் கடிதத்தைப் பார்த்தோம்!'' என்றாள் அம்மா.

''பார்க்கணும்னுதான் எழுதி வெச்சேன்!''

''உன் பேச்சில் திமிர் சொட்டறது.. இப்படிச் சொல்லாமல் கொள்ளாமல் ஓடிவர வெட்கமாயில்லை?''

''இல்லை. இங்கே வராதிருந்தால் பைத்தியம் பிடிச்சிருக்கும்.''

''நீ வந்த காரணம் அத்தைக்குத் தெரியுமா?''

''கல்யாணம் பண்ணிக்க இஷ்டமில்லைன்னு சொன்னேன். அதற்குமேல் அத்தை துருவித் துருவிக் கேட்கலை... முக்கியமாக, ''உனக்கு எவன் மீதாவது காதலான்னு'' கேட்கலை....''

''அது நியாயமான கேள்வி.''

''எப்படி?''

''இதோ பார் பவானி.... உனக்கு இருபத்து மூணு வயசாகிறது. நல்ல அழகு, நல்ல படிப்பு, நல்ல உத்தியோகம்... உன் வயதில் பெண்கள் கல்யாணம் பண்ணிக்க ஆசைப்படறதுதான் உலக நியதி. நீயோ, நாங்கள் பார்த்த பையனும் வேண்டாம், உனக்கு யார் மீதும் காதலும் இல்லை என்கிறாய்... இதற்கு என்ன அர்த்தம்?''

''அதுதான் அர்த்தம்... எனக்கு இப்போது கல்யாணம் வேண்டாம்...''

''ஏன்?''

''கல்யாணம் என்கிற பந்தத்துக்கு நான் தயாராக இல்லை.''



"இருபத்து மூணு வயசிலா?"

"ஆமாம்..."

"இதை நாங்கள் நம்பணுமா பவானி? சினிமாவில், டீ.வியில், பத்திரிகைகளில் - எங்கே பார், ஆண் பெண் ஆகர்ஷணம்தான் சப்ஜெக்ட்.... இந்தச் சூழ்நிலையில் நீ கல்யாணத்துக்குத் தயாராயில்லை என்றால், உனக்கு ஏதோ குறையோ ஊனமோ இருக்குதுன்னுதான் உலகம் நினைக்கும்."

"எனக்குக் குறையோ ஊனமோ கிடையாதுன்னு உனக்குத் தெரியாதா, அம்மா?"

"பின்னே, உனக்கு ஏன் ஆட்சேபணை?"

"நீ எத்தனை தடவை கேட்டாலும் என் பதில் அதுதான். கல்யாணம் என்கிற பந்தத்துக்கு நான் தயாராக இல்லை."

"திரும்பத் திரும்ப அதையே சொன்னால் எப்படி?"

இத்தனை நேரம் இந்தச் சூடான வாக்குவாதத்தை மௌனமாகவே கேட்டுக் கொண்டிருந்த அத்தை, மிருதுவாக, தனக்கே உரிய மென்மையோடு, "இப்போதைக்கு இது போதும்.... இரவுச் சாப்பாடானதும் பேசலாம்... பிரயாணக் களைப்பும் கோபமும் எரிச்சலும் இல்லாமல் பேசலாம்!" என்றாள்.

அன்று மாலைக்குள் பவானியின் பெற்றோர் தீர்மானித்தார்கள் - பவானியின் பிடிவாதத்தைத் தகர்த்தெறிய வேண்டுமென்றால் அத்தையின் உதவியை நாட வேண்டும்... பதினாறு வயதில் மணமாகி, பதினெட்டு வயதில் கணவனை இழந்து பிறந்த வீட்டில் இரண்டு அண்ணன்கள் ஒரு தம்பி, அவர்களின் துணைவியர்கள், குழந்தைகள் என்ற கூட்டுக் குடும்பத்தில் பல வருடங்களைக் கழித்தவள் என்னென்ன மாதிரியெல்லாம் வதைபட்டாளோ? அதையெல்லாம் கேட்டாலாவது பவானியின் மனம் மாறாதா?

இரவுச் சாப்பாடானதும் அத்தை, "வீட்டுக்குள்ளே ஒரே இறுக்கம்... பின் வராந்தாவில் உட்காரலாமா? தரை ஜில்லென்று இருக்கும்!" என்றாள்.

"சரி அத்தை!"

நால்வரும் வராந்தாவுக்குச் சென்றனர். அத்தை சுவரில் சாய்ந்து கால்களைச் சௌகரியமாக நீட்டிக் கொண்டாள். பவானி அத்தைக்கு மிக மிக அருகே அமர்ந்து கொண்டாள், அந்த அருகாமையே பலம் என்பது போல்... எதிரே, அவர்களைப் பார்த்துக் கொண்டு, பவானியின் பெற்றோர்கள்.

பவானியின் தந்தைதான் முதலில் பேசினார். "அத்தை எனக்கு இப்போது உங்கள் உதவி வேணும்.... உங்கள் வாழ்க்கையைப் பற்றி நீங்கள் சொல்லணும்... விரிவாக, ஒளிவு மறைவு இல்லாமல், பவானியின் மனதில் பதியற மாதிரி சொல்லணும். இப்படி நான் கேட்பது உங்களைச் சித்திரவதை படுத்தறதாக நீங்கள் நினைச்சால், அதற்காக என்னை மன்னியுங்கள் அத்தை!"

"என் வாழ்க்கையைப் பற்றிச் சொல்றதிலே சித்திரவதை எதுவுமில்லை... பெரிய பெரிய வார்த்தையெல்லாம் உபயோகிக்காதே... ஆனால் நான் சொல்லப் போறது உனக்கு ஏமாற்றமாய் இருக்கலாம்.... அதைத் தாங்கற பக்குவம் உனக்கு இருக்கோ இல்லையோ?"

"நீங்கள் சொல்றது எதையும் என்னால் தாங்கிக்க முடியும், அத்தை."

"சரி, கேள்!" அத்தை பேசலானாள்.

"அந்த நாளில் பெண் குழந்தைகளைப் பள்ளிக்கூடம் அனுப்பறதே துர்லபம். ஆனால் என் தகப்பனார் என்னை அனுப்பினார். அவருக்கு நான் ஒரே பெண்.... மற்ற மூவரும் பையன்கள். அதனால் நான் அப்பா செல்லம். நான் ஸ்கூலில் வகுப்பில் முதலாவதாக வருவேன். மனசெல்லாம் சந்தோஷம் நிறையும். விதம்விதமாக நான் பகல்கனவு காண்பேன். நிறைய படிக்கணும்... பெரிய விஞ்ஞானியாகவோ, டாக்டராகவோ, ப்ரொபஸராகவோ ஆகணும்.... இதில் எது வேணும்னு என்னை அப்போது கேட்டிருந்தால், எனக்கு நிச்சயமாகப் பதில் சொல்லத் தெரிந்திருக்காது. ஆனால் நான் ஆசைப்படாத ஒன்றும் இருந்தது. அதுதான் கல்யாணம்.

சென்ற இதழில் சரோஜா ரங்கநாதன் எழுதிய கதையில் சீடை வெடிக்கும் மர்மம் இன்றுவரை புரியாத புதிராக இருப்பதாக எழுதியிருக்கிறார். சீடை வெடிப்பதில் மர்மமோ புதிரோ ஒன்றும் இல்லை. "சீடை உருட்டியதும் சுத்தமான புதிய துருப்பிடிக்காத ஒரு குண்டூசியால் ஒவ்வொரு சீடையிலும் குத்தி விட்டபின் காய்ந்த எண்ணெயில் போட்டால் வெடிக்கவே வெடிக்காது. உள்ளுக்குள் நன்றாக வேகவும் செய்யும்." இது எனக்கு என் அத்தை சொல்லித் தந்து நான் பல தடவை சீடை செய்த அனுபவமாகும்.

- கோமதி





ஆனால் வீட்டில் எல்லோருக்கும் அந்தக் கவலைதான். எனக்கோ வயது பதின்மூன்றைக் கடந்து விட்டது. இன்னும் கல்யாணம் நிச்சயமாகலை... கடைசியில் அவர்களுடைய கவலை தீர்ந்தது. நல்ல பையனாகக் கிடைத்து விட்டான். ''கல்யாணம் வேண்டாம்''னு நான் சொன்னதை யாரும் காது கொண்டு கேட்கக் கூட இல்லை. பதினாறு வயதில் எனக்கு மணமுடித்தார்கள். பையனுக்குப் பதினெட்டு வயது. கல்லூரி மாணவன்.... பையன் கல்லூரிப் படிப்பை முடிச்சதும் நான் புகுந்த வீடு போவதாக முடிவாயிற்று.

அதன் படியே, இரண்டு வருஷங்களுக்குப் பின் ஒரு சுபதினத்தில் என்னைக் கணவன் வீட்டுக்கு அழைத்துப் போனார்கள். மாப்பிள்ளைக்கு அப்போது ஏக ஜுரம். இரண்டு நாட்களில் வடிஞ்சுடும்னு என்னை அங்கே விட்டு விட்டு என் பெற்றோர்கள் திரும்பி வந்தார்கள். இரண்டு நாட்களில் ஜுரம் வடியலை. ஜன்னியாக மாறி உயிரை எடுத்துக் கொண்டுதான் விட்டது.

என் கணவரின் நினைவாக அவருடைய புகைப்படத்தைக் கேட்டு வாங்கிக் கொண்டார் என் அப்பா. என்னைப் பிறந்த வீட்டுக்குக் கூட்டி வந்தார். வீட்டிலுள்ள மற்றவர்களிடம் ''இவளை யாராவது ஏதாவது சொன்னீர்கள், தொலைச்சுடுவேன்!'' என்றார். ''இந்தப் போட்டோவை தினமும் பூஜித்து வா. உனக்குக் கஷ்டமே தெரியாது''ன்னு என்னிடம் சொன்னார்..

ஒரு நாள் அவருடைய அன்பும் பக்க பலமும் பரிபூரணமாக இருந்த தைரியத்தில் நான் அவரிடம் சொன்னேன். ''அப்பா.... நான் மறுபடியும் ஸ்கூலுக்குப் போகட்டுமா? படிக்கட்டுமா?'' நான் ஆவலோடு கேட்ட கேள்விக்கு அவர் எரிமலையாய் வெடித்தார். ''உனக்கென்ன, ஊரும் உலகமும் என்னைப் பார்த்துக் காறித் துப்பணும்னு ஆசையா? நாலு பேர் கண்ணில் படற மாதிரி நீ ஸ்கூலுக்குப் போனால், உன்னைப் பத்தி நாக்கு போன போக்கில் பேசமாட்டார்களா? நான் அவமானத்தில் நாக்கைப் பிடுங்கிக் கொண்டு சாகணுமா?'' அதற்குமேல் நான் எதுவும் சொல்லவில்லை... புத்தகங்களைப் பார்த்தால் அழுகை அழுகையாக வரும். வாழ்க்கையே அர்த்தமில்லாததாய்த் தோன்றும்.

கடைசியில் அப்பாவே என்னிடம், ''நீ ஏனம்மா பெண்ணாய்ப் பிறந்தாய்? ஒரு நாள் கூட நகை புடைவைன்னு ஆசைப் பட்டதில்லை. அது பறிபோன போது ஒடிந்த போகவும் இல்லை. படிப்பு படிப்புன்னு ஆசைப்படலாமா? இது கை கூடற ஆசையா? ஆனால் கூடிய மட்டும் நானே உனக்குப் படிப்புச் சொல்லித் தரேன். வீடுதான் உன் ஸ்கூல். நான்தான் உன் மாஸ்டர் என்ன?'' என்றார்.

நான் அவரிடம் பாடம் கற்க ஆரம்பிச்சேன். நான் கேட்கக் கேட்க அலுக்காமல் சலிக்காமல் புத்தகம் வாங்கித் தந்தார். பொறுமையாக என் கேள்விகளுக்குப் பதில் தந்தார்.

இதற்கிடையில் என் சகோதரர்களுக்குக் கல்யாணமாகிக் குழந்தைகளும் பிறந்தார்கள். அந்தக் கூட்டுக் குடும்பத்தில்தான் நான் இருந்தேன். ஆனால் சித்திரவதை அனுபவிச்சதே இல்லை. அவர்கள் வாழ்க்கை முறையை நான் விரும்பினதும் இல்லை. அதற்காக ஏங்கினதும் இல்லை. ஒரு விதத்தில் அப்பா எனக்குக் கவசமாக இருந்தார். கடைசியில், தான் இறக்குமுன், மற்றொரு உபகாரத்தையும் செய்து விட்டுத் தான் போனார் அப்பா. என் பெயரில் நிலம் வாங்கி, இந்த வீட்டைக் கட்டி, வங்கியில் என் பெயரில் பணமும் போட்டு வைத்தார். ''நீ உன் வாழ்நாளெல்லாம் பிறர் கையை எதிர்பாராமல் வாழலாம்மா..... உன்னை ஸ்கூலுக்கும் காலேஜுக்கும் அனுப்பற தைரியம் இல்லாததற்கு இதுவாவது நான் செய்ய வேண்டாமா?'' என்றார்.

இப்போது நான் கௌரவமாக என் காலத்தை ஓட்டறேன். நான் யாரிடமும்

சக்தி வழிபாட்டின் உன்னதம் நவராத்திரியில்தான். நவராத்திரி விழாவுக்கு இரு ரூபங்கள் உண்டு. 1. ஒன்பது வெவ் வேறு வடிவங்களில் தேவி அருள் பாலிக்கும் தந்த்ர ரூபம்; தேவி ஒன்பது நாட்களும் பூஜையறையில் குடி கொண்டிருப்பதாகவும் அவளைத் தனியே விட்டு எங்கும் போவதற்கில்லை என்றும் மூத்த பெண்டிர் சொல்வார்கள். 2. பிரபஞ்சத்தையே பிரதிபலிக்கும் சக்தியைப் புல், பூண்டு முதல், விலங்கினம், மனித சமூகம், தெய்வங்கள் ஈறாகப் படிப்படியான பரிணாம வளர்ச்சியோடு காட்டுகிற படிகளமைந்த பொம்மைக் கொலு என்கிற ஸ்தூல ரூபம். (தேவிக் கான தந்திர ரூபத்துக்குச் சில அனுஷ்டானங்களையும் (சகஸ்ரநாமம் அஷ்டோத்திரம் சொல்லிப் பூஜித்தல்) ஸ்தூல ரூபத்துக்குச் சில கொண்டாட்டங்களையும் (கொலு) செய்ய வேண்டியது நம் தர்மம்.

- மாலதி.



எதையும் எதிர்பார்க்கலை. என் மனசில் குறையோ, குற்றமோ இல்லை.

ஒரே ஒரு அநியாயத்துக்குத் தான் நான் கண்ணீர் சிந்தறேன். நம் சமூகத்தைப் பாருங்கள்... இங்கே ஓர் ஆண்மகன் இஷ்டப்பட்டால் பிரம்மச்சர்யம் அனுஷ்டிக்கலாம். உலகம் அதை ஏற்கும். அவனை மகான்னு போற்றிப் புகழக் கூடச் செய்யும். ஆனால் பெண்கள் எல்லோரும் ஒரே வார்ப்படத்தில் தான் அடங்கியாகணும்.... இஷ்டம் இருக்கோ இல்லையோ, அவள் திருமணம் செய்துண்டே தீரணும்.... இல்லாவிட்டால் அவமானம். யாருக்கு? அவளுக்கு, அவள் பெற்றோருக்கு.... இங்கே துறவு வாழ்க்கை வாழற பெண்கள் யார் தெரியுமா? விதவைகள்தான். என்ன கொடுமை இது! மண வாழ்க்கையை விரும்பற பெண் விதவையானால் அவள்மேல் துறவறம் திணிக்கப் படறது. மண வாழ்க்கையை விரும்பாத பெண் துறவியாவது இதை விடக் கூட கொடுமை... இதற்கு ஒரு உயிர் பலி வேண்டும். முதலில் அவள் ஒருவனை மணக்கணும், பின் அவனைச் சாகக் கொடுக்கணும். என்ன ஒரு நிலைமை பாருங்கள்!

உங்களுக்கெல்லாம் தெரியும், என் பூஜையறையில் ஒரு புகைப்படம் இருக்கிற விஷயம். அதில் ஒரு பதினாறு வயசுப் பையன். சுந்தர வதனம், பால் வடியும் முகம்... இவன் தன் உயிரைத் தந்த பிறகு தான் என் துறவு வாழ்க்கை சம்பவித்தது. எத்தகைய கொடூரம் இது! நான் மணமே செய்து கொள்ளாதிருந்தால் எனக்குத் துறவு வாழ்க்கையும் சம்பவித்திருக்கும். இந்தப் பாலகனும் ஒருவேளை உயிர் துறந்திருக்க வேண்டாம். இ ப் ப டி நினைக்கும் போதெல்லாம் நான் துயரம் தாங்காமல் அழுகிறேன்.''

அத்தையின் குரல் தேய்ந்தது. காற்றில் இப்போது சட்டென்று ஒரு குளுமை. மரக் கிளைகளிலும் இலைகளிலும் ஒரு நவீனமான ஆட்டம். பின் இங்கொன்றும் அங்கொன்றுமாக, மழைத்துளிகள் தெறிக்கலாயின.

பவானியின் தாய் இப்போது பேசினாள். ''அத்தை, பெண்களின் துறவு வாழ்க்கையைப் பத்தி நீங்கள் சொன்னது உங்கள் காலத்துக்குப் பொருந்துமே தவிர, இப்போது காலம் மாறிப் போகலியா? பெண்கள் கல்வி கற்கலியா? வேலைக்குப் போகலியா? விதவைகள் மறுமணம் செய்துக்கறதில்லையா?''

''நிஜம்தான்.. ஆனால் நம் கண்ணோட்டம் மாறலியே?''

''புரியும்படி சொல்லுங்கள், அத்தை!''

''பவானி விஷயத்தையே எடுத்துக்கலாம். அவள் கல்யாணம் வேண்டாம் என்கிறாள்.... உடனே உங்களுக்கு, ''எவனோடாவது காதலா?''ன்னு சந்தேகம் வரது. அதைக்கூட உங்கள் உள்மனம் ஏற்கத் தயாராயிருக்கு. ஆனால் அதுவும் இல்லைன்னு பவானி சொன்ன உடனே, ''அது அப்நார்மல்'' என்கிற முடிவுக்குத் தானே வருகிறீர்கள்? இந்த வயசில் ஒரு பெண் மண வாழ்க்கையை விரும்பியே தீரணும் என்கிற வார்ப்படத்துக்குள் அவள் பொருந்தாவிட்டால் உங்களுக்குச் சங்கடமாகத்தானே இருக்கு?''

''அவளுடைய நல்லதுக்குத்தானே சொல்றோம்?''

''ஆமாம்.... ஆனால் மனத்து ஆசைகள் வளருகிற வேகம் பெண்ணுக்குப் பெண் மாறுபடும். இதை நாம் முதலில் புரிந்துக்கணும்....''

''ஆனால் அவள் நடந்து கொள்கிற விதத்தைப் பார்த்தால் அவள் தனக்குத் தானே குழம்பிப் போயிருப்பது போல் இல்லையா?''

''நிஜம்தான்.... பவானி குழம்பித்தான் போயிருக்கிறாள். தனக்கு எந்த மாதிரியான வாழ்க்கை வேணும்னு அவளாலேயே இப்போது சொல்ல முடியலை.... தனக்கு இப்போது கல்யாணம் வேண்டாம்னு மட்டும் தான் அவளுக்குத் தெளிவாய்ப் புரியறது!''

''அப்படியானால் எங்களை என்ன பண்ணச் சொல்கிறீர்கள்? பெண்ணுக்கு வயசாகிற நினைப்பே பெத்தவர்களுக்கு இல்லை, அவள் சம்பாதிக்கிற பணம்

பிறரைப் பற்றி அவதூறாகப்
பேசுவது எள்ளி நகையாடுவது
மற்றோரைப் பற்றி
இல்லாததையும்
பொல்லாததையும் பேசுவது,
இவற்றை விட்டு விடுங்கள்.
பிறர் மனதை நோகடிப்பதை
விட பெரிய பாவம்
வேறொன்றுமில்லை.

- ஸ்ரீ சத்ய சாயிபாபா



மட்டும் வேணும்''னு நாலு பேர் பேசறதைக் கேட்டுப் பொறுத்துக்கச் சொல்கிறீர்களா?''

அத்தை சிரித்தாள். ''ஓ! அந்தப் பிரச்னையா உங்களுக்கு? அதை விட்டுத் தள்ளுங்கள். இப்போது கல்யாணம் வேண்டாம்னுதான் பவானி சொல்கிறாளே தவிர கல்யாணமே வேண்டாம்னு சொல்லலையே?''

''போகப் போக அப்படிச் சொல்ல மாட்டாள்னு என்ன நிச்சயம்?''

''தெய்வமே! ஏன் இப்படியெல்லாம் குதர்க்கமாக நினைக்கிறீர்கள்? கல்யாணமே வேண்டாம்னு அவள் சொன்னால், அப்போது அதைப் பத்தி யோசியுங்கள். இப்போதைக்கு நீங்கள் செய்ய வேண்டியது ஒன்றுதான்.''

''என்ன?''

''அவளை நம்புங்கள்.. அவளிடம் உங்களுக்கு அன்பு இருந்தால் மட்டும் போதாது. அன்பு காட்டுவதை விட நம்பிக்கை வைப்பது கஷ்டம், சிறப்பு.... உங்களுக்குத் தலைகுனிவு ஏற்படும்படி எதையும் உங்கள் மகள் செய்ய மாட்டாள்னு நம்புங்கள்.....''

''அப்படியானால், உங்கள் அட்வைஸ் என்ன, அத்தை?

''வற்புறுத்தி அவளுக்கு மணமுடிக்காதீர்கள்... தன்னைத்தானே புரிந்து கொள்ள அவளுக்கு அவகாசம் தேவை. அதைவிட முக்கியமாக, உங்கள் இருவரின் அன்பும், நம்பிக்கையும் உறுதுணையும் தேவை....''

இத்தனை நேரம் மௌனமாகவே அமர்ந்திருந்த பவானி படுத்துக் கொண்டாள்.... அத்தையின் மடியில் தலை வைத்துச் சுருண்டு கொண்டு, கண்களை மூடிக்கொண்டாள்.

மழை இப்போது ஒரே சீராகப் பெய்து கொண்டிருந்தது.

மனக்குழப்பம் நீங்கிய நிம்மதியில், இயற்கையின் அழகை ரசித்தார் பவானியின் தந்தை... ''மழையே அழகுதான்!'' என்றார்.

''தாகத்தோடு ஏங்கற பூமிக்கு அமிர்தம்!'' என்றாள் அவள்தாய்....

''ஆண்டவனின் பரம கருணை!'' என்றாள் அத்தை. ''பின், அநேகமாக நீங்கள் நாளைக் காலை புறப்படுவீர்கள் இல்லையா? தோட்டத்து வாழைப்பழம் தரேன்..... இந்த வருஷம் பழம் கல்கண்டாய்த் தித்திக்கிறது!'' என்றாள்.

''பவானிக்கு மிகவும் பிடிக்கும்... இல்லையா பவானி?''

பவானியோ அத்தையின் மடியில் தலை வைத்துச் சிறு குழந்தை போல் தூங்கிப் போயிருந்தாள்.

---

**(ஸ்ரீரங்கத்தில் 16.8.92 அன்று இறைவனடி சேர்ந்த அஹோபிலமடம் ஜீயரிடம் நேரில் கண்ட அனுபம்.)**

சுமார் ஏழு வருடங்களுக்கு முன்பு ஸ்ரீரங்கம் ராஜகோபுரக் கட்டுமானப் பணியை மேற்பார்வையிட ஜீயர் வந்தார். கோபுரத்தின் நுழைவாயிலில் ஆறடி ஆழமும், இரண்டடி அகலமும் உள்ள பள்ளத்தைச் 'சட்'டென்று தாண்டி விட்டார்.

90 வயதைக் கடந்த ஜீயர், கீழே விழுந்து விட்டால் என்ன செய்வதென்று பதறியபடி ஓடி வந்தவர்களைப் பார்த்து சுவாமிகள்,

"இரண்டடி பள்ளம் தாண்டிய என்னைப் பற்றிக் கவலைப்படாதீர்கள். இரு நூறு அடிக்கு மேலே கோபுர வேலை செய்யும் தொழிலாளர்களின் உயிர்தான் என்னைவிடப் பெரிது. அவர்களின் நலனுக்குப் பிரார்த்தனை செய்யுங்கள்'' என்றார்.

"அப்படி எனக்கு ஏதாவது ஆனால் கோபுர வேலை நின்றுவிடும் எனப் பயப்பட வேண்டாம். ஸ்ரீரங்கநாதர் அருளால் கட்டடத் தொழிலாளத் தோழர்களே கோபுரத்தைப் பூர்த்தி செய்து விடுவார்கள்'' எனக் கூறினார்.

ஒரு மஹாராஜாவினால் முடிக்கப்பட வேண்டிய ராஜகோபுரத் திருப்பணியை 90 வயது கடந்த மகான் முன்னின்று நடத்தியது பிரமிக்கத்தக்கது.

- என். சாந்தா